உ
சிவமயம்

மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞானபோதம்

(உரையுடன்)



பதிப்பாசிரியர்:
திருமுருக கிருபானந்தவாரி அவர்கள்

நெல்லை
அப்பர் அருட்பணிக் கழக வெளியீடு

திருப்புகழமிர்தம்,
சென்னை-2.

1956

1. கடவுளின் பொது இலக்கணம் பதி

2 + 6 " சிறப்பு "

3. ஆன்மாவின் உண்மை – பசு

4 பசுவின் பொது இலக்கணம் –

7 " சிறப்பு

2 பாச உண்மை

4 " பொது இலக்கணம்

5 " சிறப்பு "

8 ஞானத்தை உணரும் முறை

9. ஆத்மசுத்தி

10. பாச நீக்கம்

11. சிவப்பேறு

12. அணைந்தோர் தன்மை.

உ
சிவமயம்

மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞானபோதம்

(உரையுடன்)

பதிப்பாசிரியர்:
திருமுருக கிருபானந்தவாரி அவர்கள்

நெல்லை
அப்பர் அருட்பணிக் கழக வெளியீடு

திருப்புகழமிர்தம்,
சென்னை-2.

1956

உ

சிவமயம்

# முன்னுரை

—:—

அகில உலகங்களில் உள்ள பொருள்கள் அனைத்தும் மூன்று பகுதிக்குள் அடங்கிவிடும்.

(1) தானே அறிகின்ற பொருள் "பதி"

(2) அறிவிக்க அறிகின்ற பொருள் "பசு"

(3) அறிவித்தாலும் அறியாத பொருள் "பாசம்"

இம் முப்பொருள்களைப் பற்றி அறிவது அறிஞர்களுடைய தலையாய கடமை. பாசத்தை நீக்கிப் பசு, பரமபதியை அடைந்திடவேண்டும்.

**சான்றவ ராய்ந்திடத் தக்கவாம் பொருள்**
**மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன**
**ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை**
**வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே.**

**—கந்தபுராணம்.**

இனி சுருங்கக் கூறி விளங்கவைத்தல் தனிச் சிறப்புடைய அழகு ஆகும். பொது நூல்களில் சுருங்கிய சொற்களில் விரிந்த பொருள்களை விளக்குவது திருக்குறள்.

சிறப்பு நூல்களில் சுருங்கிய சொற்களால் எல்லாக் கருத்துக்களையும் விளக்கும் உண்மை நூல் சிவஞான போதம் ஆகும்.

சூத்திரம் **12**
வரி **40**
சொற்கள் **216**
எழுத்துக்கள் **624**

வாசிக்கவும் நேசிக்கவும் பூசிக்கவும் தகுதியுள்ள ஞானநூல். இதற்கு நிகரான நூல் முன்னுமில்லை; பின்னுமில்லை. இமயமலையினும் உயர்ந்த அறிவுக் கருவூலமான நூல். இதனை ஓதுவார் எல்லா நலன்களையும் அடைவர். பாச

நீக்கம் பெற்று முத்தி நலம் பெறுவர். மாதவஞ் செய்த தமிழ்நாட்டினர்க்குப் பேருவாய்ப்பாக அமைந்த அருமை நூல். ஒருமை யுணர்வை யுதவும் பெருமையுடையது.

இதற்கு மாதவ சிவஞானயோகிகள் சிற்றுரையும் பேருரையும் என இரு உரை நூல்கள் இயற்றி யருளினர்.

இதனை ஏனேரும் எளிதில் படித்து உணர்ந்து பெரு நலம் அடையும் பொருட்டு எளிமையான உரையுடன் வெளிவருகின்றது.

ஏற்கனவே சைவம் என்ற திங்கள் இதழில் வெளி வந்தது.

இது அன்பர்கட்குப் பெருவிருந்தாக துணைபுரிந்து ஞான வளர்ச்சியை வழங்கும். நெடிது காலமாக இதனைத் தமிழ் மக்கட்கு உதவுதல் வேண்டும் என்பது எளியே னுடைய விருப்பம். இறைவன் இப்போதுதான் முற்றுவித்தனன்.

நன்னூலாகிய இந்நூல் வெளிவருவதற்குப் பொரு ளுதவி புரிந்தவர். நெல்லை, தருமகுணசீலர், அப்பர் அருட் பணிக் கழகத் தலைவர், சைவப்புரவலர், சிவபூசைச் செல்வர், உயர்திரு. S. S. **அருணசலம் பிள்ளையவர்கள்.** சைவவுலகம் இவர்கட்கு என்றும் நன்றிபாராட்டக் கடமை பூண்டுளது. இறையருள் இவர்கட்கு என்றும் நின்று துணை புரிவதாக.

இதனை அச்சிடும்போது பிழைநீக்கித் திருத்தம் புரிவதில் உதவிய தாம்பரம், சைவப் பெரியார், உயர்திரு. **பூ. சமரபுரி முதலியார்** அவர்கட்கும், சைவம் இதழ்களைத் தந்து உதவிய சிவனடியார் திருக்கூட்டச் செயலாளரும் விழுமிய அன்பரும் தாசன் ஸ்டுடியோ அதிபருமாகிய உயர்திரு. **M. R. சம்பந்தம்** அவர்கட்கும் நன்றி.

**"மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலக மெல்லாம்"**

அன்பன்

**கிருபானந்தவாரி.**

உ
சிவமயம்.

# மெய்கண்ட தேவர் வரலாறு

---

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த வருட்கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர் தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

தொண்டை நன்னாட்டிற்கும் சோழவள நாட்டிற்கும் இடையேயுள்ளது நடுநாடு; அத் திருநாட்டின் இடையே **திருமுனைப்பாடி நாடு** என்ற ஒன்று திலகம் போல் திகழ்கின்றது. அறந்தரு நாவுக்கரசும் ஆலால சுந்தரரும் பிறந்தருளிய பெருமையுடையது. அந்நாட்டில் **பெண்ணாகடம்** என்ற திருத்தலத்தில் சைவ வேளாளர் குலத்திலே தோன்றியவர் **அச்சுதகளப்பாளர்.** இவர் சிவனடியார்பால் பேரன்பு பூண்டவர்.

பிள்ளைப் பேறு வாய்க்கப் பெறாது வருந்தினர். தமது குல குருவாகிய திருத்துறையூர் **சகலாகம பண்டிதரிடம்** தமது குறையைத் தெரிவித்தனர். அப் பெரியார் திருமுறையைப் பூசித்துக் கயிறு சாத்திப் பார்த்தனர். அத் தருணம் வந்த திருஞானசம்பந்தர் அருளிய அடியிற்கண்ட பாடலை நோக்கி நனிமகிழ்ந்தனர்.

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே.

''திருவெண்காட்டிலேயுள்ள முக்குளங்களில் நீராடி அப்பெருமானை வழிபடுவோர் வினைநீக்கமும் பிள்ளைப் பேறும் பெறுவர்'' என்ற பொருளில் வரும் அத் திருப்பாடலைப் படித்து சகலாகமபண்டிதர் அச்சுதகளப்பாளருக்கு அதன் பொருளை விரித்துரைத்து, திருவெண்காட்டையடைந்து வள்ளல் பெருமானை வழிபடுமாறு கட்டளையிட்டனர்.

குருவாக்கியப்படி அச்சுதகளப்பாளர் தமது மனைவியுடன் திருவெண்காட்டிற்குச் சென்று சூரியன் சந்திரன் அக்கினி என்ற மூவராலும் உண்டாகிய முக்குளங்களில் முழுகி முக்கட் பெருமானை மூன்று காலமும் வழிபட்டு வந்தனர்.

ஓராண்டு சென்றபின் கண்ணுதற்கடவுள் கனவில் தோன்றி ''திருஞான சம்பந்தன் பாடலை நம்பி நீ இங்கு வழிபட்டமையால் ஞானசம்புந்தனைப் போன்ற ஒருமகன் தோன்றுவான்'' என அருளிச்செய்தனர். அச்சுதகளப்பாளர் கண்விழித்து எழுந்து கழிபேருவகையுற்றார். கயிலை மேவுங் கடவுளாரது கருணைத் திறத்தைக் கருதிக் கண்ணீர் மல்கினர். இறைவன் கருணையால் அம்மையார் கருவுற்று ஒரு ஆண்மகவைப் பெற்றனர். முறைப்படிச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தனர். '' **திருவெண்காடர்** '' (சுவேதவனப் பெருமாள்) என்று திருப்பெயர் சூட்டினர்.

சிலகாலத்திற்குப்பின் திருவெண்காட்டுப் பெருமானிடம் பிரியாவிடை பெற்றுத் திருப்பெண்ணைகடத்தை யடைந்தார்கள். ஊரவர் வரவேற்று உபசரித்து உவந்தார்கள்.

திருவெண்காடருடைய தாய் மாமனுர் வந்து மைந்தனைக்கண்டு மகிழ்ந்து மைத்துனர் உத்தரவு பெற்றுத் தங்கையையும் மைந்தரையும் அழைத்துக் கொண்டு தமது திருவெண்ணெய் நல்லூரை யடைந்தார். திருவெண்காடர் தாய்மாமன் மாளிகையில் வளர்ந்தனர்.

திருவெண்காடருக்கு இரண்டு ஆண்டுகள் நிறைவுற்றன. முற்பிறப்பில் சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கும் முடித்த சாமுசித்தராகிய அவர், இருவினை யொப்பு மலபரிபாகம் உற்று சத்திநிபாதம் அமையப் பெற்று விளங்கினுர். திருக்கயிலையினின்றும் புறப்பட்டுப் பொதிய மலையில் வாழும் அகத்தியரை நோக்கி விண்வழியே சென்று கொண்டிருந்த பரஞ்சோதி முனிவர் திருவெண்காடரின் பக்குவநிலையைக் கண்டனர். நிலத்தில் இறங்கி சிவஞான போதத்தையருளினுர். "மெய்கண்ட தேவன்" என்ற தீட்சா நாமத்தையுஞ் சூட்டினுர்.

மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப்பிள்ளையார் திருமுன் நிட்டை கூடியிருந்து சிவஞானபோதப் பொருளை மெய்யுணர்வினுல் உணர்ந்து, உணர்ந்த உண்மைகளைத் தமது உத்தம மாணவர்கட்கு உபதேசித்தருளிக் கொண்டிருந்தார். சிவஞானபோதம் என்ற அரியநூலைச் செய்து அருள்புரிந்தார்.

குலகுருவாகிய சகலாகமபண்டிதர் திருவெண்ணெய் நல்லூருக்கு வந்தார். அவர் ஒருபுறம் சொற்பொழிவு நிகழ்த்தலுற்றனர். அவருடைய சொற்பொழிவுக்கு மக்களின் கூட்டம் குறையலாயிற்று. காரணம் யாது என்று வினுவினுர். "சுவாமி! தங்கள் மாணவராகிய அச்சுதகளப்பாளரது திருப்புதல்வர் மெய்கண்ட தேவர் சிவஞான போத விரிவுரை நிகழ்த்துகின்றனர். அங்கு அன்பர்கள் நிரம்பவும் கூடுகின்ருர்கள்;" என்று அருகில் உள்ளார்

உரைத்தனர். அதனைக் கேட்ட சகலாகமபண்டிதர் மிக்க தருக்குடன் பல்லக்கில் ஏறி மெய்கண்டார் விரிவுரை புரியும் இடம் சென்று ஒருபுறம் நின்றனர்.

மெய்கண்டார் ஞானமழை பொழிந்த வண்ணமாக இருந்தனர். அப்போது ஆணவமலத்தைப் பற்றி விளக்க வேண்டிய சந்தர்ப்பம் வந்தது. சகலாகமபண்டிதர் இடையில் குறுக்கிட்டு, ''ஆணவமலத்தின் இலக்கணம் யாது?'' என்று வினவினர். பிள்ளைப் பெருமானாராகிய மெய்கண்ட தேவர் தமது திருக்கரத்தின் திருவிரலைச்சுட்டிக் காட்டி அவரை நோக்கி ''ஆணவமலம் இப்படித்தான் இருக்கும்'' என்று கூறித் திருக்கண்ணோக்கம் அருளினர்.

உடனே வயதால் முதிர்ந்த சகலாகம பண்டிதர் ஒரு நொடியில் தனது தருக்கு அடங்கப்பெற்று மெய்கண்டார் திருவடித்தாமரை மீது வீழ்ந்தனர். அவரை மெய்கண்டார் மாணவராக ஏற்று உண்மை ஞானத்தை உணர்த்தியருளினர். அவர் முதல் மாணவராக ஆனார். **''அருணந்தி சிவாச்சாரியார்''** என்ற தீட்சாநாமம் பெற்றனர். அவர் சிவஞானபோதத்திற்கு வழி நூலாகச் **சிவஞானசித்தியார்** என்ற பெரு நூலையும், இருபா இருபஃது என்ற திருநூலையும் அருளினர்.

மெய்கண்ட தேவ நாயனார் சிலகாலம் நிட்டை கூடியிருந்து ஐப்பசித்திங்கள் சுவாதி நாளில் சிவானந்தப் பெருவாழ்வைப் பெற்று வீடு பேறு எய்தினர்.

**''பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித**
**மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ''** **—தாயுமானார்.**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞானபோதம்

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறிதற்குக் கருவியாகவுள்ள சுத்தாத்துவித சித்தாந்த சைவ ஞானப் பெருநூல் ஆகும்.

சிவம் ஆவது நித்த முத்த சுத்த சித்தாகிய ஒரு பொருள்.

ஞானமாவது அப்பொருளைச் சந்தேக விபரீத மின்றி அதன் அருள் வழிப்பட்டு நின்று உள்ளவாறு அறிதல்.

போதமாவது அவ்வாறு ஆகம அளவையால் அறிந்த அப்பொருளை அநுபூதி (அநுபவம்) நிலையில் வைத்து நிச்சயஞ் செய்தல்.

ஆகவே, இந்நூல் பதி பசு பாசங்களின் இலக்கணங் களை யெல்லாம், பெரிய மலையின் உருவத்தை ஒரு சிறிய கண்ணாடியானது தன்னுள் அடக்கிக் காட்டுவதுபோல், பன்னிரண்டு சூத்திர ரூபமாயிருக்கும் தன்னிடத்தில் அடக்கிக் கூறுவதும், சகலவேதாகம சாரமாயிருப்பதும், எல்லா ஞான நூல்களுக்கும் தாய் நூலாயிருப்பதுமான ஒப்பற்ற ஞானசாஸ்திரமாம்.

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்.

வேதம் பொது; பசுவைப் போன்றது. ஆகமங்கள் சிறப்பு; பசுவினிடத்துப் பால் போன்றன. சிவபெருமானது உண்மை நிலையைத் தெள்ளத் தெளியத் தெளிவிப்பன. தேவார திருவாசகங்கள் பாலினிடத்துப் பொருந்தியுள்ள நெய்யைப் போன்றன. இச் சிவஞான போதம் நெய்யின் சுவையை ஒத்தது.

இந்நூல் வடமொழி தென்மொழி இரண்டிலும் உள்ளது. வடமொழிச் சிவஞானபோதம் சிவபெருமானுரால் ஆகமத்தில் அருளிச்செய்யப்பட்டது. தமிழ்ச் சிவஞானபோதம் உலகமுய்யப் பூர்வஞானத்தோடே திருவெண்ணெய்நல்லூரில் திருவவதாரஞ் செய்து, குழந்தைப் பருவத்திலேயே கைலாசவாசியாகிய பரஞ்சோதி மாமுனிவரால் ஞானோபதேசஞ் செய்யப்பெற்று, அத்தலத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சுயம்பு மூர்த்தியாகிய பொல்லாப் பிள்ளையாரென்னும் விநாயகக் கடவுளிடம் சகல வேதாகமங்களையுங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டை கூடியிருந்த மெய்கண்ட தேவரால் அருளிச் செய்யப்பட்டது.

அளவிடற்கரிய வேதாகம உண்மைகளை இந்நூல் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கிக் கூறுமாயின் இதன் பெருமையையும், வடமொழி தென்மொழிகளின் பெருமையையும், இதைச் செய்தவர் பெருமையையும் அளவுபடுத்திக் கூற யாவராலாகும்! சகல வேதாகம உண்மைகளையும் வடமொழியில் எல்லாம் வல்ல இறைவனுர் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கியருளியது போலவே, தமிழ் மொழியில் நமது மெய்கண்ட தேவரும் பன்னிரண்டு சூத்திரங்களில் அடக்கிக் கூறியருளினர் எனில், மெய்கண்டதேவரை அவ்விறைவரே யென்று கூறுவதன்றி வேறு யாரென்று கூறுவது?

**திருக்களிற்றுப்படியார்**

*துரியங் கடந்தசுடர்த் தோகையுட னென்றும்*
*பிரியாதே நிற்கின்ற பெம்மான்—றுரியத்தைச்*
*சாக்கிரத்தே செய்தருளித் தான்செய்யுந் தன்மைகளு*
*மாக்கியிடு மன்பர்க் கவன்.*

இந்நூலுக்குப் பெரியோர்கள் பலர் உரை செய்தார்கள். மெய்கண்டதேவரே தமக்குப் பொல்லாப் பிள்ளையார் அருளிச்செய்த சூர்ணிகைக் கிணங்க வார்த்திகம் என்னும் பொழிப்புரை யருளிச்செய்தனர். (சூர்ணிகை என்பது சூத்திர முதலியவற்றின் பொருளை இலேசாகச் சுருங்கிய வசனரூபமாயுரைப்பது). சிவஞான முனிவர் சூத்திர வார்த்திகங்கட்கும் உதாரணச் செய்யுட்களுக்கும் சிற்றுரையும், மாபாடியம் என்னும் பேருரையுஞ் செய்தருளினர். பாண்டிப் பெருமாள் என்பவர் பதவுரையும் விருத்தியுரையும் செய்துபகரித்தனர். நவீனமாகச் சாம்பவ ஸ்ரீகாசிவாசி செந்திநாதையரவர்கள் சிவஞானபோத வசனலங்காரதீபம் என்னும் நூல் செய்தனர். இவை யாவும் சிவஞானபோதத்திலுள்ள சித்தாந்த உண்மைகளைப் பலரும் எளிதில் உணரவேண்டி இயற்றப்பட்டன வெனினும், தமிழ் மொழியில் குறைந்த ஆராய்ச்சியுடையார் இலேசாக அறிந்துகொள்ளக் கூடியனவாயில்லை. ஆதலால், சைவ சமயத்திற் பிறந்தும் பலர், நெல்லைக் குற்றி யுண்ணுது உமியைக்குற்றிக் கைவருந்துவார்போல், பரமஞான கருவூலமாகிய இந்நூலைக் கற்காது, கற்பதற்கும் குதர்க்கஞ் செய்வதற்கும் எளியனவாகிய புறச்சமய நூல்களை ஞான நூல்களென்று மயங்கிப் படித்துத் தங்களை ஞானிகளென்றும் வேதாந்திகளென்றும் சொல்லிக்கொண்டு, உயிர்க்குறுதி பயக்கும் சிவபூசை, சிவனடியார் பூசை, பஸ்மருத்திராக்கதாரணம் முதலிய

சைவ தவ வொழுக்கங்களைக் கைவிட்டு அவமே காலங் கழிக்கின்றார்கள். ஆதலால், சிவஞானபோதத்தைக் கையினாற் பரிசித்தற்கும் அருகனல்லாத அடியனும், உண்மைச் சிவனடியார்களின் திருவடிகளைத் தியானித்து, சாட்டையிற் பம்பரசாலம்போல் எல்லாவற்றையும் ஆட்டும் இறைவனாரது திருவருளைச் சிந்தித்து, இது வரையில் வெளிவந்துள்ள உரைகளை ஆதரவாக் கொண்டு, சிவஞானபோதம் என்னும் மகுடத்தின் கீழ் இந்நூலிற் பொதிந்துள்ள சித்தாந்த உண்மைகளை அடியனாலியன்றவரையில் யாவரும் எளிதில் உணருமாறு விளக்குவான் தொடங்கலுற்றேன்.

## சிறப்புப்பாயிரம்

நேரிசை யாசிரியப்பா.

மலர்தலை உலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளில் கண்டுகண் இருள்தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத்து அளித்த
**உயர்சிவ ஞான போதம்** உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

(இதன் பொருள்)

மலர் தலை — பரந்த இடத்தையுடைய, உலகின் — உலகினிடத்து உள்ள, மா இருள் - பெரிய பூத (புற) இருளானது, துமிய - கெடும்படி, பலர் புகழ் ஞாயிறு - பல சமயத்தாராலும் புகழப்படுகின்ற சூரியன், படரின் அல்லதை — (உதயகிரியினின்றும்) போந்து பிரகாசித்தா

லல்லாமல், காண்டல் செல்லா — காணுந் தொழிலைப் பெறமாட்டாத, கண்போல் — கண்ணொளியைப் போல, ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளில் — பரிபூரணமாகிய பெரும் பெயர் எனப்படும் மகாவாக்கியத்தால் எடுத்து ஓதப்படும் முதற்கடவுளின் திருவருளினால், கண் இருள் தீர்ந்து - அறிவின் கண்ணே உண்டாகிய அஞ்ஞான மாகிய இருள்விட்டு நீங்கி, அருந்துயர்க் குரம்பையின் - பொறுத்தற்கு அரிய துயரங்களுக்கெல்லாம் இருப்பிட மாகிய சிறு குடிலாகிய (காணப்பட்ட) உடம்பானே, ஆன்மா நாடி - (காணப்படாத) சீவான்மாவையும் பர மான்மாவையும் (அனுமான அளவையால்) விசாரித்து அறிந்து (அவைகளின் பொது இயல்பை உணர்ந்து), கண்டு - (அவைகளின் சிறப்பியல்பை) அனுபூதியிற் கண்டு உணர்ந்து, மயர்வு அற - (இம்முறையால்) மயக்க வாசனை அற்று மோட்சத்தைப் பெறும்பொருட்டு, நந்தி- நந்திதேவ நாயனார், (கயிலாயத்திலே சீகண்ட பரமேசுர ரிடத்தே அனுக்கிரகம் பெற்ற படியே) முனி கணத்து - சனற்குமார முனிவர் முதலிய முனிவர் குழாங்கட்கு, அளித்த - அனுக்கிரகம் பண்ணின, உயர் சிவஞான போதம் — (நூல்களுள்ளே) மேலாகிய சிவஞானபோதம் என்னும் நூலை, உரைத்தோன் - தமிழ் மொழியில் விரித் தருளிச் செய்தவனும், பெண்ணைப் புனல் சூழ் வெண் ணெய் - பெண்ணை யாற்று நீராலே சூழப்பட்ட திருவெண் ணெய் நல்லூரைப் பதியாகக் கொண்டு எழுந்தருளிய, சுவேதவனன் - சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடையவரும், பொய்கண்டு அகன்ற- பல சமயத்தாருடைய நிலைகளின் பொய்மையைப் பொய் யென்று கண்டு விட்டு நீங்கிய (அக்காரணத்தாற் பெற்ற) மெய்கண்டதேவன்-(சத்திய ஞானத்தைத் தரிசித்தருளிய) மெய்கண்டதேவர் என்னும் சிறப்புத் திரு நாமமுடைய வரும் ஆகிய, பவம் நனி வன் பகை கடந்த - பிறவியாகிய

மிக்க வலிய பகையினை வென்ற, தவர் - தவத்தோர்கள், அடி - தனது திருவடிகளை, புனைந்த - சூட்டிக்கொள்ளு தற்கு ஏதுவாகிய, தலைமையோன் - மேம்பாட்டினை யுடையோன்.

**மங்கலவாழ்த்து**

வஞ்சித்துறை

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

(இதன் பொருள்)

கல்ஆல் நிழல் - (கயிலாயத்திலே அருள் வடிவாகிய) கல்லாலமரத்தின் நிழலின் கண் (எழுந்தருளியிருந்து), மலைவு இல்லார் - (நந்திபெருமானுக்கு இச் சிவஞான போதம் என்னும் நூலால்) மயக்கத்தைத் தீர்த்தருளிய முதலாசிரியராகிய சிவபெருமான், அருளிய - தந்தருளிய, பொல்லார் - (சுயம்பு மூர்த்தியாகிய) பொல்லாப் பிள்ளையா ருடைய, இணைமலர் - இரண்டு தாமரை மலர் போன்ற திருவடிகளை, நல்லார் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து சிவஞானத்தைப் பெற்ற மெய்யன்பர்கள், புனைவர் தலையில் சூட்டிக்கொள்ளுவர்.

மலை வில்லார் எனப் பதச் சேதம் செய்து, மேரு மலையை வில்லாக வளைத்தருளிய சிவபெருமான் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும்.

அருளிய என்பதைச் செய்யிய என்னும் வாய் பாட்டு வினையெச்சமாகக் கொண்டு, மேலும் மேலும் கருணைகூர்ந் தருளுதற் பொருட்டு என்று பொருள் கொள்ளுதலும் ஒன்று.

ஏ - அசை.

**அவையடக்கம்**

நேரிசைவெண்பா.

*தம்மை உணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்*
*எம்மை உடைமை எமைஇகழார்—தம்மை*
*உணரார் உணரார் உடங்கியைந்து தம்மில்*
*புணராமை கேளாம் புறன்.*

(இதன் பொருள்)

தம்மை - (இறைவனுக்கு உடைமைப் பொருளாய் விளங்கும் உயிராகிய) தம் இயல்பினை, உணர்ந்து - உள்ள படியே உணர்ந்து, தமை உடைய தன் உணர்வார் - தம்மை அடிமையாக உடைய தலைவனை உணர்ந்தவர்கள் (சித்தாந்த சைவர்கள்), எம்மை - எம்மை, உடைமை - தமக்கு உடைமைப் பொருளாக உடையராகலின், எமை - எம்மை, இகழார் - (குற்றங்கள் நீக்கிக் குணங் கொண்டு பாராட்டுவாரல்லாமல்) இகழ்தல் செய்யார். (ஆதலால், எம்மால் செய்யப்படும் நூலையும் அவ்வாறே இகழாது கைக்கொள்வர்). தம்மை உணரார்-தம் உண்மை நிலையினை உணராதார், உணரார் - தம்மைஉடையானாகிய தலைவனை யும் உணரமாட்டார். (ஆதலின்) உடங்கு இயைந்து-அவர் ஒருங்கு கூடிக்கொண்டு, தம்மில் புணராமை - தம்மில் தாமே சேராது (முரணுவராதலால்), புறன் கேளாம்-அவர் இகழ்ந்துரைக்கும் புறமொழியையும் பொருளாகக் கொள்ள மாட்டோம்.

## சிவஞானபோதம்

**நூல்.**

முதலாவது பொது அதிகாரம்

**பிரமாணவியல்**

முதற் சூத்திரம்

***அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்***
***றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா***
***மந்த மாதி யென்மனார் புலவர்,***

(இ-ள்.) அவன் அவள் அது எனும் அவை - அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் சுட்டி யுணரப்படும் பிரபஞ்சத் தொகுதி, மூவினைமையின் - (தோற்றம் நிலை இறுதி என்னும்) முத்தொழிலை யுடைமையால், தோற்றிய திதியே - ஒருவனால் தோற்றப் பட்ட உள் பொருளேயாம், ஒடுங்கி மலத்து உளதாம் - அது தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாய்நின்ற கடவுளினின்றும், சகசமலம் நீங்காமையால், அது நீங்கும் பொருட்டு மீளத் தோன்றுவதாம், அந்தம் ஆதி - ஆத லால் சங்காரத் தொழில் செய்யுங் கடவுளே உலகத்திற்கு முதற்கடவுள், என்மனார் புலவர் - என்று அளவை நூலுணர்ந்தோர் கூறுவர்.

பிரபஞ்சம் பலவகையாய்ச் சுட்டியுணரப் படுதலால் அதைப் படைத்துக்காத்தழித்தற்குச் சுட்டுணர்விறந்த கடவுள் ஒருவர் வேண்டும் என்பார் பிரபஞ்சத்தை "அவனவ ளதுவெனு மவை" என்றனர். பிரபஞ்சம் தோன்றி நின்று அழியுந்தன்மை யுடையதாதலினால் அதைத் தோற்றி, நிறுத்தி, அழித்தற்குத் தோற்றமு மீறுமில்லாத கடவுள் ஒருவர் வேண்டும் என்பார் "மூவினைமையின்" என்றனர். உலகம் தானே தோன்றா மல் கடவுளால் தோற்றுவிக்கப்பட்டமையால் தோன்றிய என்னாது "தோற்றிய" என்றனர். பிரபஞ்சமானது சில மதவாதிகள் கூறுவதுபோல், முயற்கொம்பு போன்ற இல்பொருளன்று, உள்பொருளே என்பார் "திதியே" என்றனர். (திதிப்படும் உலகத்தை "திதி" என்றது உப சாரம்.) பிரபஞ்சம் மலபரிபாகம் உண்டாதற் பொருட்டுக் கடவுளிடம் ஒடுங்கி மீளவும் தோன்றுவதனால் "ஒடுங்கி மலத்துளதாம்" என்றனர். (ஒடுங்கி மலத்துளதாம் - ஒடுங்கின மலத்தான் உளதாம்.) சங்கார காரணனாகிய சிவபெருமானையே இவ்வுலகம் முதலாக உடையது என்

பார் "அந்தமாதி" என்றனர். (அந்தம் - அந்தத்தைச் செய்யுங் கடவுள் - சங்காரகர்த்தா).

இச்சூத்திரம் அநுமானப் பிரமாணமாகிய அளவையால் இவ்வுலகம் கடவுளை முதலாக உடையது என்பதை விளக்கவந்தமையால், "என்மனர் புலவர்" என்பதற்கு அளவை நூலுணர்ந்தோர் கூறுவர் என்று பொருளுரைக்கப்பட்டது.

## பிரமாணம்

பிரமாணம், காண்டல், கருதல், உரை என மூன்று வகைப்படும். இவற்றுள், காண்டல் பிரத்தியக்ஷப் பிரமாணமும், கருதல் அநுமானப் பிரமாணமும், உரை ஆகமப்பிரமாணமுமாம். மற்றெல்லாப் பிரமாணங்களும் இம்மூன்றினுள் அடங்கும்.

பிரத்தியக்ஷப்பிரமாணமாவது—கண், செவி, வாய், மூக்கு, மெய் இவ்வைந் திந்திரியங்களாலும் முறையே உருவம், சத்தம், இரதம், கந்தம், பரிசம் என்பவைகளை யறிதலாம். (பிரத்தியக்ஷம் - இந்திரிய விஷயம். அக்ஷம்- இந்திரியம். பிரதி - விஷயம்). அக்ஷம் என்பது கண் எனவும், பிரதி என்பது அது காண்கிற ஒளி எனவும் பொருள்படும்.

அநுமானப்பிரமாணமாவது அநுமானத்தாலே தோன்றும் அநுமேயத்தை யறிதல். உதாரணம்—காணப் பட்ட புகையைக் கொண்டு காணப்படாத (மறைந்துள்ள) நெருப்பை யறிதல்.

ஆகமப் பிரமாணமாவது நூல்களைக்கொண்டறிதல்.

சித்துப் பொருளாகிய கடவுளைச் சடப்பொருள்களாகிய இந்திரியங்களால் அறிதல் கூடாது. அசித்துப் பொருள்களாகிய இந்திரியங்களால் அறியப்படுவன

வெல்லாம் அசித்துப் பொருள்களாகவே யிருக்கும். ஆதலால், பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சச்சிதானந்தப் பொருளாகிய கடவுளை அறியலாகாது. அவரை ஆகமப் பிரமாணத்தையும் அநுமானப் பிரமாணத்தையுமே கொண்டு அறிதல் வேண்டும். ஆனால், நூல்கள் கடவுள் மனம் வாக்குக் காயங்களால் அறியப்படாதவர் என்கின்றனவே, இதன் கருத்து யாது எனில், கூறுவாம். கடவுள் மனம் வாக்குக் காயங்களால் அறியப்படாதவர் என்பது உண்மையே. சிவஞானசித்தியாரிலும்,

மறையினா லயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்
குறைவிலா வளவினாலுங் கூறொணா தாகி நின்ற
விறைவனார் கமல பாத மின்றியா னியம்பு மாசை
நிறையினார் குணத்தோர்க் கெல்லா நகையினை நிறுத்து மன்றே.

என்னுஞ் செய்யுளில், கடவுள் மனம் வாக்குக் காயங்களால் மாத்திர மன்றி, வேதங்களாலும் பிரம விஷ்ணுக்களாலும் அளவைகளாலும் ஓதுதற்கரியவர் என்று அருளிச்செய்யப்பட்டது. ஆனால் அவர் எவராலும் எதனாலும் அறியப்படாதவராயிருந்தால், அவர் இல்பொருளாயிருக்கவேண்டும். அவரால் யாதொரு பிரயோசனமுமின்றாய்விடும். ஆதலால், கடவுள் எதனாலும் எவராலும் அறியப்படாதவர் என்றது, அவரருளைக் கொண்டன்றி ஆன்மவறிவினால் சுட்டியறியப்படாதவர் என்று நூல்கள் கூறியவாறாம். இது பற்றியே, அச் சித்தியாரிலேயே,

அருளினா லாக மத்தே யறியலா மளவி னாலுந்
தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே
மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாயா
விருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே.

என்றும் அருளிச் செய்யப்பட்டது. இவற்றால் அருளில்லாதவர்களுக்கு ஆகமப் பிரமாணங்களும் அநுமானப்

பிரமாணங்களும் எவ்வளவுதான் எடுத்துக்காட்டினுலும் அவை பயன்படா வென்பதும், அருளுடையார்க்கே அவை பயன்படும் என்பதும் விளக்கியவாரும்.

**திருக்குறுந்தொகை.**

குறிக ளும்மடை யாளமுங் கோயிலும்
நெறிக ளும்மவர் நின்றதோர் நேர்மையும்
அறிய வாயிர மாரண மோதிலும்
பொறியி லீர்மன மென்கொல் புகாததே.

**திருத்தாண்டகம்**

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான்
வார்சடையா னென்னி னல்லான்
ஒப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்ல னோருவம னில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே
கண்ணாகக் காணி னல்லால்
இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ
னென்றெழுதிக் காட்டொ ணாதே

**கந்தரநுபூதி**

முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.

கடவுளின் அருளிருந்தால் சகல ஞானங்களும் தாமே உண்டாகும். ஆதலால், அவரருளுடையோர்க்கு ஆகமப் பிரமாணங்களும் அளவைப் பிரமாணங்களும் எற்றுக்கு எனின், கூறுவாம். அவரருளைப் பெற்ருல் சகல ஞானங் களும் தாமே உண்டாம் என்பதும் உண்மையே. இதனை,

நற்குஞ் சரக்கன்று நண்ணிற் கலைஞானங்
கற்குஞ் சரக்கன்று காண்.

என்னும் திருவருட்பயனுலும், அருட்சத்தியாகிய உமா தேவியாருடைய திருமுலைப்பாலை உண்டமாத்திரத்தி லேயே ஆளுடைய பிள்ளையார் ஞானசம்பந்தராய் விளங்

னின் சரிதத்தாலும் உணரலாகும். ஆனால் ஆன்மாக்கள் பலவகைப்பட்ட பக்குவமுடையவர்களா யிருத்தலினால், அவரருளும் அவ்வவர் பக்குவத்திற்கேற்பப் பல படியாக உபகரிக்குமே யன்றி, எல்லாருக்குமே ஒரே அளவாகவும் ஒரே தன்மையாகவும் உபகரிக்காது. மனிதர்கள் சாமுசித்தர், வைநயிகர், பிராகிருதர் என முத்திறப்படுவர். இவர்களுள், சாமுசித்தராவார் முற்பிறவிகளில் சரியை கிரியை யோகங்களைச் செலுத்தி, அத்தவ விசேடத்தால் பூர்வஞானத்தோடே பிறந்து, மோட்சம் ஒன்றையே அபேட்சித்திருப்பவர்கள். இவர்களுக்குச் சிவபெருமான் தாமே நேரில் அநுக்கிரகஞ் செய்வர். ஆதலால் இவர்களுக்கு ஞான நூல்கள் வேண்டுவதின்றும். வைநயிகர் எனப்படுவார் முற்போந்த சனனங்களில் புறச்சமயங்களை யநுட்டித்துப்பெற்ற புண்ணியபரிபாக விசேடத்தால் சைவசமயத்திற் பிறந்து வேதசிவாகமங்களாகிய முதனூல்களையும் அவற்றின் புடைநூல் சார்பு நூல்களையும் ஓதி, அவற்றில் விதித்தவாறொழுகி முத்திபெற முயலுவோர். பிராகிருதர் எனப்படுவோர் உலக வாழ்க்கையையே நிலையுடையது என்று மதித்து, மோட்சாபேட்சையின்றி, கடவுள் வழிபாட்டைக் கைவிட்டு, மிருகங்களைப் போல் உண்டு உறங்கிச் சுகித்திருப்பவர்கள். இம்மூவருள் உத்தமராகிய சாமுசித்தருக்கும் அதமராகிய பிராகிருதருக்கும் ஞானநூல்கள் வேண்டுவதில்லை. மத்திமராகிய வைநயிகருக்கே அவை வேண்டும்.

**சிவஞானசித்தியார்**

**பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்**
**தொண்டரைத் தானே தூய கதியினிற் செருகுப்பன் மார்க்கர்**
**கண்டநூ லோதி வீடு காதலிப் பவர்கட் கீசன்**
**புண்டரி கத்தாள் சேரும் பரிசினைப் புகல லுற்றும்.**

(இ-ள்.) பண்டை நல் தவத்தால் - முன் செய்த நல்ல சைவதவ விசேடத்தால், தோன்றி—(சாமுசித்த

ராய்) பிறந்து, பரமனை - முதல்வனிடத்தில்—பத்திபண்ணும் - (முத்திவிரும்பி) பத்திசெய்கின்ற, தொண்டரை - சிவபத்தரை, தானே - (நூல்வழியாலன்றி அம் முதல்வன்) தானே, தூயகதியினில் தொகுப்பன் - பரிசுத்தமாகிய சிவகதியில் சேர்ப்பன். (ஆதலால் அவர்களுக்கு நூல்வேண்டுவதில்லை). மார்க்கர் கண்ட நூல் ஓதி வீடு காதலிப்பவர்கட்கு - சிவஞானிகள் பிரமாணமென்றறிந்து கைக்கொண்ட நூல் ஓதி அதன் வழியாய் முத்திபெற விரும்பும் வைநயிகராயினர்க்கு, ஈசன் புண்டரிகத் தாள் சேரும் பரிசினை புகலலுற்றும்-சிவனுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளைக் கூடும் முறைமையினை வகுத்துக் கூறுகின்றோம். (எ-று.)

காணப்பட்ட பிரபஞ்சத்தைக்கொண்டு காணப்படாத கடவுள் ஒருவர் உண்டென்று அநுமானப்பிரமாணத்தாலும் ஆகமப்பிரமாணத்தாலும் நம்பி, அவரை மெய்யன்போடு வழிபடுவார்க்கே அவரருளுண்டாகும். அவ்வாறு வழிபடாதவர்க்கு அது உண்டாகாது. இதனை "ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடுங் காலமே" என்னுந் திருவாசகத்தாலும் உணரலாம். ஆதலால் சிவஞானபோதத்தின் இம்முதற் சூத்திரமானது, உலகிற்கு முதற் கடவுள் சிறப்பு வகையால் உண்டென்னும் ஆகமப் பிரமாணத்தை அநுமானப் பிரமாணத்தால் வலியுறுத்துகின்றது.

சிவஞானபோதச் சூத்திரம் ஒவ்வொன்றும் அதிற் கூறப்பட்ட விஷயங்களுக்கேற்ப அதிகரணங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றது.

"தன்னாற் கூறப்படும் பொருள், அதன்கண் ஐயப்பாடு, அதற்குப் பிறர் கூறும்பக்கம், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு, இயைபு ஆகிய இவ்வைந்தின் நிலைக்களம் ஈண்டு அதிகரணம் எனப்படும்."

இவற்றுள் "தன்னாற் கூறப்படும் பொருள்" என்பது அதிகரணத்தில் சொல்லப்பட்ட விஷயம். "அதன்கண் ஐயப்பாடு" என்பது அவ்விஷயத்தில் தோன்றும் சந்தேகம். "அதற்குப் பிறர் கூறும்பக்கம்" என்பது அச்சந்தேகத்தால் பிறசமயிகள் கூறும் ஆட்சேபனைகள். "மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு" என்பது பிற சமயிகள் செய்யும் ஆட்சேபனைகளிலுள்ள குற்றங்களை யெடுத்துக் காட்டி அவைகளை மறுத்துச் சித்தாந்தப் படுத்திய துணிபு. "இயைபு" என்பது சித்தாந்தப்படுத்திக்காட்டிய துணிபுகளைப் பிரமாணங்களாலும் திட்டாந் தங்களாலும் வலியுறுத்துதல்.

அதிகரணம் ஒவ்வொன்றுக்கும், சூர்ணிகை என்னுங் கருத்துரையையும், வார்த்திகம் என்னும் பொழிப்புரை யையும், உதாரண வெண்பாக்களையும் கொண்டு பொருள் உரைக்கப்படும்.

முதற்சூத்திரம் மூன்று அதிகரணங்களை யுடையது. அவை வருமாறு:—

க-வது. அவனவளதுவெனு மவைமூ வினைமையின்.

உ-வது. தோற்றிய திதியே யொடுங்கி மலத் துளதாம்.

௩-வது. அந்த மாதி யென்மனார் புலவர்.

இவை மூன்றும் ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் வருதலால் ஒரு சூத்திரத்தாற் கூறப்பட்டன.

## முதற்சூத்திரத்தின் சூர்ணிகை

க-வது—சகம் பிறப்பு, இருப்பு, இறப்பாகிய முத் தொழிலையுடையது.

உ-வது—அது அரனாலே யுடையது.

௩-வது—மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## முதற்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது—ஈண்டுத் தோற்றமும் ஈறும் உள்ளதன் பாலே கிடத்தலின், உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி, திதி, நாசமுடைத்தென்றது.

உ-வது—இனி, இல்லதற்குத் தோற்றமின்மையின், உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின், ஒடுங்கின சங்காரத்தின் வழியல்லது உற்பத்தியில்லையென்றது.

ந-வது—இனிச் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான், சங்காரமே முதலென்றது.

இம்முதற் சூத்திரத்திற்குரிய உதாரண வெண்பாக்கள் ஐந்து.

இனி, முதற்சூத்திரத்தின் முதலதிகரணத்தின் பொருளை அதற்குரிய சூர்ணிகை வார்த்திகங்களோடும் உதாரண வெண்பாவோடும் சேர்த்து விளக்குவாம்.

## முதலதிகரணம்

அவனவளது வெனுமவை மூவினைமையின்.

(இ-ள்.) அவன் அவள் அது என்று சுட்டியுணரப் படும் பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசம் என்னும் முத்தொழிலை உடையதாயிருத்தலினால்.

இவ் வதிகரணத்தில் "தன்னாற் கூறப்படும் பொருள்" முதலிய ஐந்தும் வருமாறு:—

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள் - பிரபஞ்சம் பிறப்பு இருப்பு இறப்பு ஆகிய முத்தொழிலையுடையது.

உ-வது—ஐயப்பாடு—பிரபஞ்சம் முத்தொழிலையுடையதோ? அன்றோ?

௩-வது—பிறர்கூறும் பக்கம் - பிரத்தியட்சப் பிரமாணத்தால் அறியப்படாதனவெல்லாம் அங்கீகரிக்கப் படுவனவன்று. ஆதலால், இவ்வுலகம் ஒரு காலத்தில் தோன்றியதென்பதும், இனியொரு காலத்தில் அழியுமென்பதும் ஒப்புக்கொள்ளப்படுவனவன்று. பிரபஞ்சம் தோற்றமும் ஈறுமின்றி நித்தமாயிருப்பது என்பதே நிச்சயம். (இவ்வாறு கூறுவோர் காட்சிப்பிரமாணம் ஒன்றையே ஒப்புக்கொள்ளும் உலோகாயதரும் மீமாஞ்சகரும்).

௪-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.—தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின், (அதாவது உற்பத்தியும்நாசமும் காணப்பட்ட திதியின்பக்கத்தே காணக்கிடத்தலின்) ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து'. அதாவது, காட்சிப்பிரமாண மொன்றையே ஒப்புக்கொள்ளும் உலோகாயதருக்கும், மீமாஞ்சகருக்கும் அப் பிரமாணத்தைக் கொண்டே பிரபஞ்சம் தோன்றி நின்று அழிதலை விளக்க வேண்டிப் பிரபஞ்சம் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டி யுணரப்படும் பொருள்களின் தொகுதியாகையாலும், அவ்வாறு சுட்டியறியப்படும் பொருள்கள் ஒவ்வொன்றும் தோன்றி நின்று அழிதலைப் பிரத்தியட்சமாகக் காண்பதனுலும், அவற்றின் தொகுதியாகிய பிரபஞ்சமும் அவ்வாறே தோன்றி நின்று அழியும் தன்மைத்து என்று சித்தாந்தப்படுத்தியதாம்.

ரு-வது—இயைபு. உதாரண வெண்பா.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வொன்றென்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டும்
அன்றென்று முண்டென்ன வாய்ந்து.

(இ-ள்) பேதாய்—காட்சியளவையாலும் அறியமாட்டாத மடவோனே, பூதாதி - பூதம் முதற்காரணமாக

வுடைய பிரபஞ்சத்திற்கு, திதி - நீ அங்கீகரிக்கும் திதி, ஈறும் முதலும் துணை ஆக ஆகும் - நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக் கொண்டே நிகழும். (அதாவது உற்பத்தியும் நாசமும் இன்றி வெறுந் திதி மாத்திரம் இராது. ஆனல் உலகத்திலுள்ள பொருள்கள் ஒன்று தோன்றவும் ஒன்று நிற்கவும் ஒன்று அழியவும் காண்கின்றோமே யன்றி எல்லாம் ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழியக் காண்கிலோம் எனில்) ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக் கண்டும் - ஒவ்வொரு காலவிசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே அழிவ தனைக் கண்டு வைத்தும், (அதாவது கால விசேஷத் தால் ஒவ்வோர் சாதிச் செந்துக்கள் செடிகள் முதலியன ஒருங்கே தோன்றி, ஒருங்கே நின்று, ஒருங்கே யழிதலா லும், பூகம்பம், எரிமலை, ஜலப்பிரவாகம், யுத்தம் முதலிய வற்றால் பலபொருள்களும் ஒருங்கே யழிவது பிரத்தியட்ச மாயிருத்தலாலும்)— என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ - என்றாயினும் அதற்குரிய காலம் வரு மென்று உலகத்திற்கும் அவ்வாறுதல் உண்டென்று அக்காட்சி பற்றி ஆராய்ந்து சொல்லார்களோ, உன்னைப் போலும் மடமையில்லாதோர். (அதாவது, உலகத்திற்கும் அதற்குரிய காலம் வந்தால் அவ்வாறுதல் கூடுமென்று அக்காட்சிப் பிரமாணத்தைக் கொண்டே அறிவுடையோர் ஆராய்ந்துசொல்லுவார் என்பதாம்.)

இனி முதற்சூத்திரத்தின் இரண்டாம் அதிகர ணத்தை விளக்குவாம்.

**முதற்சூத்திரம்—இரண்டாம் அதிகரணம்.**

**“தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்”**

(இ-ள்) பிரபஞ்சம் ஒருவனல் தோற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது தோன்றுங்கால் தான் ஒடுங்கு

தற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும் சகசமலம் நீங்காமையால் அது நீங்கும்பொருட்டு மீளத்தோன்றுவதாம் (எ-று.)

இவ்வதிகரணத்தில் தன்னாற் கூறப்படும் பொருள் முதலிய ஐந்தும் வருமாறு:—

க-வது— தன்னாற் கூறப்படும்பொருள்—சகம் அரனாலேயுடையது.

உ-வது—ஐயப்பாடு—சகம் சார்பில் தோன்றுவதோ? அன்றி அரனால் தோற்றப்பட்டதோ?

௩-வது—பிறர் கூறும் பக்கம் —பிரபஞ்சம் இல்பொருளாய்ச் சார்பிலே தானே தோன்றியழியும். ஆதலால் அதைத் தோற்றியழிப்பவன் ஒருவன் வேண்டா. (இது புத்தர் கொள்கை).

பிரபஞ்சம் உள்பொருளாய் முதற்காரணத்தினின்றும் தானே தோன்றியழியும். ஆதலால் அதற்கு நிமித்தகாரணனாகிய கர்த்தா ஒருவன் வேண்டா. (இது சாங்கியர் மதம்).

பிரபஞ்சத்தைப் படைக்கும் பிரமன், அதைக் காக்கும் விஷ்ணு ஆகிய இவ்விருவருள் ஒருவரே அதற்குக் கர்த்தாவாதல் அமையும். அழித்தற்றொழிலைச் செய்யும் அரன் கர்த்தாவன்று. (இது இரணியகருப்பன் பாஞ்சராத்திரி என்பவர் பட்சம்).

௪-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.

பிரபஞ்சம் முயற்கொம்புபோல் இல்பொருளாயின் அதற்கு முக்காலத்தும் உற்பத்தி இல்லாதிருத்தல் வேண்டும். பிரபஞ்சத்திற்கு உற்பத்தி முதலியன காணப்படுதலால் அது இல்பொருளன்று, உள்பொருளே. (இது புத்தரை மறுத்தது).

உள்பொருளைச் செய்பவரின்றிச் செய்தொழில் மாத்திரம் இராதாகையால், உள்ளதாகிய பிரபஞ்சம் தோற்றுவிப்போனாகிய கர்த்தாவாலன்றி உண்டாகாது. (இது சாங்கியரை மறுத்தது.)

எது எதனில் ஒடுங்குமோ அது அதனின் உற்பத்தியாம் என்னும் ஏதுவினால், சங்கார கர்த்தாவாகிய அரனிடத்தில் ஒடுங்கிய பிரபஞ்சம் அரனிடத்திலிருந்தே மீளத் தோன்றும். (இது இரணிய கருப்பனையும் பாஞ்சராத்திரியையும் மறுத்தது).

ரு-வது—இயைபு.—

**உதாரண வெண்பா.**

இலயித்த தன்னிலில யித்ததாமலத்தா
லிலயித்த வாறுளதா வேண்டும்—இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

(அன்வயம்). இலயித்தது இலயித்ததன்னில் மலத்தால் ஆம். இலயித்தவாறு உளதா வேண்டும். இலயித்தது அத்திதியில் என்னின், அவையழியாது. அத்திதியும் ஆதியுமாம் அங்கு அழிவது.

(இ-ள்). இலயித்தது—ஒடுங்கியது, இலயித்ததன்னில்—ஒடுங்கிய பொருளினின்றும், மலத்தால்—மலம் காரணமாக, ஆம்—மீள உண்டாம், (அது) இலயித்தவாறு—ஒடுங்கினபடியே, உளதா வேண்டும்—மீள உண்டாக வேண்டும். இலயித்தது அத்திதியில் என்னில்—ஒடுங்கினது திதிகருத்தாவாகிய விண்டுவிடம் என்பையேல், அவை யழியாது—சர்வ பிரபஞ்சமும் திதி கருத்தாவிடம் ஒடுங்காது. அத்திதியும்—அந்ததிதி கருத்தாவாகிய விஷ்ணுவும், ஆதியும்—சிருட்டி கருத்தாவாகிய பிரமனும், அங்கு—யாவும் ஒடுங்குமிடமாகிய அரனிடத்தில் அழிவதாம்—ஒடுங்கிவிடுவார்கள். (எ-று.)

(விருத்தியுரை). இலயித்தது—முன்னே ஒடுங்கிய உலகம் (மீளத்தோன்றுங்கால்), இலயித்ததன்னில் ஆம் —ஒடுங்கிய விடத்தினின்றும் தோன்றுவதாம். (ஒடுங்கிய உலகம் ஏன் மீளத்தோன்றுமென்னில்), மலத்தால்—உலகம் மலத்தோடுங் கூடியிருத்தலால், கருமமலம் பரிபாகமாகும்பொருட்டு ஒடுங்கி, ஆணவமலம் பரிபாகமாகும் பொருட்டு மீளவுந்தோன்றும். (ஆனால், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக, வேறு பிரபஞ்சம் தோன்றும் என்னுமல், முன் ஒடுங்கின பிரபஞ்சமே மீளத்தோன்றும் என்பது எங்ஙனம் எனில்), இலயித்தவாறு உளதாவேண்டும் —எது எவ்வாறு நின்று ஒடுங்கிற்றோ, அதுஅவ்வொடுங்கியவாறே மீளத்தோன்றியுளதாதல்வேண்டும். இலயித்தது அத்திதியில் என்னின்—உலகம் ஒடுங்கியது அதற்கு முதற்காரணமாகிய மூலப்பிரகிருதி வடிவாகிய வாசுதேவன் என்னும் திதி கர்த்தாவிடத்தில் என்பையாயின், அவை அழியாது—நீ அவ்வாறு கொள்ளினும் மாயாகாரியத் தொகுதி முழுமையும் திதிகர்த்தாவிடம் ஒடுங்காது. மூலப்பகுதிக்கு மேல் வாசுதேவனுக்கு வியாபகமில்லாமையால், அதற்குக் கீழுள்ள ஏகதேசத்தனவாகிய நிவிர்த்தி பிரதிஷ்டாகலைகளைச் சார்ந்த தத்துவ புவனங்கள் மாத்திரம் அம்மூலப் பிரகிருதியில் ஒடுங்குமேயன்றி அவைகட்குமேற்பட்ட வித்தியாகலையைச் சார்ந்த அசுத்தமாயாதத்துவ புவனங்களும், அதற்கு மேற்பட்ட சாந்தி சாந்தியாதீத கலைகளைச்சார்ந்த சுத்தமாயாதத்துவ புவனங்களும் ஒடுங்காவாம். அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது—(ஆனுல் மாயாகாரியத்தொகுதி முழுவதும் எங்கே ஒடுங்கும் என்னில்) அது திதி கருத்தாவாகிய நாராயணனேடும் சிருட்டி கர்த்தாவாகிய பிரமனேடும் தான் தோன்றுதற்குக் காரணமாயுள்ள அந்த மகா சங்காரகர்த்தாவிடத்தே ஒடுங்கும். (எ-று)

பல கிராமங்கள் ஒரு ஜில்லாவிலும், பல ஜில்லாக்கள் ஒரு இராஜதானியிலும், பல இராஜதானிகள் ஒரு தேசத்திலும், பல தேசங்கள் ஒரு கண்டத்திலும், பல கண்டங்கள் ஒருஉலகத்திலும் அடங்கிநிற்றல்போல், தத்துவங்களும் ஒன்றினொன்று அடங்கியிருக்கும். தத்துவகர்த்தாக்கள் ஒவ்வொருவரும் தத்தமக்கு மேற்பட்ட தத்துவ கர்த்தாவினிடம் ஒடுங்கிவிடுவர். பிரமாவுக்குமேல் விஷ்ணு; அவருக்குமேல் உருத்திரர்; அவருக்குமேல் மகேசுரர்; அவருக்குமேல் சதாசிவர்; அவருக்குமேல் விந்து; அதற்குமேல் நாதம்; அதற்குமேல் சத்தி; அதற்கு மேல் சிவம். தத்துவாதீதராகிய சிவபெருமானே பிரமா விஷ்ணு உருத்திரர் என்னும் மூவர்க்கும் மேலான முதல்வர் என்று கைவல்லியம் தைத்திரீய ஆரணியகமுதலிய சுருதிகள் முழங்குகின்றன. இதனைத் திருவாசகம் "தேவர் கோவறியாத தேவதேவன் செழும்பொழில்கள் பயந்து காத்தழிக்குமற்றை, மூவர்கோனாய் நின்றமுதல்வன்" என்றருளிச்செய்தது. துரீயமூர்த்தியாகிய சிவபெருமான் கொள்ளும் நவவடிவங்களாகிய சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், மகேசுரன், உருத்திரன், மால், அயன், என்பவற்றுள், மகேசுரன் வரையில் அவருக்குச் சுதந்திர வடிவம். உருத்திரன், மால், அயன் ஆகிய இம்மூவரும் உயிர்வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். இம்மூவருள் மேற்பட்ட உருத்திரர் குணதத்துவத்திலிருந்து பிரகிருதி புவனுந்தம் சங்கரிப்பவர். இவரும் மகேசுர தத்துவத்தில் ஒடுங்கிவிடவேண்டியவர். இதனை யுணராது, சர்வசங்கார மூர்த்தியாகிய பரமசிவனை மூவருள் ஒருவராகிய உருத்திர மூர்த்தியாக எண்ணி, இடர்ப்படுவாரை நோக்கியே திருவாதவூரடிகள் "நம்மவரவரே—மூவரென்றே யெம்பிரானொடு மெண்ணி விண்ணுண்டு மண்மேல் தேவரென்றே யிறுமாந்தென்ன பாவந் திரிதவரே" என்று இரங்கிக் கூறியருளினர்.

**உதாரண வெண்பா**

*வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா*
*மத்தன்று ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்*
*வேட்டுவனுமைப்புழுப்போல்வேண்டுருவைத்தான்கொடுத்துக்*
*கூட்டானே மண்பேறுற் குளிர்ந்து.*

(இ-ள்) மண்குளிர்ந்து—நிலம்குளிர்ந்தபோது, வித்து உண்டு ஆ—(அதில்) வித்துஉளதாயிருக்க, மூலம் முளைத்தவா—அவ்வித்திலிருந்து முளைதோன்றியவாறுபோல், தாரகமாம் அத்தன்தாள் நிற்றல்—(மாயையானது) தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியினிடத்தே உள்ளதாய் நிற்றலால், அவர் வினையால் வித்தகமாம்—(அச்சத்தி) சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீடாக அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமல் பயக்கும் சதுரப்பாடுடையதாம். வேட்டுவன் ஆம் அப்புழுபோல்-வேட்டைவாளியெனப்படும் குளவியாதற்கு விரும்பும் புழுவிற்கு வேட்டைவாளியானது அப்புழு விரும்பிய வடிவத்தைக் கொடுக்குமாறுபோல், வேண்டு உருவை தான் கொடுத்து கூட்டானே—இறைவன் அவரவர்வேண்டும் உருவினைக்கொடுத்து அவ்வவ்வினைக்குத் தக்கபடி பயன்களைக்கூட்டுவன். (ஆதலால் அது கொண்டு அவன் சுதந்திரத்திற்கு இழுக்கென்னை?) (எ-று)

“ஆதலால் அதுகொண்டு அவன் சுதந்திரத்திற் கிழுக்கென்னை” யென்பது குறிப்பெச்சம். போல் அசை. ஏற்றலின் என்பது நிற்றல் என விகாரத்தாற்றொக்கது. ஒகாரம் எதிர்மறை.

சாங்கியர், “உலகம தனககு முதற்காரணமாகிய மாயையில் ஒடுங்குமேயன்றி, நிமித்தகாரணமாகிய கர்த்தா ஒருவன் உண்டெனக்கொள்ளினும் அவனிடம் ஒடுங்காது. எது எங்கு ஒடுங்குமோ அது அங்கிருந்தே உண்டாம் என்னும் முறைப்படி, மாயையில் ஒடுங்கிய உலகத்தை

மாயையே தோற்றுவிக்கும்; அதற்கு ஒரு கர்த்தா வேண்டுவதின்று'' என்பர். சாங்கியர் இவ்வாறு கூறுவது; மண்ணில் ஒடுங்கிய குடத்தை அம்மண்ணே மீளத் தோற்றுவிக்கும்; அதற்குக் குலாலன் ஒருவன் வேண்டாம் என்பதுபோலாம். குடம் உண்டானதற்கு மண் ஒரு காரணமும், தண்டசக்கரங்கள் ஒரு காரணமும், குலாலன் ஒரு காரணமுமாம். இம் மூன்று காரணங்களினல் குடம் உண்டாயிற்று. இவற்றுள், மண் முதற் காரணமும், தண்டசக்கரங்கள் துணைக்காரணமும், குலாலன் நிமித்தகாரணமுமாம். அதுபோலவே, உலகத்திற்கு மாயை முதற்காரணமும், சத்தி துணைக்காரணமும், சிவன் நிமித்தகாரணமுமாம். இம்மூன்று காரணங்களினல் உலகம் உண்டாயிற்று.

அன்றியும் முளைக்கு ஆதாரமாயிருப்பது வித்து. வித்துக்கு ஆதாரமாயிருப்பது நிலம். வித்தைப் போன்றது மாயை. முளையைப்போன்றது உலகம். நிலத்தைப்போன்றது சிவசக்தி. வித்திலிருந்தே முளை தோன்றினும், அவ்வித்துக்கு ஆதாரமாகிய நிலம் குளிர்ந்தாலன்றி முளை தோன்ருது. அதுபோல், மாயையிலிருந்து உலகம் உண்டாயினும், அம்மாயைக்கு ஆதாரமாகிய சிவசத்தி சங்கற்பித்தாலன்றி மாயை (சடமாகையால்) தானே உலகைத் தோற்றுவிக்காது. சத்தி சிவத்தினின்றும் வேருகாமையாலும், சத்தி சிவத்தில் ஒடுக்கம் ஆதலாலும் சிவனே உலகத்திற்குக் கர்த்தாவென்று துணியப்படும்.

முதல்வன் உலகத்தை ஏன் பலவேறு வகைப்படச் சங்கற்பித்துத் தோற்றுவித்தல்வேண்டும் என்னுஞ் சந்தேகம் நீங்குமாறு, வேட்டைவாளி உபமானம் கூறியவாரும்.

அத்தன்மையரான முதற்கடவுளர் பலர் உண்டெனக் கொள்ளல்வேண்டும். (இது அநேகேச்சுரவாதிகள் பட்சம்.)

சு-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு.

தேர்முதலாயின பலராற் செய்யப்படினும், அவரனைவரும் ஒருவன் ஏவல்வழி நின்றே செய்பவராகலானும், வேதத்தில் ஒவ்வோரிடங்களிற் காணப்படும் "நாராயணர் ஒருவரேயிருந்தார்", "பிரமா முதற்கண்ணே இருந்தார்", "இந்திரனே உன்னில் மிக்கவனில்லை" "தேவர்களுக்கெல்லாம் முதன்மையாயுள்ளவன் அக்கினி", "இறந்ததும் நிகழ்வதுமாகிய உலகத்திற்கு ஆன்மாவாயுள்ளான் சூரியன்" என்பனவாதியாய வாக்கியங்களில் நாராயணன் முதலியோரைக் காரணமென்றது, ஒருவன் ஏவல்வழி நின்று செய்யும் குயவன் கம்மியன் முதலியோரைப்போல் அவாந்தர காரணமாதல்பற்றியே யாகலான், அவையெல்லாம் (அரசனாற் கட்டிய கோயிலைச் சிற்பியாற் கட்டிய கோயில் என்பதுபோல்) ஆகுபெயரால் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்தி நிற்குமாதலானும், செய்தும் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கும் முதற் கடவுள் சங்காரகர்த்தாவொருவனே.

ரு-வது—இயைபு.

**உதாரண வெண்பா.**

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றென்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

(இ-ள்). அவை - அச் சேதனப் பிரபஞ்சத்தொகுதி, ஒன்று அலா ஒன்றுள்—(உருவும் அருவும் என்னும் இருவகைப் பிரபஞ்சத்துள்) ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொரு

ளாலே, உளது ஆகி—சிருட்டிக்கப்பட்டு, நின்றவாறு—திதிப்பட்டவாறே, ஒன்று அலா ஒன்றில்—அந்தப் பரம் பொருளின் கண்ணே, ஈருதல்—ஒடுங்குதலால், ஒன்று அலா ஈறே முதல்—அச்சங்காரக் கடவுள் ஒருவனே உலகிற்கு முதற் கடவுள். (ஆனுல், முத்தியடைந்த ஆன்மாக்கள் சுட்டுணர்வின்றிச் சிவத்தோடு சமமாயிருக்கும் என்று வேதாகமங்கள் கூறுவதனுல் அவைகளும் முதற் கடவுளராகாவோ வெனில்), அதனின்—அப்பரம் பொருளைப் போலவே, ஈறலா ஒன்று—அழிவின்றி நித்தமாயிருக்கும் சேதனப் பிரபஞ்சமானது (அதாவது உயிர்களானவை), அங்கு — வீடுபேற்றின் கண்ணும் (அதாவது முத்தியிலும்), பலவாறே தொழும்பு ஆகும்—பல வழியாலும் பரம்பொருளுக்கு அடிமையாம் (முதற்கடவுளாகாது.) (எ-று.)

மாயையின் காரியமாகிய அசேதனப் பிரபஞ்சம் சடமாகையாலும், சேதனப் பிரபஞ்சமாகிய உயிர்கள் பாசத்தாற் பிணிப்புண்டு சுட்டியுணர்வதாயிருத்தலாலும், இவ்விருவகைப் பிரபஞ்சமாகிய உலகம் தானே தன் இச்சையின்படி தோன்றி நின்றழியமாட்டாது. ஆதலால், இவைகளைத் தோற்றி நிறுத்தி யழித்தற்கு இவைகளுக்கு வேருய் ஒரு முதற் கடவுளுண்டென்பது பெறப்பட்டது. படவே, உலகம் விசித்திரமாய்க் காணப்படுதலினுல், இவ்வாறு நடத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும், அளவிலாற்றலும், பேரருளும், சுதந்திரமும் முதலிய நிரதிசய குணங்களுடையவன் என்பதும் பெறப்பட்டது. இத்தன்மையனுகிய கடவுள் ஒருவனே போதுமாயிருக்க பலர் உண்டெனக் கொள்வது குற்றமாம். "இலக்கணத்துள் ஒருவாற்ருனும் வேற்றுமையில்வழி இலக்கியம் பல வாதல் செல்லாது." அதாவது, ஒரு சிறிதும் வேற்றுமையின்றி எல்லா விலக்கணங்களினுலும் தம்முள் ஒத்திருக்

கும் வெவ்வேறு பொருள்கள் ஒருகாலத்தும் இரா. ஆதலால், உயர் ஒப்பில்லாத முற்றுணர்வு, அளவிலாற்ற லுடைமை முதலிய இறைமைக் குணங்களையுடைய கடவுளர் பலர் உண்டெனக்கொள்வது மடமையாகும். இக் கருத்தை விளக்கும் பொருட்டே முதற்கடவுளை "ஒன்றலா வொன்று" என்று கூறியருளினர்.

இருள் நீங்கியவிடத்தும் கண்ணனது சூரியனின்றிக் காணுதவாறுபோல, மலம் நீங்கிய முத்திநிலையிலும் ஆன்மாவானது தன்னுடன் முதல்வன் வேறறக் கலந்து அறிவித்தாலன்றி யறியாது. ஆன்மாவானது எக்காலத்தும் படிகம்போல் சார்ந்ததன் வண்ணமாயிருக்கும் இயல்பினதாதலால், அது முத்தியிலும் சிவத்தைப் போல் தனித்து நிற்கும் இயல்புடையதன்று. அது முத்தியில் சிவத்தோடு கலந்து சிவாநந்தம் அநுபவித்தல் மாத்திரமன்றி, சிவத்தைப்போல் பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் உரிமையுடையதன்று. அன்றியும், ஆன்மா முத்திநிலையில் சிவத்தோடு சமவியாபகமடையப் பெறினும், விளக்கொளியுள் அடங்கிய கண்ணொளிபோல், சிவ வியாபகத்திற்குள் வியாப்பியமாய் அடங்கிநிற்கும். இக்காரணங்களால் சேதனப் பிரபஞ்சம் பலவழியாலும் முத்தியிலும் முதல்வனுக்கு அடிமையேயாம் என்றுணர்க. (இதனல் ஆன்மாக்கள் முத்தியில் பஞ்சகிருத்தியஞ் செய்யும் என்று கூறும் சிவசமவாதிகள் மறுக்கப்பட்டவாறு காண்க.)

ஆன்மாக்கள் பெத்தநிலையில் மாத்திரமன்றி முத்திநிலையிலும் அடிமைகளென்பதை "நற்சங்க வெண்குழையோர் காதிற் கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே" "மீளாவடிமை யுமக்கே யாளாய்ப் பிறரைவேண்டாதே" என்னும் தமிழ் வேதப் பனுவல்களாலும் உணரலாகும்.

## முதற்சூத்திரத்தின் தொகைப்பொருள்

இதனால் "உலகம் தோன்றிநின்று அழியுமென்பது காட்சிப்பிரமாண முதலியவற்றால் அறியக்கூடாமையால் அது நித்தப்பொருளே" என்னும் மீமாஞ்சகர் உலோகாயதர்கள் கொள்கையையும், "உலகம் உள்பொருளாகாமல் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றி யழியும்" என்னும் புத்தர் கொள்கையையும், "உலகம் உள்பொருளாயின் அது ஒன்றேயமையும்; இறைவன் வேண்டா" என்னும் சாங்கியர் கொள்கையையும், "காத்தற் றொழிலைச் செய்யும் விஷ்ணுவே முதற் கடவுளாதல்வேண்டும்" என்னும் பாஞ்சராத்திரர் கொள்கையையும், "அதிவிசித்திரமாகிய உலகம் ஒருவராற் செய்தல் கூடாமையால், அதைப் படைக்கப் பல கடவுளர் வேண்டும்" என்னும் அநேகேச்சுரவாதிகள் கொள்கையையும்; "ஆன்மாக்கள் மலம் நீங்கிய முத்திநிலையில் பஞ்சகிருத்தியஞ் செய்வர்" என்னுஞ் சிவசமவாதிகள் கொள்கையையும் மறுத்துச் சித்தாந்தஞ் செய்து முதற்கடவுளின் உண்மைநிலை நாட்டப்பட்டது.

### இரண்டாஞ் சூத்திரம்

**அவையே தானே யாயிரு வினையிற்**
**போக்கு வரவு புரிய வாணையி**
**னீக்க மின்றி நிற்கு மன்றே.**

(இ-ள்.) முதற் சூத்திரத்தினாற் சித்தாந்தஞ் செய்யப்பட்ட சங்காரகாரணனாகிய சிவபெருமான், அவையே ஆய்-அவ்வுயிர்களேயாய், தானே ஆய்—அவைகளுக்கு வேறுமாய், அவையே தானே ஆய்—உடனுமாய் (நின்று), ஆணையின்—தமது ஆணையினால், (அதாவது, ஆணையென்னும் பரியாயப் பெயருடைய சிற்சத்தியால் வரும்), இருவினையின்— (நல்வினை தீவினைகள் என்னும்) இரு

வினைகளால், போக்கு வரவு புரிய—அவ்வுயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும்வண்ணம், ஆணையின்—அவ்வாணையினின்றும், நீக்கமின்றி—பிரிப்பின்றி, நிற்கும்—(சமவேதமாய்) நிற்பன் (எ-று).

"அவையே தானேயாய்" என்பதனை அவையேயாய், தானேயாய், அவையேதானேயாய் என்று இரட்டுற மொழிந்துகொள்க. "ஆய்-புரிய-நிற்கும்" எனவே, சிவபெருமான் உயிர்களைப்போற் கரணத்தாற் செய்யாமல் சங்கற்பமாத்திரத்தாற் செய்வர் என்பது பெறப்பட்டது. "ஆணையின்" என்பதனைச் சிங்கநோக்காய் "இருவினை" என்பதன் முன்னும் வைத்துப் பொருளுரைக்க. "அன்றே" என்பது அசை; இதற்கு அனாதியே இவ்வாறு நிற்கும் என்று பொருள் கூறினும் அமையும். "அவை" எனச்சுட்டியது முதற் சூத்திரத்திற் கூறிய சேதனப் பிரபஞ்சத்தை (அதாவது உயிர்களை).

சிவபெருமான் கலப்பினால் உடலின் உயிர்போலிருத்தலால் உயிர்களேயாயிருக்கின்றார் என்றும்; பொருட்டன்மையால் கண்ணின் அருக்கன்போலிருத்தலால் உயிர்களுக்கு வேறாயிருக்கின்றாரென்றும், உயிருக்கு உயிராயிருக்குந் தன்மையால் கண்ணொளியின் ஆன்மபோதம்போல் உடனுமாய் இருக்கின்றார் என்றும் சொல்லப்பட்டது. இவை பின்வருவனவற்றால் இன்னும் தெளிவாய் விளங்கும்.

இச் சூத்திரம் நான்கு அதிகரணங்களை யுடையது. அவை வருமாறு:—

க-வது—அவையே தானேயாய்

உ-வது—ஆணையின் இருவினையின்

ஙு-வது—போக்கு வரவு புரிய

சு-வது—ஆணையின் நீக்கமின்றி நிற்குமன்றே.

## இச்சூத்திரத்தின் சூர்ணிகை

க-வது—அரன் உயிர்களிரண்டற நிற்பன்.

உ-வது — உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

ந-வது—உயிர்கள் அச்சுமாறியே பிறக்கும்.

ச-வது—அரன் சர்வ வியாபகன்.

## இச்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது. ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் ருனேயாய் நிற்கும் என்றது, அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு.

உ-வது. இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வ ஞணையின் வருமென்றது, ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவன தாக்கினையாகலான்.

ந-வது. இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது, தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்.

ச-வது. இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது, அவன் ஏகாநேக மிரண்டுமின்றிச் சர்வவியாபியாய் நிற்றலான்.

## இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் பத்து.

இனி இச்சூத்திரத்தின் பொருளை ஒவ்வொரு அதிகரணமாக, அவ்வவற்றின் சூர்ணிகை வார்த்திகங்களோடும் உதாரண வெண்பாக்களோடும் சேர்த்து விளக்குவாம்.

## முதலதிகரணம் — அவையே தானேயாய்

(இ-ள்) முதல்வன் உயிர்களேயாயும், அவைகளுக்கு வேருயும், உடனுயும் இரண்டற நின்று. (எ-று.)

இவ்வதிகரணத்தில் "தன்றைற் கூறப்படும் பொருள்" முதலிய ஐந்தும் வருமாறு:—

க-வது. தன்றைற் கூறப்படும் பொருள்:—

அரன் உயிர்களில் இரண்டற நிற்பன்.

உ-வது. ஐயப்பாடு:—

முதல்வனும் உயிர்களும், அபேதமோ, பேதமோ, பேதாபேதமோ?

ந-வது. பிறர்கூறும பககம்:—

(1) முதல்வனும் உயிர்களும் பொன்னும் பொன்னுலாகிய பணியும்போல் அபேதமாம். (இவ்வாறு கூறுவோர் மாயாவாதிகள்.)

(2) முதல்வனும் உயிர்களும் ஒளியும் இருளும் போல் பேதமாம். (இவ்வாறு கூறுவோர் மாத்துவர்.)

(3) முதல்வனும் உயிர்களும் சொல்லும் பொருளும் போல் பேதா பேதமாம். (இவ்வாறு கூறுவோர் பாஞ்சராத்திரிகள்.)

ச-வது. மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபு:—

முதல்வன் கலப்பினுல் உடலின் உயிர்போல் அவ்வுயிர்களேயாய், பொருட்டன்மையால் கண்ணின் அருக்கன்போல் அவற்றின் வேறுமாய், உயிர்க்குயிராதற் றன்மையால் கண்ணொளியின் ஆன்மபோதம் போல் உடனுமாய் நிற்பன். இவ்வாறு அவன் நிற்கும் நிலேயே அத்துவிதநிலேயென்று வேதம் கூறும்.

ரு-வது. இயைபு—

உதாரண வெண்பா.

கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள
மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்—கொட்டி
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா
தவனுளமா யல்லனுமா மங்கு.

(இ-ள்.) உள்ளம்—உயிரானது, கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டு—நரம்பு முதலியவற்றாற் கட்டப்படும் உடம்பினையும் ஐம்பொறி முதலிய கருவிகளையுங் கைக்கொண்டு நின்று, இட்டது ஒரு பேர் அழைக்க—உடம்புக்கு இட்ட பெயரால் பிறர் அழைக்க, என் என்றுங்கு—ஏன் என்பதுபோல், ஒட்டி—முதல்வன் உயிர்களின் அபேதமாய் ஒட்டி நிற்போனும். அங்கு—அதுபோல், அவன் உளம் ஆகில்லான்—அம்முதல்வன் உயிராகமாட்டான். உளம் அவனுமாட்டாது—உயிர் முதல்வனுகமாட்டாது. அவன் உளமாய் அல்லனும் ஆம்—(அவ்வாறாயினும்) முதல்வன் உயிராயும் அதின் வேறாயும் நிற்பன் (எ-று.)

ஒட்டி என்பது பெயர் - வினையெச்சமாகக் கொள்ளின் சிறப்பும்மை விரித்துரைக்க - ஒட்டுதல்—பொருந்துதல்.

உயிரானது உடம்போடு கூடி உடம்புவேறு தான் வேறு என்னுதபடி. (அத்துவிதமாய்) கலந்து, உடம்புக்குண்டாகும் ஆக்கக் கேடுகளைத் தனக்குண்டாவனவாக அனுபவித்து, உடம்புக்கிட்ட பெயரால் பிறர் அழைக்கத் தான் ஏன் என்று வருவதனாலும், பலர் கூடியிருக்குமிடத்தில் உடம்புக்கிட்ட பெயரால் ஒருவனை யழைக்கின், அழைக்கப்பட்டவன் ஒருவனே ஏன் என்று வருதலினாலும், அவன் அவ்வாறு வருதற்கு வேறொருகாரணம் காணப்படாமையாலும், அருத்தாபத்தியளவையால்,

அவ்வுயிர் உடம்பென்றும் தானென்றும் வேற்றுமை யின்றி அபேதமாய் நிற்றல் பெறப்பட்டது. அப்படி நிற்பினும் உயிர் உடம்பாகாது; உடம்பு உயிராகாது. உயிர் உயிரே; உடம்பு உடம்பே. அதுபோல், முதல்வன் உயிரோடு கலப்பினல் அவைவேறு தான்வேறு என்னுத படி அபேதமாய் நின்றும் அவ்வுயிராகமாட்டான். உயிர் முதல்வனுகமாட்டாது. முதல்வன் முதல்வனே. உயிர் உயிரே. அவ்வாருயினும் முதல்வன் உயிராயும் அதனின் வேருயும் நிற்பன். உயிர் அங்ஙனம் நில்லாது.

ஒரு பொருளே அபேதம், பேதம், பேதாபேதம் என் னும் மூவகை இயல்பையும் உடைத்தாதல் எங்ஙனம் கூடும் என்னும் சந்தேகம் உண்டாகாதவாறு இவ் வெண்பா உடலுயிர் உவமையால் முதல்வனின் அபேத நிலை இத்தன்மைத்தென விளக்குகின்றது.

**உதாரண வெண்பா**

ஒன்றென்ற தொன்றேகா ணென்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா—ணென்றின்று
லக்கரங்க ளின்று மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு (உ)

இவ்வெண்பா, வேதமானது அத்துவிதம் என்றும் ஏகம் என்றும் கூறவும், அதற்குமாருக பேதபடக்கூற லாமோ என்பார்க்கு, வேதம் அவ்வாறு கூறுவதின் கருத்து இத்தன்மைத்தென விளக்கி, இறைவன் உயிர் களோடு (தானேயாய்) அபேதமாய் நிற்கும் இயல்பை உதாரணத்தால் வலியுறுத்துகின்றது.

(இ-ள்.) இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண் —வேதம் ஒன்று என்பதற்குப்பொருள் ஒன்றென்பதே யாம். பதி ஒன்றே—(அதற்குத் தாற்பரியம்) பதிப் பொருள் ஒன்றே (இரண்டில்லை என்பதாம்). ஒன்று என்ற நீ பசு ஆம் காண்—(இதனையறியாது) ஒன்றென்று

சொல்லுகிற நீ (அப்பதிப்பொருளின்வேருய) பசுவென் றறிவாயாக. (பதியும் சேதனம், யானும் சேதனமாக என்னைப் பசுவென்பதென்னையெனில்), பாசத்தோடுளை —நீ மலத்தோடு கட்டுண்டிருக்கின்ருய் (ஆதலால் நீ பசு என்னப்பட்டாய்). (யானும் பதியும் வெவ்வேறு பொருள் களானல், வேதம் "பிரமம் இல்லையாயின் ஒருபொருளும் இல்லை'' என்று கூறுவதேன்? என்னில்), அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம்—அகர உயிரில்லை யாயின் எழுத்துக்கள் இல்லையாம், என்னும்—என்று சொல்லுகிற, இக்கிரமத்து—இம்முறைமைபற்றி, ஒன்று இன்று என்னும்—(வேதம் பிரமப்பொருள் இல்லையாயின்) ஒருபொருளும் இல்லை யென்ருேதும். (எ-று).

வேதம் ஏகம் என்றும் அத்துவிதம் என்றும் கூறுவ தனை "ஏக ஏவருத்ரோ நத்விதீயாயதஸ்தே'' என்னும் யசுர்வேத வ்சனத்தாலும், "ஏகோஹி ருத்ரோ நத்விதீ யாயதஸ்தே'' என்னும் ஸ்வேதாஸ்வதர உபநிஷத்தாலும், "ஏகமேவாத்விதீயம்'' என்னும் சாந்தோக்கிய உபநிஷத் தாலும் "சாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம்'' என்னும் மாண்டூக்ய உபநிஷத்தாலும் உணர்க.

"நத்விதீயாய'' என்னும் வடமொழியின் முதலிலுள்ள நகரமெய் நீங்கிவிட அது "அத்விதீயாய'' என நிற்கும். நகரமும் அகரமும் ஒருபொருளுடையனவாம். நகரம் நீங்கிவிடலும், அம்மெய்யின்மேல் நின்ற அகரம் இன்மை, அன்மை, மறுதலை என்னும் முப்பொருளையும் உணர்த் தும். இவற்றுள் மாயாவாதிகள் இன்மைப்பொருள் ஒன்று மாத்திரம் உரைத்து அத்துவிதம் என்னுஞ் சொல்லுக்கு "இரண்டில்லை, ஒன்றே'' என்று பொருளு ரைப்பர். அவ்வாறு பொருளுரைப்பது குற்றமாம் என்ப தனை விளக்கவேண்டி நமது மெய்கண்டநாதர்,

"அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு" என்று வார்த்திகம் அருளிச்செய்தனர்.

இவ்வார்த்திகத்தின் பொருள் வருமாறு:— அத்துவிதம் என்ற சொல்லின் நகரமானது இன்மை அன்மை மறுதலை என்னும் முப்பொருளுணர்த்தும். அவற்றுள் இன்மைப் பொருளைக்கொண்டு, அத்துவிதமென்ற சொல்மாத்திரத்தாலேயே ஒருபொருள் என்பது பொருத்தமாம் என்று சொல்லில், ஒருபொருள் தானே தன்னை ஒன்று என்று சொல்லவேண்டுவதில்லை. ஆதலால் அவ்வாறு சொல்லும் பொருள் வேறுண்டென்பது பெறப்படும். அன்றியும், எண்ணுப்பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருளையே யுணர்த்திப் பொதுமையில் நிற்பதன்றி, ஏனைச்சொற்களின்மேல் வந்த நகரம்போல் இன்மை மறுதலைப் பொருள்களை யுணர்த்தாமையினுல் அத்துவிதம் என்ற சொல்லே வேறு காரணம் வேண்டாது வேறன்மையை யுணர்த்தும். இதனுல் ஆன்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்குமென்பது கொள்ளற்பாற்று (எ-ம்).

இறைவனும் உயிரும் வெவ்வேறு பொருள்கள் என்பதனை யுணராது, ஒரு பொருளே என்று மயங்கி "நான் ப்ரஹ்மம்" எனப்பொருள் பயக்கும் "அஹம் ப்ரஹ்மம்" என்றுகூறி இடர்ப்படுவார்க்கிரங்கியே, ஈசுர் வேதமுடிவு "அஹம் ப்ரஹ்மம்" என்று கூருது "நான் ப்ரஹ்மம் ஆகின்றேன்" என்னும் பொருள்தரும் "அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்று கூறும். வேதங்களிற் சிறந்த சாம வேதத்தின் முடிவு "அது நீ" என்று பொருள் தரும் "தத்வம்" எனக்கூருது, "அது நீயாகின்ருய்" என்று பொருள்தரும் "தத்வமஸி" என்று கோஷிக்கும். சிவம்

ஆத்துமாவின் அறிவினுள் அறிவாய் விளங்கும் ஒற்றுமையை நோக்கி இருக்குவேதத்தினந்தம் "ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்" என்றும், ஆத்மா சிவசக்தி யாத்மகமாயிருத்தலைப்பற்றி அதர்வணசிரசு "அயமாத்மாப்ரஹ்மம்" என்றும் வழங்கா நிற்கும். அந்நான்கு மகாவாக்கியங்களும் சிவஜீவர்கள் ஒன்றேயென்றும், இரண்டே யென்றும் பொருள்பயத்தலின்றி, ஒன்றுமிரண்டுமென்றி நிற்கும் நிலையின வென்று கூறுநிற்கும்.

**உதாரணவெண்பா**

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்ன
தத்துவித மென்றறையு மாங்கு.

இவ்வெண்பா வேதத்திற் கூறப்பட்டுள்ள அத்துவிதம் என்னும் சொல்லின் உண்மைப் பொருளை உதாரண வாயிலாக விளக்கி, இறைவன் உயிர்களோடு "அவையே தானேயாய்" (அதாவது பேதாபேதமாய்) நிற்கும் முறைமையை வலியுறுத்துகின்றது.

(இ-ள்). பண்ணையும் ஓசையும் போல—பண்ணும் அதனின் வேறன்று யெண்ணப்படும் இசையும்போலவும், பழமதுவும் எண்ணும் சுவையும்போல்—பழமும் அதனின் வேறன்று யெண்ணப்படும் சுவையும்போலவும், எங்கும் ஆம் அண்ணல் தாள்—எங்கும் வியாபகமாயிருக்கும் முதல்வன் திருவருள், அத்துவிதம் ஆதல்—உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான், அருமறைகள் ஒன்று என்னது—அரிய வேதங்கள் ஏகம் என்று கூறுவதோடொழியாது—அத்துவிதம் என்று ஆங்கு அறையும்—அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும் (எ-று).

அதாவது, வேதமானது பதிப்பொருள் ஒன்றே என்பதனை ஏகம் என்னுஞ் சொல்லாலும், அது உயிர்க

ளோடு இரண்டறக் கலந்து நிற்றலை அத்துவிதம் என்னும் சொல்லாலும் விளக்கிற்றென்பதாம். இதனால் வேதத்திற் கூறப்பட்ட "ஏகம், அத்துவிதம்" என்னுஞ் சொற்களுக்குப் பொருள் "பிரமப் பொருள் ஒன்றேயுளது, இரண்டாவது பொருளில்லை" என்று கூறும் மாயாவாதக் கொள்கை மறுக்கப்பட்டது. (இதனை வேறோரிடத்தில் விரித்துக் கூறுவோம்).

**உதாரண வெண்பா.**

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப வின்று.

இச்சூத்திரத்தின் முதல் மூன்று உதாரண வெண்பாக்களுள் முதல் வெண்பாவினால் முதல்வன் உயிர்களோடு "அவையேயாய்" (அபேதமாய்) நிற்றலையும், இரண்டாவது வெண்பாவினால் "தானேயாய்" (பேதமாய்) நிற்றலையும், மூன்றாவது வெண்பாவினால் "அவையே தானேயாய்" (பேதாபேதமாய்) நிற்றலையும் வெவ்வேறு உவமைகளால் விளக்கி, இப்போது நான்காவது வெண்பாவினால் முதல்வன் அம்மூவகை யியல்பையும் ஒருங்கே யுடையவனாயிருத்தலை ஒரு உவமையால் விளக்குகின்றார்.

(இ-ள்) உருக்கி அரக்கோடு சேர்த்தி அணைத்த அக்கல்போல்—அரக்கை யுருக்கி அதனோடு சேர்த்து அணைத்த கற்பொடியானது அவ்வரக்கினோடு வேறறக் கலந்து நீக்கமின்றி நிற்றல் போல், உடங்கு இயைந்து பிரிப்பு இன்றி நின்று—(முதல்வன் உயிர்களோடு) ஒருங்கு கூடி நீக்கமின்றி உடனாய் நிற்றலால், தானே உலகாம்—தானேயாம், உலகேயாம், தானே யுலகேயாம் (அதாவது பேதமும், அபேதமும், பேதாபேதமுமாம்). (ஆனால்

"யானே எல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றேன்" என்று உயிர்களும் தாம் உணர்ந்த அநுபவத்தைக் கூறுமென வேதாகமங்கள் முழங்குகின்றனவே, அதனால் உயிர்களும் முதல்வன் போலவே அபேதமாயும், பேதமாயும், உடனாயும் நிற்கும் இயல்பையுடையனவோ என்னில் அப்படியன்று) தமியேன் உளம்புகுதல்—அம்முதல்வன் பாசக்கூட்டத்தினின்றும் நீங்கித் தனியாய் நின்ற என் உள்ளத்தில் சோகம் பாவனையாற் புகுந்து வேற்றுமை யின்றித் தோன்றலால், யானே உலகு என்பன் இன்று—யானே உலகெல்லாம் என்பேனாயினேன் இம் முத்திக் காலத்து (ஆகையால் உயிர்களும் அவ்வாறு நிற்கும் இயல்புடையன வன்றாம்) . (எ-று).

கலப்பாய் நிற்றலால் உலகேயாம் என்பார் "உடங்கியைந்து" எனவும், பொருட்டன்மையால் வேறு நிற்றலால் தானேயாம் என்பார் "நின்று" எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயுலகாம் என்பார் "பிரிப்பின்றி" எனவுங் கூறினார்.

சிவபெருமான் உலகுயிர்களோடு அவையேயாயும் வேறேயாயும் உடனாயும் நிற்றலைத் தமிழ்வேதம்,

> ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண் குணமூன்றாய்
> மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்
> யாறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்
> வேறாயுட னானிடம் வீழிம் மிழலையே.

என்று முழங்குகின்றது.

"அரக்கினோடு சேர்ந்த கற்பூரணமானது அரக்கினியல்பை யடைந்தவாறு போல, எனது ஆன்மாவிற் சிவபெருமானைக் கண்டு இவரை உலகமேயாயுள்ளார் என்று கூறுகின்றேன்" என்று ஞானாவரண பாஷ்யத்திற் கூறப்பட்டது.

நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன் என்றும், நான் பிரமமாயிருக்கின்றேன் என்று எவன் அறிகின்ருனே அவன் இவையெல்லாம் ஆகின்ருன் என்றும் வாமதேவரிஷி கூறினுர் என்று பிருகதாரணியம் கூறுகின்றது. காணப்படுவதும் காணப்படாததுமாகிய ஈதெல்லாம் என்னுல் வியாபிக்கப்பட்டன; நானே உலகத்துக்கு நாதன், என்னிலிருந்தே அனைத்தும் பிரவிர்த்திக்கின்றன; நானே பிரமம்; நானே அநக்ஷரமாக அறியற்பாலன் என்று சர்வ ஞானேத்தரம் உயிர்கள் மேல் வைத்துக் கூறுகின்றது. இவ்வாறு வேதாகமங்கள் பல விடங்களில் கூறுவதனுல் ஆன்மாக்களும் சிவபெருமானைப் போலவே அபேதமாயும் உடனுயும் நிற்கும் இயல்பினையுடையனவோ வெனில், அப்படியன்று. பாசக்கூட்டத்தினின்றும் நீங்கித் தனியாய் நின்ற ஆன்மாக்களின் அகத்தில் சோகம்பாவனை யெனப்படும் சிவோகம்பாவனையால் சிவபெருமான் புகுந்து வேற்றுமையின்றித் தோன்றுதலால் அவ்வாறு கூற நேர்ந்ததெனக.

ஆனுல், வேதாகமங்களில் "பிரமாகம்" (அதாவது பிரமம் நான்) என்றும், "சிவோகம்" (அதாவது சிவன் நான்) என்றும் அத்துவிதபாவனை செய்யும்படி விதிக்கப்பட்டிருத்தல் யாது காரணத்தாலெனின் கருடனும் மாந்திரிகனும் வெவ்வேருயிருந்தும் கருடோகம் என்னும் அத்துவித பாவனையானது விட நிவிர்த்தியின் பொருட்டு வேண்டப் படுதல்போல், பிரமப் பொருளாகிய சிவபெருமானும் ஆன்மாவும் வெவ்வேறு பொருள்களாயிருந்தும் ஆன்மாக்கள் மல நிவிர்த்தி யடைந்து பரசிவத்துவம் எய்துமாறு வேதாகமங்களில் அத்துவிதபாவனை விதிக்கப்பட்டதென்க.

இவ்வதிகரணத்தால், முதல்வனும் உயிர்களும் "பொற்பணி போல் அபேதம்" என்று ஏகான்மவாதி

களும், "இருளும் ஒளியும் போல பேதம்" என்று மாத்துவரும், "சொல்லும் பொருளும்போல் பேதாபேதம்" என்று வைணவர்களும் பிணங்கிக் கூறுவதை மறுத்து, முதல்வனும் உயிர்களும் "உடலும் உயிரும்போல் அபேதமும்" "கண்ணும் கதிரவனும் போல் பேதமும்" "அறிவும் கண்ணொளியும் போல் பேதாபேதமும்" ஆகிய இம் மூவகை இயல்போடு நிற்றலாகிய அத்துவித உண்மை சித்தாந்தஞ் செய்யப்பட்டது. இதனை உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த சிவப்பிரகாசத்துள்ளும்,

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிரிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றும்.

என்று கூறியிருத்தலாலும் தெளிக.

### இரண்டாம் சூத்திரம்—இரண்டாம் அதிகரணம்
### ஆணையினிருவினையின்

(இ-ள்.) உயிர்களுக்கு இருவினை முதல்வனாணையினால் வரும். (எ-ம்)

இதில், க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்:—
உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.
உ-வது—ஐயப்பாடு:—

புனருற்பவஞ் செய்யுங்கால் முதல்வனுக்குத் துணைக் காரணமுதலியன வேண்டப்படுமோ? வேண்டப்படாவோ?

ந-வது—பிறர் கூறும் பக்கம்:—

துணைக்காரணம் வேண்டப்படின் முதல்வனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றலுக்கும் இழுக்காய் முடியுமாக

லான், முதல்வனுக்குத் துணைக்காரணம் வேண்டா. (இவ்வாறு கூறுவோர் பரிணமவாதிகள்).

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:—

ஒரு பட்டணத்தைக் காக்கும் அரசன் தனது தண்டத் தொழிலை ஓர் அதிகாரியிடம் வைத்து உலகியலை நடத்தல் போல், ஆன்மாக்கள் புண்ணிய பாவங்களை யனுபவிக்க முதல்வன் தனதாணையை இருவினைகள் மாட்டு வைத்து நடாத்துவன். அதனால் இருவினை முதல்வ னாணையினாலே வருமெனப்பட்டது. படவே, முதல்வன் சுதந்திரத்திற்கும் அளவிலாற்றலுக்கும் இழுக்கில்லை யென்பது பெறப்பட்டது.

ரு-வது இயைபு:— உதாரண வெண்பா.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

இது, வினை ஒன்று உண்டு என்பதற்கும், அதுவே உயிர்க்குப் பயனாய்வரும் என்பதற்கும், மறுசெனனத்தில் வினை ஏறும் என்பதற்கும், அது முதல்வனையின்றி யமையாது என்பதற்கும் பிரமாணம் கூறுகின்றது.

(இ-ள்.) உள்ளதே தோற்ற—(முதற் சூத்திரத்தினால் இல்லது தோன்றாது என்பது பெறப்பட்டமையின்) முன் உள்ளதாகிய புண்ணிய பாவம் என்னும் இருவகை யான சஞ்சிதவினையே தன் பயனாகிய இன்ப துன்பங்களை யும், அவைகளையநுபவித்தற்குரிய இடமாகிய உடம்பை யும் தோற்றுவிக்க, உயிர் அவ்வுடலின் அணையும்— உயிரே அவ்வுடம்பிற் பொருந்தி இருவினைகளை யனுபவிக் கும். (உடல் சடப்பொருளாகையால் அவைகளை யனுபவிப்பதில்லை.) ஆனால், முன் வினையானது அனு

பவிக்கப் பட்டொழிந்தால் மறுபிறவியாகிய மேலைக்கு வினை எவ்வாறு உண்டாகும் எனில், முன் செய்வினை உள் அடைவே உள்ளதாம்—முன் செய்த வினை அநுபவித்தற்கேதுவான முறைமையிலே மேலைக்கு வினையுளதாம். (அதாவது, முன் செய்த வினையை அநுபவிக்கும் போது அதற்குத் துணைக்காரணமாய் உண்டாகும் விருப்பு வெறுப்புக்களே மறுபிறப்புக்கு வினையாய் ஏறும் என்பதாம்.) அப்படியானால், அந்த வினை ஒன்றே போதுமாயிருக்க, முதல்வன் ஏதன் பொருட்டோ வெனில், செய்பவர் செய்தி பயன் விளைக்கும் செய்யே போல்—உழவர் செய்யுந் தொழிலுக்குத் தக்க பயனை விளைவிக்கும் விளை நிலம் போல் (அதாவது, விளை நிலம் விளைவிப்பதன்றி அத்தொழில் தானே விளைவிக்கமாட்டாததுபோல்) வள்ளலவன் செய்வன்—(உணவும் வித்துமாய் ஆதிதொடுத்து முறையே வரும் பிராரத்தவினை ஆகாமிய வினை யென்பவற்றை) முதல்வனே அவ்வுயிர்களுக்குக் கூட்டுவன், செயல் சென்று அணையா—(அவ்வாறன்றி) வினைகள் தாமே போய் உயிர்களுக்குப் பயன்களாக அடையா. (எ-று).

தற்பயன் குறியாது, வேண்டுவார் வேண்டியவாறே ஈயும் அருளுடையவனாதலால், முதல்வனை "வள்ளல்" என்றனர். உள் அடைவு—உள்ளுதற்கு ஏதுவாகிய அடைவு (அதாவது அநுபவித்தற் கேதுவாகிய முறைமை).

**உதாரண வெண்பா**

அவ்வினையைச் செய்வதினி லவ்வினைஞர் தாஞ்சென்றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ராங்கு.

இது, இருவினை சடமாகையால் ஆன்மாக்களைத் தாமே சென்றடையமாட்டாவாயினும், ஆன்மாக்கள்

சேதனமாதலால் அவையே அவற்றின் பயனையறிந்து எடுத்து அநுபவிக்கும், ஆதலால், அதற்கொரு கர்த்தா வேண்டுமா என்னும் சந்தேகத்தை நீக்குகின்றது.

(இ-ள்.) காந்த பசாசம் போல் — ஒருவன் இரும்பினை யெடுத்து நேரே பிடித்தால் காந்தமானது அதனை வலித்துக் கொள்வது போல், அவ்வினையைப் பேராமல் ஊட்டும் பிரானின்—அவ்வினைப் பயன்களைப் பிறழாமல் ஊட்டுவிக்கும் முதல்வனால், அவ்வினைஞர் தாம் — அவ்வினைகளைச் செய்யும் ஆன்மாக்கள் தாம், அவ்வினையைச் செய்வதனில் சென்று அவ்வினையை நுகராரேல்—அவ்வினைகளைச் செய்தற்குரிய இடமாகிய உடம்பிற் பொருந்தி அவற்றின் பயனை யனுபவிப்பர்; அவ்வாறு அநுபவியாராயின், ஆங்கு —(அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டுகிடக்கும்) அப்பெத்தகாலத்தில், ஆர் தாம் அறிந்து அணைப்பார் — வேறே எவர் தாம் அவற்றை யறிந்து கூட்டுவார் (ஒருவருமில்லை) (எ-று).

**உதாரண வெண்பா**

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

இது, அவ்வினை ஆதியோ? அநாதியோ? ஆதியாயின் முன் இல்லாதது இடையே தோன்றாது; அநாதியாயின், ஒருவர் கூட்டவேண்டுவதில்லை என்பார்க்கு, முதல்வன் உயிர்களுக்கு வினைப்பயன்களைக் கூட்டுமுறைமை இத்தன்மைத்தென விளக்குகின்றது.

(இ-ள்.) நெல்லிற்கு உமியும் நிகழ்செம்பினில் களிம்பும் சொல்லின் தொன்மையே புதிது அன்று—நெல்லினிடத்து உமியும் செம்பினிடத்துக் களிம்பும் எப்போது

உண்டாயின என்று ஆராய்ந்து சொல்லுங்கால், அந் நெல்லுஞ் செம்பும் உண்டாயினபோதே உண்டாயினவாம்; இடையே வந்தனவன்று. (அது போல்), வல்லி மல கன்மம் அன்று உளவாம்—மாயை, ஆணவம், கன்மம் என்னும் மும்மலங்களும் அநாதியே (ஆன்மா உள்ளவன்றே) உள்ளனவாம், கமலத்து அலர் சோகம் பொன் வாள் செய் வள்ளலால் ஆம்—முன்னே உண்டான தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் சூரியனால் செய்யப்படுவதுபோல, சிவபெருமானது திரோதான சத்தியினால் மும்மலங்களும் தத்தங் காரியங்களைச் செய்யும். (எ-று).

மாயை இறைவனுக்குப் பரிக்கிரக சத்தியாதலின் 'வல்லி' என்றார்.

### இரண்டாஞ் சூத்திரம்—மூன்றும் அதிகரணம்

### போக்கு வரவு புரிய

(இ-ள்.) ஆன்மாக்கள் மாறிப் பிறந்துவரும் (எ-று). மாறிப்பிறத்தல்— இறந்து பிறத்தல்.

இதில், க-வது—தன்றாற் கூறப்படும் பொருள்:— உயிர்கள் அச்சுமாறியே பிறக்கும்.

உ-வது—ஐயப்பாடு—புனருற்பவம் சடத்துக்கே யல்லாமல் சித்துக்கும் உண்டோ?

ஙூ-வது - பிறர் கூறும் பக்கம்—வேதத்தில், குட முடைந்தபோது அக்குடத்தில் அடங்கியிருந்த ஆகாயம் (குடாகாயம்) வெளியிலிருக்கும் ஆகாயத்தோடு கூடுமாறு போல், உடம்பு நீங்கிய காலையில் உயிரானது பிரமப்பொருளோடு கூடுமென்று கூறியிருத்தலால், இறந்த உயிர் மீளப் பிறப்பதில்லை. (இது கிரீடாப் பிரமவாதிகள் பக்ஷம்.)

கிரீடாப் பிரமவாதமாவது ஏகான்மவாதத்தின் பிரிவுகளுள் ஒன்று. இச்சமயத்தினர் "பிரமப் பொருளே நான்.

நான் ஒரு படித்தாயன்றிப் பலவேறுவகைப்பட்ட விகாரப் பொருள்களோடு கூடிப் பலவகையாய் விளையாடுகின்றேன் என்று அறிவதே முத்தி'' என்பார்கள்.

இவ்வதிகரணத்தால் குடாகாய உவமையே கூறி, புனருற்பவம் உயிரின் பொருட்டுச் சிவத்துக்கேயாம் என்று கூறும் சிவாத்துவித சைவர்களும், மூலப்பகுதியில் தோன்றும் புத்தி தத்துவத்திற்கே அது என்று கூறும் சாங்கியர்களும் மறுக்கப்படுகின்றனர்.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— உற்பத்தியும் நாசமும் தொடர்ச்சியாயுள்ள பொருளுக்கன்றி ஏனைப்பொருட்கு உற்பத்தி கூடாமையின், ஆன்மாக்கள் மாறிப்பிறந்துவரும்.

ரு-வது—இயைபு—

**உதாரண வெண்பா**

கண்ட நனவைக் கனவுணர்விற் றன்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

அந்வயம்—கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற, உளம் அத்தூடு விண்படர்ந்து, கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து, மனம் தள்ள, வினையினால் அணு வாய்ச் சென்று கருவில் விழும்.

(இ-ள்.) கண் செவி கெட்டு — கண் செவி முதலிய உறுப்புகளையுடைய இவ்வுடம்பு கெட்டவழி, உள்ளதே தோற்ற-(தனக்கு அழிவின்றிச் சிருட்டிகாலந் தொடங்கிச் சங்காரகாலம் வரையில்) நிலைத்திருப்பதாகிய சூக்கும தேகமானது பூதசார உடம்பு முதலியனவாய்க் காரியப் பட, உளம்—உயிரானது, அத்தூடு விண் படர்ந்து— அப்பூதசார முதலிய உடம்பினிடமாகப் பொருந்திச்

சொர்க்க நரகங்களிற் சென்று (அனுபவித்துப் பின்னர்,) கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து—நனவிற் கண்டவைகளைக் கனக் காணும்போது மறந்து அறிவு வேறுபட்டாற் போல (முன்னே உடம்பு கெட்டமையும், பூதசார உடம்பு முதலியவற்றோடு கூடிச் சொர்க்க நரகங்களை யனுபவித்தமையும், பிறவற்றையும்) மறந்து அறிவு வேறுபட்டு, மனம் தள்ள—(முன்னுடம்பு நீங்கும்போது அடுத்த வினையினாற் காட்டப்படும் தெய்வப்பிறப்பு, மக்கட்பிறப்பு, விலங்கின்பிறப்பு, நரகர்ப்பிறப்பு என்னும் நால்வகைப் பிறப்பைப் பற்றி ஆன்மா விரும்புமாறு) மனம் செலுத்துதலால், வினையினால் — (அந்தப் பிறவியை எடுத்தற் கேதுவாகிய) புண்ணிய பாவ விசேஷத்தால், அணுவாய்ச் சென்று—சூக்குமதேக மாத்திரையாய்ச் சென்று, கருவில் விழும்—(அம்மனம் தள்ளிய பிறவிக்கு வாய்ந்த) கருவின்கண் விழும் (எ-று).

உடம்பு நீங்கும்போது முதலில் கெடுவன கண்ணும் செவியுமாகையால் அச்சிறப்பு நோக்கிக் "கண் செவி கெட்டு" என்றனர். பஞ்ச பூதங்களின் காரியம் எனப்படும் தூல உடம்பானது எங்ஙனம் சூக்கும உடம்பின் காரியமாகும் என்னும் ஐயம் நீக்குதற்கு "உள்ளதே தோற்ற" என்றனர். அணு என்றது சூக்கும உடம்பை.

"உள்ளதே தோற்ற" என்றதனால் ஆன்மாவானது தூல சரீரம் கெட்டுப் போகச் சூக்குமதேகத்தோடு பூதசாரமாகிய தேவசரீர முதலியவற்றை எடுத்தலாகிய உடல் மாறுதல் கூறப்பட்டது. "விண்படர்ந்து" என்றதனால் சொர்க்கலோக முதலியவற்றிற் செல்லுதலாகிய இடம் மாறுதல் கூறப்பட்டது. "கண்ட நனவைக் கனவுணர்விற் றன்மறந்து" என்றதனால் முன்னுடம்பு கெட்டமை, சுவர்க்கமுதலிய உலகங்களை யடைந்தமை, அவ்விடங்களில் அனுபவித்தமை என்பவைகளை மறத்தலாகிய

அறிவு மாறுபடுதல் கூறப்பட்டது. இவற்ருல் "ஆன்மாக்களுக்கு மறுபிறப்பு உண்டு என்பது உண்மையாயின் முற்பிறவிகளில் அனுபவித்தவைகளை அவைகள் இப்பிறவியில் ஏன் அறியவில்லை" என்னும் ஐயமும் நீக்கப்பட்டது.

சூக்கும உடம்பாவது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் காரண தன்மாத்திரை ஐந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணம் மூன்றும் ஆகிய எட்டினுலும் ஆக்கப்பட்ட அருவுடம்பு.

இவ் வெண்பாவினுல் வேதத்திற் கூறிய பஞ்சாக்கினி வித்தையும்பெறப்பட்டது. பஞ்சாக்கினி வித்தையின் இயல்பாவது:— நல்வினை செய்த உயிர்கள் அந்நல்வினைப் பயனை யனுபவித்தற் பொருட்டு, அவ்வுடம்பினைவிட்டு நீங்கிச் சூக்குமதேகம் பெற்று, சொர்க்கலோகஞ் சென்று அவ்விடத்தில் இன்பம் அனுபவித்தற்குரிய பூதசார உடம்பெடுத்து அவ்விடத்திலுள்ள தேவர்களோடு வாழ்ந்து, போகங்களை யனுபவித்துத் தொலைத்து, எஞ்சிய வினையினுல் அத்தேவ சரீரத்தைவிட்டு நீங்கி, சூக்கும தேகத்தோடு மேக மண்டலத்தினை யடைந்து மழைத்துளிகளோடு கூடி, நிலத்தினை யடைந்து நெல் முதலிய பயிர்களோடு கலந்து உணவு ரூபமாய்ப் புருஷசரீரத்தையடைந்து அதில் சுக்கிலமாய்ப் பரிணமிக்கிறது. பிறகு அச் சுக்கில ரூபத்தோடு தாய்வயிற்றை யடைந்து கருவாய்ப் பரிணமித்துத் தூல தேகத்தோடு நிலத்தில் தோன்றுகிறது. இவ்வாறு ஆன்மாவானது தூலவுடம்பை விட்டு நீங்கிய பிறகு, சொர்க்கமும், மேக மண்டலமும், நிலமும், தந்தையும், தாயும் என்னும் ஐந்திடத்தும் தங்கிப் பிறத்தலினுல் இவ்வைந்திடமும் அக்கினியாகவும், இவைகளை அடைந்த ஆன்மா அவ் வக்கினியிலிட்ட ஆகுதியாகவும் தியானித்

தல் வேதத்திற் கூறப்பட்டதொரு சாதகமாதலின் இது பஞ்சாக்கினி வித்தை யென்னப்பட்டது.

**உதாரண வெண்பா**

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

இது, வேதத்திற் கூறப்பட்டுள்ள குடாகாய உவமையை ஆன்மா தூல உடம்பை விட்டு நீங்குவதற்குக் கூறி மயங்குவார்க்கு, குடாகாய உவமையின் உண்மைப் பொருள் இத்தன்மைத்தெனை விளக்குகின்றது.

(இ-ள்.) (இத் தூல உடம்பு கெட்டவழி ஆன்மாவானது சூக்குமதேகம் பூதசார உடம்பு முதலியன பெறுதற்கு வேதத்தின் கண்ணே), அரவுதன் தோல் உரிவு—பாம்பு தோலுரித்துப் புதிதொரு தோலைப் போர்த்துச் செல்லுதலும், அக் கனவும்—புருஷன் நன வுடம்பினின்றும் நீங்கிக் கன உடம்பிற் செல்லுதலும், பரகாயம் போய்வரும் அப்பண்பும்—யோகிகள் தங்கள் உடம்பை விட்டு மற்றோர் சரீரத்திற் போய் மீளுதலும், பரவில் வேறு—ஆகிய இவ் வுவமைகள் மிகவும் வழங்கவும் இவற்றிற்கு மாறாக, குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது—குடாகாயமானது குடமுடைந்தால் ஆகாயத்தோடு கூடுவதுபோன்றதோர் கூத்தாட்டாகும் என்பது பொருந்தாது. (ஆனால் வேதத்தில் குடாகாய உவமை ஏன் கூறப்பட்ட தெனில்), உளம் போம் ஆறு அது—ஆன்மா (மகாசங்காரகாலத்தில்) சூக்கும உடம்பு விட்டுப்போதற்கே அவ்வுவமை வேதத்திற்கூறப்பட்டது.

குடவாகாயம் என்பது குடாகாயம் என மருவியது. பரவுதல்—எல்லோரும் அறிய மிகவும் நிகழ்தல்.

ஆன்மா உடலைவிட்டுப் போதற்கு இவ்விருவகை யுவமைகளையும் வேதாகமங்கள் கூறுதலால், அவை தம் முள் முரணுதவாறு பொருள் கூறுதலே பொருத்த முடைத்தாம். ஆதலால், பாம்பு தோலுரித்தல் முதலிய உவமானங்கள் ஆன்மா தூல உடல் விட்டுப் போதற்கும், குடாகாய உவமானம் சூக்கும உடம்பு விட்டுப்போதற்கும் பொருத்தமுடையனவாம். இவ்வேறு பாடுணராது தூலஉடம்பை விட்டுப்போதற்குக் குடாகாய உவமை கூறுதல் குற்றமாம்.

## இரண்டாஞ்சூத்திரம்—நான்காம் அதிகரணம்

### "ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே"

(இ-ள்.) முதல்வன் தன தாணையாகிய சிற்சத்தியோடு நீக்கமின்றி நிற்பன். (எ-று.)

இதில், க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்:— முதல்வன் சர்வ வியாபகன்.

உ-வது—ஐயப்பாடு:— ஆணை யெனப்படுஞ் சத்தி முதல்வனின் வேறோ, அன்றோ?

ந-வது பிறர் கூறும் பக்கம்:—

(1) சத்தி முதல்வனின்வேறு. (இது மீமாஞ்சகர் முதலியோர் பக்ஷம்)

(2) சத்தி முதல்வனின் வேறன்று. (இது நையாயிகர் முதலியோர் பக்ஷம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— முதல்வன் ஏகானேக மிரண்டுமின்றி (அதாவது ஒன்று, வேறு என்னும் இருதன்மையுமின்றி), அவ்விரண்டினுக் கும் பொதுவாய்த் தனது சிற்சத்தியோடு சமவேதமாய் (அதாவது நீக்கமின்றி) சர்வவியாபியாய் நிற்பன்.

சமவேதம் — சமவாயத்தோடு கூடியது. சமவாயம் என்னும் வடமொழி தமிழில் நீக்கமின்றி நிற்றல் என்று

மொழிபெயர்க்கப்படும். இவ்விடத்தில் சமவாயம் என்பது தாதான்மிய சம்பந்தத்தை; தாதான்மியமாவது உடலிலுள்ள கையானது உடலோடு ஒன்றுயும், ஒருவாறு உடலிற்கு வேருயும் இருப்பதுபோல், பொருளால் ஒன்றேயாயும் ஒருவாறு வேருயும் இருத்தல்.

**5-வது இயைபு— உதாரண வெண்பா.**

*எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி*
*லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க*
*ணவையவ னன்றில்லைப் பொன்ஞெளி போலீச*
*னவையுடைமை யாளாநா மங்கு.*

(இ-ள்) எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று—முதல்வன் "அவையே தானேயாய்" நிற்பன் என்று மேலே கூறிய பிரமாணத்தினுல் ஒரு பொருளாதல் கூடாது. (ஏனெனில், ஒரு பொருளாயின் அது ஓரிடத்திலிருப்பதன்றி எங்கும் வியாபித்து நிற்கமாட்டாது. எதுபோலெனில், கங்காநதிக் கரையில் நிற்கும் ஒருவனே அதேகாலத்தில் காவிரி நதிக்கரையிலும் நிற்கமாட்டாமை போலென்க), இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று—முதல்வன் இருபொருளாய் (அதாவது வேருய்) நிற்கும் என்னில், அவன் எங்கும் அவையே தானேயாய் வியாபித்து நிற்றல் கூடாது. (ஏனெனில், தன்னிடத்திலே வேற்றுமையுடையவன் பிற பொருள்களிடத்தில் வேற்றுமையின்றி வியாபித்து நிற்க இயலாதாகையா லென்க.) ஆனல் (அவன் எங்கும் உளன் அல்லன் என்னலாமோ வென்னில்), எவற்று எவனும், அங்கண் அவை, அவன் அன்று இல்லை—எவ்வெவ்விடத்து எவ்வெப் பொருள்களுண்டோ, அவ்வவ்விடத்து அவ்வப்பொருள்களெல்லாம், (அகர உயிரின்றேல் அக்கரங்களில்லையாமாறுபோல்) அம்முதல்வனை யின்றியமையா, ஆதலால் அவன் எங்கும் உளன் அல்லன்

என்றலும் பொருந்தாது. (ஆனால் முதல்வன் சிற்சத்தியோடு ஏகானேகமின்றி நீக்கமற நிறைந்திருப்பன் என்பதற்குப் பொருள் யாதோவென்னில்), ஈசன் பொன் ஒளி போல்—முதல்வன், சூரியனும் ஒளியும்போல் (ஒன்றுதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத்தால் சிவமுஞ் சத்தியுமென்று) இயைந்து நிற்கும். (அதாவது, சூரியன் ஒன்றே தன்னை நோக்கக் கதிரோன் எனவும், விஷயங்களை நோக்கக் கதிர் எனவும் தாதான்மியத்தால் இருவகையாய் இயைந்து நிற்றல்போல,சுத்த சைதன்னியமாகிய சிவம் ஒன்றே, புறப்பொருளை நோக்காது அறிவு மாத்திரையாய்த் தன்னியல்பில் நிற்கும் அவசரத்தில் சிவம் எனவும், புறப்பொருளை நோக்கி நின்று உணர்த்தும் அவசரத்தில் சத்தியெனவும் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்து நிற்கும்). (ஆனால் பசு பாசங்களுக்கும் வியாபகமிருத்தலால் அவைகளும் சிவபெருமானைப் போலவே தத்தஞ் சத்திகளோடு நீக்கமறக் கலந்து நிற்கும் எனப் பெறப்பட்டுச் சிவத்திற்குச் சமமாக எண்ணப்படுமோவெனில், அப்படி யெண்ணப்படா), அவை உடைமை ஆம், நாம் ஆள் அங்கு — (அவையவ்வாறுயிருப்பினும் சிவத்தின் வியாபகத்தை நோக்க வியாப்பியமாதலினால்) அப் பாசங்கள் உடைமையாம், பசுக்களாகிய நாம் அடிமை ஆவோம் அம்முதல்வனிடத்தில் (எ-று.)

வியாபகம் என்பது மேலிடு நிறைவும், வியாப்பியமென்பது வியாபகத்தில் அடங்கிய நிறைவுமாம். இவைகட்குச் சமுத்திரமும் சமுத்திரத்திலுள்ள நீரும் உவரும் உவமானங்களாம்.

வியாபக மாதி விரிக்குங்காலை—வியாபகமேலிடு நிறைவாமென்ப
வியாத்தி சமநிறை வாகும் விளம்பின்—வியாப்பிய மொன்றின் மிடைந்த நிறைவே
வியாபகங் கடலே வியாத்தி யங்நீரே—வியாப்பிய முவரென விளக்கிய நூலே.

இவ்வதிகரணத்தால் முதல்வன் வியாபகனுகையால் வியாபகப் பொருளுக்கு ஒன்ருய் நிற்றல் கூடாதென்பதும், அது கூடாமையால் இரண்டாய் நிற்பன் என்னில் அவன் வியாபகனுதல் கூடாதென்பதும், அவன் வியாபியல்லன் எனின் பசுபாசங்கள் அவனையின்றி யமைதல் கூடாது என்பதும் பெறப்பட்டு, முதல்வன் ஒருவனே ஞாயிறும் ஒளியும் போலச் சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சர்வவியாபியாய்ப் பொதுமையில் நிற்பன் என்பதும், புறப்பொருளை நோக்காது ஒன்றிலும் தோய்வின்றிச் சுயம்பிரகாசமாய் அறிவு மாத்திரமாய் நிற்கும் நிலையில் சிவம் எனவும், புறப்பொருளை நோக்கி உலகெலாமாயும் வேருயும் உடனுமாயும் நின்று ஆன்மாக்களுக்கு உணர்த்தி நிற்கும் நிலையில் சத்தியெனவும் பெயர்பெறும் என்பதும் விளக்கப்பட்டன.

தீயின் சத்தியொன்றே சுடுதல் அடுதல் முதலிய தொழில்களுக்கேற்றவாறு சுடுஞ் சத்தி அடுஞ் சத்தி என்பனவாதியாகப் பெயர்பெறுமாறு, சிவ சத்தியொன்றே காரியவேறுபாட்டால், பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனப் பஞ்ச சத்திகளாகவும், இவற்றினின்றும் தோன்றிய எண்ணிறந்த சத்திகளாகவும் விரிந்து எண்ணிறந்த பேர்களைப் பெறும். இச்சத்திகளோடு கூடிய சத்திமானுகிய சிவபெருமானும் எண்ணிறந்த பேர்களைப் பெறுவர்.

இவைகளைச் சிவாகமம் விரித்துரைக்கும்.

**சிவஞானசித்தியார்**

சத்தியாய் விந்து சத்தி யாய்மனோன் மனிதா னுகி
யொத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகு
மெத்திற நின்ரு னீச னத்திற மவளு நிற்பள்.

சத்திதா னுத மாதி தானுருஞ் சிவமு மந்தச்
சத்திதா னுதி யாகுந் தரும்வடி வான வெல்லாஞ்
சத்தியுஞ் சிவமு மாகுஞ் சத்திதான் சத்த னுக்கோர்
சத்தியாஞ் சத்தன் வேண்டிற் றெல்லாமாஞ் சத்தி தானே.

## இரண்டாஞ் சூத்திரத்தின் தொகைப் பொருள்

இச் சூத்திரமானது, சிவபெருமானும் உயிர்களும் பொன்னும் பணியும்போல் அபேதமாம் என்று மாயா வாதிகளும், இருளும் ஒளியும்போல் பேதமாம் என்று மாத்துவரும், சொல்லும் பொருளும்போல் பேதாபேதமாம் என்று பாஞ்சராத்திரிகளும் கூறுவதை மறுத்து, உடலும் உயிரும்போல் அபேதமும், கண்ணும் ஒளியும் போல் பேதமும், ஆன்ம போதமும் கண்ணொளியும் போல் பேதாபேதமுமாம் என்றும், உயிர்கள் பிறந்து இறத்தற்குக் காரணமாகத் தமது ஆணையாகிய சத்திவாயிலாக அவைகளுக்குக் கன்ம பலனைச் சிவபெருமானே கொடுப்பரென்றும், உயிர்கள் தூல உடம்பைவிட்டுச் சூக்கும தேகத்தோடு பூதசார சரீர முதலியவற்றை யடைந்து சொர்க்க முதலியவற்றிற் போய் இன்பம் அனுபவித்து, எஞ்சிய கன்மத்தினுற் சூக்கும தேகத்தைக்கொண்டு, மக்கள் விலங்கு முதலிய பிறவிகளுள் தம்மனம் செலுத்திய பிறவிக்கேற்ற கருவில் விழும் என்றும், சிவபெருமான் ஒருவரே சிவமும் சத்தியுமாய் நிற்பர் என்றும் அறிவுறுத்துகின்றது.

### மூன்றாஞ் சூத்திரம்

**உளதில தென்றலி னெனதுட லென்றலி**
**னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி**
**லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்**
**மாயா வியந்திர தனுவினு ளான்மா.**

உலகத்திற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பதை முதற் சூத்திரத்தினுல் விளக்கி, அருட்

சத்தியும் மாயையுமாகிய துணைக்காரண முதற்காரணங்களதுண்மையையும், அவற்றால் உலகங் காரியப்படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்தால் விளக்கி, அவற்றாலாய பயனை யடைதற்குரிய ஆன்மாக்களின் உண்மையை இம் மூன்றாஞ் சூத்திரத்தால் விளக்குகின்றார்.

(இ-ள்) இலது என்றலின் ஆன்மா உளது—இல்லை என்று சொல்லுதலால் (அவ்வாறு சொல்லும்) ஆன்மா உளது, எனது உடல் என்றலின் உளது—எனது உடம்பு என்று கூறுதலால் (உடம்புக்கு வேறாக) ஆன்மா வுளது, ஐம்புலன் அறிதலின் உளது—ஐம்புலன்களை (வேறாக) அறிதலால் (அவற்றிற்கு வேறாக) ஆன்மா உளது, ஒடுக்கம் அறிதலின் உளது — ஐம்புலன்களும் ஒடுங்கின சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை யறிதலினால் ஆன்மா வேறுண்டு, கண்படில் உண்டி வினை இன்மையின் உளது — நித்திரையில் (இன்பத் துன்ப) அனுபவமும், (உடம்பின்) சேட்டையும்(பிராணவாயுவுக்கு) இல்லாமையால் (அதற்கு வேறாக) ஆன்மா உளது, உணர்த்த உணர்தலின் உளது—அறிவிக்க அறிதலால் (மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பிரமத்திற்கு வேறாக) ஆன்மா உளது, மாயா இயந்திர தனுவினுள் உளது — மாயாகாரியங்களால் ஆக்கப்பட்ட சூத்திரப்பாவை போலும் உடம்பின் கண்ணே (எல்லாம் கூடிய சமுதாயத்திற்கு வேறாக) ஆன்மா வுளது (எ-று).

## மூன்றாஞ் சூத்திரத்தின் அதிகரணங்கள்

க-வது—இலதென்றலின் ஆன்மாவுளது.
உ-வது—எனதுடலென்றலின் ஆன்மாவுளது.
ந-வது—ஐம்புலனறிதலின் ஆன்மாவுளது.
ச-வது—ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளது.

௫-வது—கண்படின் உண்டிவினை யின்மையின் ஆன்மா வுளது.

௬-வது—உணர்த்த உணர்தலின் ஆன்மா வுளது.

௭-வது—மாயா வியந்திர தனுவினுள் ஆன்மாவுளது.

இவ்வேழு அதிகரணங்களால் சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமுகான்மவாதி என்னும் எழுவர் மதங்களையும் முறையே மறுத்து உயிருண்மை சாதிக்கப்படுகின்றது.

## மூன்றாஞ் சூத்திரத்தின் சூர்ணிகை

௧-வது—இல்லை யென்கின்ற அறிவுடனே சொல்லுகையினாலே யறிவுயிருண்டு.

௨-வது—எனதுடல் என்று பொருட்பிரிதின் கிழமையாகச் சொல்லுகையினாலே யறிவுயிருண்டு.

௩-வது— ஐந்தையும் ஒருவனே யறிதலின் ஒவ்வொன்றை மாத்திரமறிகின்ற ஐந்திற்கும் வேறாய் உயிருண்டு.

௪-வது—கனவுடலைவிட்டு நனவுடலிலே வருகையினாலே அக்கனவுடற்கு வேறாய் உயிருண்டு.

௫-வது—நித்திரையிலும் பிராணவாயு தொழில் பண்ணவும், சரீரத்திற்குப் புசிப்பும் தொழிலுமில்லாதபடியினாலே பிராணவாயுவுக்கு வேறா யுயிருண்டு.

௬-வது—மறந்து மறந்து நினைக்கின்ற படியினாலே மறவாமலிருக்கிற அரனுக்கு வேறா யுயிருண்டு.

௭-வது—எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தத் தத்துவங்களுக்கு வேறா யுயிருண்டு.

## மூன்றுஞ் சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது,—ஈண்டு, இலதென்றலின் ஆன்மா வுளதென்றது எவற்றையும் அன்றன்றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவா மென்றது.

உ-வது—இனி, எனதுடலென்றலின் ஆன்மா வுளதென்றது, என்பதி என்மனை என்ருற்போல என் கை என் காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

ங-வது— இனி, ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது, ஐம்புலனுகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின், இவ்வைந்தினலும் ஐம்பயனு மறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

ச-வது—இனி, ஒடுக்கமறிதலின் ஆன்மா வுளதென்றது, நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமென்றது.

ரு-வது— இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா வுளதென்றது, ஒடுங்கினவிடத்து இன்பத் துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காத விடத்து இன்பத் துன்பஞ் சீவியர் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

சு-வது— இனி, உணர்த்த வுணர்தலின் ஆன்மா வுளது என்றது, அவன் அறிந்தாங் கறிவனென் றறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

எ-வது—இனி, மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்றது, அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் ஏழு.

## மூன்ருஞ் சூத்திரம்—முதல் அதிகரணம்

## இலதென்றலின் ஆன்மாவுளது.

(இ—ள்.) இல்லை யென்று சொல்லுதலால் (அவ்வாறு சொல்லும்) ஆன்மா உளது (எ-று.)

இதில், க-வது—தன்ஞற் கூறப்படும் பொருள்:—இல்லை யென்று சொல்லுதலால் அவ்வாறு சொல்லும் ஆன்மா உளது.

உ-வது — ஐயப்பாடு — ஆன்மா உடல் முதலியன போலக் காணப்படுதலில்லை யாகையால் உளதோ, இலதோ?

ங-வது—பிறர் கூறும் பக்கம்—ஆன்மா என்பதொன் றில்லை. உண்டு என்று சொல்லுதல் முயற்கொம்பு இல்லை யெனில் அது உண்டு என்று சொல்வதை யொக்கும். (இது மாத்துமீகர் கொள்கை. இவர்கள் ஆன்மா சூனியப் பொருள் என்பர். ஆதலால் இவர்கள் சூனியான்ம வாதிகள் எனப்படுவர். சூனியமாவது உள்ளது மன்று, இல்லது மன்று, இரண்டுமாவதுமன்று, வேறுமன்று எனப்படும் பாழ்).

ச-வது— மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:—ஆன்மா வென்பதொன்றில்லை என்னுஞ் சூனியான்ம வாதிகளும் இல்லை யென்று வாளா கூருது, உடல் பொறி விடயங்களெல்லாவற்றையும் முறையே "இது ஆன்மா வன்று," என்று ஒவ்வொன்ருகக் கழித்து "இவையெல் லாம் ஆன்மாவல்லவென்று கழிக்கப்படுதலினுல் ஆன்மா

வென்பது சூனியமாம்'' என்பாராதலினால், இவைகளை அவ்வாறு ஒவ்வொன்றாய்க் கழித்து நிற்பதோர் அறிவு உளதாதலால் அவ்வறிவே ஆன்மாவாம்.

ரு-வது-இயைபு—

உதாரண வெண்பா

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

அந்வயம்—அனைத்தும் நின்று, அன்று அன்று என விட்டு, அஞ்சு எழுத்தாய் ஒன்று நின்றுளது; அதுவே நீ. சார்மாயை அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம்போல் காட்டலால் நீ யல்லை; தற்பரமும் அல்லை; தனி.

(இ-ள்.) அனைத்தும் நின்று — (உடல், பொறி, விடயமுதலிய) எல்லாவற்றினும் (அதுவதுவேயாக) நின்று, அன்று அன்று என விட்டு — (ஆன்மவாராய்ச்சி செய்யத் தொடங்கி அவைகளை முறையே ஒவ்வொன்றாக, இது நானன்று, இது நானன்று என்று கழித்த வழி) அஞ்சு எழுத்தாய் ஒன்று நின்றுளது—(அவ்விடத்து) பஞ்சாக்கர ரூபமாய் அறிந்துவந்ததோரறிவு நிலைபெற்றுள்ள தல்லவா, அதுவே நீ—அவ்வறிவே நீ யென்றறிவாயாக, சார்மாயை — உன்னாற் சாரப்பட்ட மாயையானது, அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம் போல் காட்டலால் நீயல்லை—(அதின் காரியமாகிய) நில முதலிய வனைத்துமாய் உன்னோடு கலந்துநின்று இப் பெத்த காலத்தில் கண்ணுக்குக் கண்ணடிபோல் உன் அறிவை விளக்கி நிற்றல் மாத்திரமே யன்றி அறிவதன்று; (ஆதலால் அறியும் பொருளாகிய) நீ அம்மாயையல்லை, தற்பரமுமல்லை—அதற்கு அதீதமாகிய சிவமுமல்லை, தனி— அவ்விரண்டின் வேறு. (எ-று.)

அதுவதுவாய் நிற்றலாவது—சார்ந்ததன் வண்ண மாயிருத்தல். அஃதாவது ஆன்மா உடம்போடு கூடி யிருக்கும் பெத்தகாலத்தில் அஞ்ஞானத்தால் அவ் வுடம்பு பொறி முதலியவற்றையே தானாக மதித்து அவை வேறு தான் வேறு என்றறியாதபடி அழுந்திக்கிடத்தல்.

இவ்விடத்தில் பஞ்சாக்கரமென்பது அகாரம், உகா ரம் மகாரம் விந்து நாதம் ஆகிய சூக்கும பஞ்சாக்கரத்தை.

உடல் முதலியவற்றை இது நானன்று, இது நானன்று என்று ஒவ்வொன்றாய்க் கழித்த அறிவையும், மற்றோரறிவு அவ்வாறு கழித்தலாகாதோ வெனின், அவ்வாறு கழித்த உணர்வையும் கழிக்கும் உணர்வு வேறுண்டெனப்பட்டு மேலுமேலும் வரம்பின்றி யோடிக் கொண்டேயிருக்கும். ஆதலால், "அஞ்செழுத்தாய் நின்று ஒன்றுளது. அதுவே நீ" என்றார்.

முதலிரண்டு சூத்திரங்களால் சிவமும் மாயையும் உண்டு என்பது பெறப்பட்டமையால், அவ்விரண்டுமே அவ்வறிவினையும் அறிந்து நீக்கும். ஆதலால் வரம்பின்றி யோடுமாறில்லை எனில், மாயையானது ஆணவமலத்தால் விழுங்கப்பட்டு அறிவு இச்சை செயல்களை யிழந்து கிடக் கும் ஆன்மாக்களின் இச்சாஞானக்கிரியைகளை விளக்கும் கருவிமாத்திரமாயிருப்பதன்றி அறியும் பொருளன்று; ஆதலால் அறியும் பொருளாகிய நீ அம்மாயையல்லை என் பார் "தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை" என்றார். மாயையால் விளங்கி யறியும் நீ மாயாதீதமாகிய சிவமுமல்லை என்பார் "தற்பரமுமல்லை" என்றார்.

### மூன்றுஞ் சூத்திரம்—இரண்டாம் அதிகரணம்

### எனதுடல் என்றலின் ஆன்மா வுளது.

(இ-ள்.) எனதுடல் என்று பிறிதின் கிழமைப் பொருள்படக் கூறுதலால் உடம்புக்கு வேறாக ஆன்மா வுளது. (எ-று)

இதில் க—வது — தன்னுற் கூறப்படும் பொருள்:— எனதுடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லுகையினுலே, உடம்புக்கு வேருயுயிருண்டு.

உ-வது— ஐயப்பாடு—ஆன்மா உடம்பேயோ, உடம்பின் வேருே?

ந-வது—பிறர் கூறும் பக்கம்—ஆன்மா உடம்பினிடத்தே யன்றித் தனியே காணப்படாமையாலும், நான் பருத்தேன், நான் சிறுத்தேன் என உடம்பையே நான் என்று வழங்கிவருதலாலும் உடம்பே ஆன்மாவாம். (இது தேகான்மவாதிகள் பக்ஷம். இவர்கள் உலோகாயதருள் ஒரு சாரார்).

ச-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— நான் பருத்தேன், சிறுத்தேன், கரியேன், மனிதன், பார்ப்பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும், யான் உடம்பு, யான் கை, யான் கால் என வழங்குதலின்றி எனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்குதலினுல், உடம்பிற்கு வேருய் உயிர் உண்டு.

ரு—வது இயைபு—

**உதாரண வெண்பா**

எனதென்ற மாட்டி னெனதலா தென்று
துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகாண்
ணுன்னிலவை வேரு முணர்.

அந்வயம்—எனது அலாது என்னுது எனது என்ற மாட்டின், உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண். உன்னில், அவை வேரும் உணர்.

(இ-ள்.) எனது அலாது என்னுது எனது என்ற மாட்டின்—(உலோகாயதனே, நீ உலோகாயதநூல் கேட்கு முன்னெல்லாம் பதி மனைவி முதலிய புறப்பொருளையே உயிரெனக்கொண்டு மயங்கிக் கிடந்தாயல்லவா? அப்படி மயங்கி நின்ற காலத்தில், அவைகளை) எனதன்றென வேருகக் காணுமல் தனித்தனி எனதென்றே தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நின்ருற் போல, உனது அலாது உன் கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றி காண்—உனதல்லாத உன் கை கால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும், அவ்வாறறிந்த பாசவறிவை என்னறிவதென்றும் தற்கிழமைப் பொருளாகக் கூறிக் கொண்டு நீ யொருபொருள் வேறு நிற்கின்ருய் காண், உன்னில்— (உலோகாயத நூல் ஆராய்ந்த பின்னர்ப் பதி மனைவி முதலிய பொருள்கள் உனக்கு வேருயிருத்தலை யறிந்தாற்போல, கை கால் முதலியவற்றின் இயல்புகளை யும் ஏதுக்கள்முதலியவற்ருல்)ஆராய்ந்து பார்ப்பாயானுல், அவை வேரும் உணர்—அக் கை கால் முதலியன உனக்கு அன்னியமாம்; அதனை யறிவாயாக. (எ-று)

தற்கிழமைப்பொருளும் பிறிதின் கிழமைப் பொரு ளும் ஆரும் வேற்றுமைப் பொருள்களாம். தற்கிழமை யாவது சாத்தனது கருமை என்பதுபோல் தன்னே டொற்றுமையுடையது. பிறிதின் கிழமைப் பொரு ளாவது சாத்தனது வீடு என்பதுபோல் தன்னின் வேருயது.

## மூன்ருஞ் சூத்திரம்—மூன்ரும் அதிகரணம்

## ஐம்புலனறிதலின் ஆன்மாவுளது.

(இ-ள்.) (சத்த முதலிய) ஐம்புலன்களை (வேருக) அறிதலால் (அவற்றுக்கு வேருக) ஆன்மா உளது. (எ-று)

இதில், க-வது—தன்ஞற் கூறப்படும் பொருள்:—சத்தப் பரிச ரூப ரச கந்தங்களை யறியும் அறிவே ஆன்மாவாம்.

உ-வது—ஐயப்பாடு— ஆன்மா ஐம்புலனே, அவற்றின் வேருே?

௩-வது— பிறர் கூறும் பக்கம்—சுரோத்திர முதலிய ஐம்பொறிகள் சத்த முதலிய ஐம்புலன்களை யறியுமென்பது சர்வசம்மதமாம். ஆதலால் அவை உடல்போல் சடமன்று. அன்றியும், உடம்பை எனதுடல் என்று பிறிதின்கிழமைப் பொருள்பட வழங்குவது போலன்றி, நான் கேட்டேன், நான் பார்த்தேன் என்று தற்கிழமைப் பொருளாகவே வழங்குதலால் ஐம்புலன்களே உயிராதலமையும். (இது இந்திரியான்மவாதிகள் பக்ஷம். இவர்களும் உலோகாயதருள் ஒரு சாரார்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—ஐம்புலனுகிய சத்தப் பரிச ரூப ரச கந்தங்களுள் ஒவ்வொன்றையே ஒவ்வொரு இந்திரியம் அறியும். ஒரு இந்திரியம் அறிவதை மற்ருேரிந்திரியம் அறியாது. ஆதலால், இவ் வைந்திந்திரியங்களாலும் ஐந்து பயன்களையும் அறிவதெதுவோ அதுவே ஆன்மாவாம்.

ரு-வது—இயைபு—

**உதாரண வெண்பா**

ஒன்றறிந்த தொன்றறியா தாகியுடன் மன்னி
யன்றும் புலனுயவ் வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லதுநீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லே யோர்.

அந்வயம்—உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி, அன்றும் புலன் ஆய் அவ் வஞ்செழுத்தை

அறிதல் ஒன்று உளதே யாகில், அது நீ. அவை தனித் தனி கண்டு உள்ளல் ஒன்று அல்லை. ஓர்.

(இ-ள்.) உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி — உடம்பின் கண் நிலைபெற்று ஒரு விடயத்தை யறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை யறியாதாய், அன்றும் புலன் ஆய் அவ் வஞ்செழுத்தை— அவ்வாறு மாறுபடும் சத்தம் முதலிய புலன்களைச் சூக்கும பஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந் தறிகின்ற அவ்வைம்பொறிகளின் தொழிற் பாட்டை, அறிதல் ஒன்று உளதேயாகில் — (இவ் விவ்விந்திரியம் இவ்விப் புலன்களை யறியுமென்பதை) உணர்தலை யுடையதோர் பொருள் (இல்ல தென்றால் அவ்வறிவு நிகழாது. ஆதலால்) உள்ளதேயாம் எனின், அது நீ — அவ்வாறு உணரும்பொருளே நீயாகிய ஆன்மா. (அவ்வாறு உணர்வனவும் அவ்விந்திரியங்களே யென்றாலாகாதோ வென்னில்), அவை தனித்தனி கண்டு உள்ளல்—அவ் விந்திரியங்கள் தத்தம் விடயங்களை வேறுவேறு கண்டறிவது மாத்திரமன்றி தாம் அவ்வாறு அறிதலை யறியமாட்டாவாகையாலும், ஒன்று அல்லை ஓர்—(இன்னது இன்னதை யறியும் என்று அவ்வைந்தின் தொழிற்பாட்டையும் அறிந்து, அவற்றால் வரும் பயனை யனுபவிக்கும் நீ) அவற்றின் வேறுவை. அதனை யாராய்ந்தறிவாயாக. (எ-று).

அன்றும் புலன்—மாறுபடும் புலன். புலன் ஆய்—புலனை ஆராய்கின்ற. உள்ளல்—உள்ளலான். அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை அஞ்செழுத் தென்றது ஆகுபெயர். இம் மூன்றதிகரணங்களாலும் சாக்கிரத்தின் உண்டாகும் இயல்புகொண்டு ஆன்மாவின் உண்மை சாதிக்கப்பட்டது.

மூன்றும் சூத்திரம்—நான்காம் அதிகரணம்.

ஒடுக்கமறிதலின் ஆன்மா வுளது.

(இ-ள்.) ஐம்புலன்களும் ஒடுங்கின சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தனவற்றை நனவின்கண் அறிதலினால் அவ்வாறறியும் அறிவாகிய ஆன்மா உண்டு (எ-று.)

இதில், க-வது—தன்றாற் கூறப்படும் பொருள்:—கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக் கனவுடற்கு வேறாய் உயிருண்டு.

உ-வது—ஐயப்பாடு—ஆன்மா கனவுடலோ, அதனின் வேறோ?

ந-வது—பிறர் கூறும் பக்கம் — இந்திரியங்களின் வேறாயறிவது சூக்கும வுடம்பே யாகும். அது புறத்து நிகழாதாயினும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி யறியும். ஆதலால் அவ்வாறறியும் சூக்கும உடம்பே ஆன்மாவாம். (இது சூக்கும தேகான்மவாதிகள் பக்ஷம். இவர்களும் உலோகாயதருள் ஒரு சாரார்).

ச-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—கனவின்கணிகழும் சூக்கும வுடம்பே ஆன்மாவாயின், கனவொழிந்து நனவின்கண் வந்தபோது அக்கனவு நிலையைக் கண்டபடியே கூறவேண்டும். அங்ஙனங் கூற வறியாது மயங்கி மயங்கிக் கூறுதலால், தூல உடம்பால் சாக்கிராவத்தையையும் சூக்கும வுடம்பால் சொப்பனாவத்தையையும் அனுபவிப்பதும், சாக்கிரத்தில் அனுபவித்தவை சொப்பனத்தில் தோன்றாமற் போதலையும், சொப்பனத்தில் அநுபவித்தனவற்றுள் சில சாக்கிரத்தில் தோன்றுதலையும் சில தோன்றாமற் போதலையும் அறிவதும் ஆகிய அறிவே ஆன்மாவாம்.

ரு-வது—இயைபு—

**உதாரண வெண்பா.**

*அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்*
*செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்*
*வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை*
*மாறலுட னீயல்லை மற்று.*

*அந்வயம் — அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப, அடங்கி அவ்வுடலில் செவ்விதின் சென்று, அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு விளையாடி, மீண்டு அதனை மாறல் நீ உடல் அல்லை.*

(இ-ள்.) *அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள்—அத்தூல உடம்பினின்று உயிர்ப்பனவாகிய ஐம்பொறிகள், கிடப்ப —(அவ்வுடம்பிலேயே தொழிலற்றுக்) கிடப்பனவாக, அடங்கி அவ்வுடலில் செவ்விதின் சென்று—(அவை அவ்வாறு கிடந்தபோது, புறத்து நிகழும் தொழிற்பாடெல்லாம்) அடங்கி அவ்வுடலி னுள்ளே வருத்தமில்லாமற் போய், அவ்வுடலின் — அத்தூல உடம்புபோல், வேறு ஒன்று கொண்டு விளையாடி — அதற்கு வேறாகியதோர் உடம்பை எடுத்துக்கொண்டு (வேறொரு விதமாகக் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று) விளையாடி, மீண்டு அதனை மாறல் — மீளவும் அதனை மாறி மேற் செல்லுதலால் (அஃதாவது, சொப்பனவத்தை விட்டு நீங்கி அதற்கு மேலுள்ள சாக்கிராவத்தைக் குரிய தூல தேகத்தை யடைதலால்), நீ உடல் அல்லை — நீ அச்சூக்கும தேகமல்லை; அதனின் வேறுவை.* (எ-று).

*உயிர்ப்ப—உயிர்ப்பன. மீண்டு — மீள. மாறல்—மாறலால்.*

*அவ்வுடம்பு என்று சுட்டியது முன் தேகான்மவாதிகளை மறுத்தவிடத்து உயிரன்றெனச் சாதித்த தூல உடம்பை.*

சூக்கும தேகமாவது சத்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் காரண தன்மாத்திரைகளைந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்னும் அந்தக்கரணங்கள் மூன்றும் ஆகிய எட்டினாலும் உண்டாகும் அரு உடம்பு.

**மூன்றுஞ்சூத்திரம்—ஐந்தாம் அதிகரணம்.**

**கண்படின் உண்டி வினையின்மையின் ஆன்மா வுளது.**

(இ-ள்.) நித்திரையில் (பிராணவாயு இயங்கிக்கொண்டிருந்தும்) உண்டி (இன்பத் துன்பமும்) வினை (சேட்டித்தலும்) இல்லாதபடியினால் (பிராணவாயுவுக்கு வேறாக) ஆன்மா உளது.

இதில், க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்:—நித்திரையிலும் பிராணவாயு தொழிற்பண்ணவும் சரீரத்திற்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறா யுயிருண்டு.

உ-வது — ஐயப்பாடு — ஆன்மா பிராணவாயுவோ, அதனின் வேறோ?

ந-வது — பிறர் கூறும் பக்கம் — சொப்பனத்தான மாத்திரையினன்றித் தொழிற்படாத சூக்குமதேகம் போலன்றிச் சுழுத்தி துரியங்களினுந் தொழிற்படுவதாய பிராணவாயுவே அடங்குதல் விடுதல் செய்கின்றமையால் அப்பிராணவாயுவே ஆன்மாவாகும். (இது பிராணான்மவாதிகள்பக்ஷம். இவர்களும் உலோகாயதருள் ஒருசாரார்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—விழித்தபோது இன்பத்துன்பங்களை யறிதல்போல உறங்கும் போது தனித்தியங்கும் பிராணவாயு அறிதலின்றாகலின் அது ஆன்மாவன்று. துயிலின்கண் நிகழ்ந்த உண்டி வினைகளை நனவின்கண் உணர்ந்து நான் சுகமாகத் துயின்றேன் என்றறிந்து கூறும் அறிவே ஆன்மாவாம்.

ரு-வது—இயைபு—

**உதாரணவெண்பா**

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

(இ-ள்) கண்டு அறியும் இவ் வுடலே—கண்டறிதற்கு நிலைக்களமான இவ்வுடம்பின் கண்ணே, காட்டு— காட்டாய கருவிகள், காணுதே ஒடுங்க—தொழிற் படாமல் ஒடுங்கவும், உண்டி வினை இன்றி — (அவை யொடுங்கிய வழி) உண்டியும் வினையும் (உடம்புக்கு) இல்லையாகவும், உயிர்த்தலான் — (பிராணவாயு) நிலைபெற்று இயங்குதலால், கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு — கண்டறியு முரிமையை யுடைய உயிர் (அப்பிராண வாயுவின்) வேருய் உண்டு, ஒடுங்காது உடல் நண்ணில் — (அவ்வுயிர்) ஒடுங்காமல் உடலினிடத்தே பொருந்தியிருக்குமாயின், ஊன் உண்டி வினை யுள்ள தாம் — அவ்வுடம்பு உண்டியும் வினையும் உடைத்தாம். ஆய்—(அதனை நீ) ஆராய்ந்தறிவாயாக. (எ-று).

உண்டி என்றது இன்பத் துன்ப நுகர்ச்சியை. வினையென்றது உடம்பின் தொழிற்பாட்டை. "கண்டு, அறிதல்" ஒருபொருட் பன்மொழி. ஊன் என்றது உடம்புக்கு ஆகு பெயர்.

பிராணன்மவாதி யெனப்படுவோன் "பிராணவாயு இயங்குதலினுலேயே அறிவு நிகழ்வதனல் அப் பிராண வாயுவே ஐம்பொறிகளையுங் கொண்டு அறியும். நித்திரையில் உடம்பினிடத்திலே அப்பிராணவாயு இயங்கினுலும் ஐம்பொறிகளாகிய கருவிகள் இல்லாமையால் அது அறியவில்லை. ஆதலால் பிராணவாயுவே அறியும் பொருளாகிய ஆன்மாவாம். ஆதலால் அதற்கு வேருய் உயிருண்டு என்பது பொருந்தாது" என்று கூற, அவனை

மறுத்து. "பிராணவாயுவே அறியும் தன்மையுடைய பொருளாயின் உறக்கத்தில் அப்பிராணவாயு இருக்கவும் கருவிகள் நீங்கிவிடுதல் கூடாவாம். ஆதலால் கருவிகளை அடக்கியும் விட்டும் பிராணவாயுவையுங் கொண்டு அறிவதாகிய உயிர் வேறுண்டு" என்று உயிருண்மை சாதித்தலும், அவன் மீளவும், "சுழுத்தியில் உயிரிருக்கவும் கருவிகள் ஒடுங்கியிருக்குமென்று கூறுவதுபோல், பிராணவாயுவே கருவிகளை ஒடுக்கியும் விட்டும் அறியும் எனல் ஏன் பொருந்தாது" என்று கேட்க அதற்குத்தரமாக, "பிராணவாயு சுழுத்தியிலும் நனவிலும் ஒரு தன்மையான போக்கு வரவுடையதாய் இயங்குகின்றது. ஆனால் அறிவு ஒருதன்மையாயின்றி நனவில் அறிந்தும் சுழுத்தியில் அறியாமலும் இருத்தலால் பிராணவாயுவின் வேறாய் அவ்வேறுபாடுடைய பொருள் ஒன்று உண்டென்பது பெறப்படும். அப்பொருளே இந்திரியங்களை ஒடுக்கியும் விட்டும் பிராணவாயுவைத் துணையாகக் கொண்டும் அறிவதாகிய உயிர் எனப்படும்" என்று உயிருண்மை சாதித்தவாறுமாயிற்று.

இவ்வதிகரணத்தால் சுழுத்தி துரியங்களில் நிகழும் இயல்பைக் கொண்டு உயிர் உண்டு என்பது சாதிக்கப்பட்டது.

இதுவரையில் இச் சூத்திரம் முதலதிகரணம் முதல் வெண்பாவில் "சார்மாயை நீயல்லை" என்றதனை வலியுறுத்தியவாறும்.

### மூன்றுஞ் சூத்திரம்—ஆறும் அதிகரணம்

### உணர்த்த உணர்தலின் ஆன்மாவுளது.

(இ-ள்.) அறிவிக்க அறிதலால் (மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பிரமத்திற்கு வேறாக) ஆன்மா உளது. (எ-று).

இதில் க-வது—தன்றாற் கூறப்படும் பொருள்:— பிரமத்திற்கு வேறாய் உயிர் உண்டு.

உ-வது—ஐயப்பாடு—ஆன்மா பிரமப் பொருளேயோ, அதனின் வேறோ?

ந-வது—பிறர் கூறும் பக்கம்—பிரமப்பொருள் மேலே கூறிய சடப்பொருள்கள் போலன்றிச் சித்துப் பொருளாகையால் அதுவே உயிராம். (இவ்வாறு கூறுவோர் விஞ்ஞானன்மவாதிகள் எனப்படும் மாயாவாதிகள்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—

தொழிற்படுங் கருவிகள் ஒன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையி லிருக்கும்போது அறியமாட்டாமல், பின்னே கலைமுதலிய கருவிகளால் அறிவிக்க அறிவதனுல், எக்காலத்தும் மாறுபாடின்றி அறிந்த வண்ணமே அறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு வேறாய் உணர்த்த உணர்வதாகிய ஆன்மா உண்டு.

ரு-வது—இயைபு—

**உதாரண வெண்பா**

அறிந்து மறிவதே யாயு மறியா
தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த
தெதுவறிவு மன்றாகு மெய்கண்டா னென்றி
னதுவதுதா னென்னு மகம்.

(இ-ள்.) அறிந்தும் அறிவது ஆயும் அறியாது — (கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானத்தி னின்று விடயங்களை யறியுமிடத்தும் ஒருங்கே யறியமாட் டாது) ஒன்றினையே யறிந்தும், ஒன்றினையறியப் புகுவதா யும், முன் அறிந்த தொன்றினை அறியாதொழிந்தும், அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி—இவ்வாறு ஒவ் வொன்றாக அறிந்த விஷயத்தையும் விடாதறியமாட்டாது விட்டுவிட்டு ஐந்தவத்தைப் பட்டு அடங்கி, அறிந்தது

எது—(மீள அறிந்து வருதல் பிரத்தியக்ஷமாகக் காணப் படுதலான் அவ்வாறு) அறிந்து வந்த பொருள்யாது (அது சடமன்று என்பது முன்னமே காட்டப்பட்டது), அறிவும் அன்று — இயல்பாக உணரும் பேரறிவுமன்று, மெய்கண்டான் ஒன்றின் — இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன் பின் யாதென்று மனமொருங்கி யாராயின், அது அதுதான் என்னும் அகம் ஆகும் — (காட்டும் ஒளிக்கு வேருகிய கண்ணொளிபோல அவ்வறி விற்கு வேருய்) அது வதுவே தானெனச் (சார்ந்தவண்ண மாய் நின்று அறியும் இயல்பையுடைய) உயிராம். (எ-று.)

அறிந்தும் அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணும்மைகள். அறியாது என்பதில் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது.

## மூன்ருஞ் சூத்திரம்—ஏழாம் அதிகரணம்.

### மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா வுளது.

(இ-ள்.) மாயாகாரியங்களால் ஆக்கப்பட்டுச் சூத்திரப் பாவைபோலுள்ள வுடம்பின்கண்ணே அம் மாயா காரியங் களியாவும் கூடிய சமுதாயத்திற்கு வேருய் உயிருண்டு. (எ-று.)

இதில் க-வது — தன்ஞற் கூறப்படும் பொருள்:— மாயாகாரியங்களனைத்துங் கூடிய சமுதாயத்திற்கு வேருய் உயிருண்டு.

உ-வது — ஐயப்பாடு — ஆன்மா அனைத்துங் கூடிய சமுதாயமோ, அதனின் வேருே?

ங-வது — பிறர் கூறும் பக்கம் — (முற் கூறியவாறு) உடம்பு முதலியவற்றுள் ஒவ்வொன்றே ஆன்மாவன்று என்பது ஒக்கும். அவற்றுள் ஒன்று குறைந்தாலும் அறிவு நிகழாமையாலும், அவை யெல்லாங் கூடியபோது அறிவு நிகழ்தலாலும், அவையாவும் கூடிய சமுதாயமே

உயிராகும். (இது சமூகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர், வைபாடிகர் என்பார் பக்ஷம். இவர்கள் சகம் முழுதும் புறச்சமுதாயம் அகச்சமுதாயம் என்னும் இவ்விரண்டினுள் அடங்கும் என்பர். புறச்சமுதாயம் நிலம் முதலாயின. இவற்றின் காரணம் பரமாணுக்கள். அவை நிலவணு, நீரணு, தீயணு, வளியணு என நால்வகைப்படும். அவை பல ஒன்று கூடியபோது புறச் சமுதாயம் தோன்றும். அகச் சமுதாயம் சித்தமும் சித்தப்பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் உருவம் வேதனை ஞானம் குறி வாசனை என்னும் ஐவகைப்பட்ட கந்தம் அதாவது சமுதாயமாம்.)

௪-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— உருவ கந்தம், வேதனாகந்தம், ஞான கந்தம், குறிக் கந்தம், வாசனாகந்தம் என்னும் ஐந்து கந்தமெனக் கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மா எனப் பெயர்பெறாது வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலால், கலை முதல் பிருதிவியீறாக விரிந்திருக்கும் தத்துவங்களாகிய மாயா காரியங்களால் ஆக்கப்பட்டுச் சூத்திரப் பாவைபோலுள்ள உடம்பின் கண்ணே அவ்வுருவகந்த முதலியவற்றின் சமுதாயத்திற்கு வேறாயுயிருண்டு.

௫-வது—இயைபு—

**உதாரண வெண்பா**

கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை
நிலையாவாந் தீபமே போல—வலையாமன்
ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாந்
தானத்தின் வேறாகுந் தான்.

(இ-ள்.) காணின், கலை ஆதி மண் அந்தம் ஆம்—சமுதாய மென்பவை யாவையென்று ஆராய்ந்துபார்க்கில், அவை கலைமுதல் நிலம் ஈறாகிய தத்துவங்களேயாம், அவை மாயை நிலையாவாம் — ~~அவை யெல்லாம் — மாயை~~

நிலையாவாம்—அவையெல்லாம் மாயையின் காரியங்களாதலால் நிலைத்தலின்றிச் சில காலம் நின்று அழிவனவாம், ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில் — அவை யாவும் கூடிய சமுதாயத்தின் விளங்கித் தோன்றும் ஞானத்தின் இயல்பை அசையாமற் கருத்தை யொருக்கி முன் உணர்ந்து பின் அச்சமுதாயத்தை யாதென்றுராயின், அது தீபமேபோலத் தனுவாம்—அச்சமுதாயம் கண்ணுக்கு விளக்குப்போல் உயிர்க்குத் தூல சூக்கும பரங்களாகிய உடம்பாம், தான் அத்தின் வேறு ஆகும்— (ஆதலால் கண் விளக்கின் வேருயினுற் போல) உயிர் அவ்வுடம்பின் வேரும். (எ-று.)

அதனின் என்பது அத்தின் என மருவியது.

## மூன்ருஞ் சூத்திரத் தொகைப் பொருள்.

சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணுன்மவாதி, விஞ்ஞாணுன்மவாதி, சமுதாயான்மவாதி என்னும் எழுவரும் முறையே சூனியம், தேகம், இந்திரியம், சூக்குமதேகம், பிராணன், விஞ்ஞானம், சமுதாயம் என்பவற்றை ஆன்மா என்று கூறிய கூற்றுகளை மறுத்து ஆன்மா அவைகளுக்கு வேரும் என்று சாதிக்கப்பட்டது.

இச்சூத்திரப் பொருளை விளக்கவே நமது தாயுமான சுவாமிகள்,

பாராதிபூதநீயல்லை-உன்னிப் பாரிந்திரியங்கரணநீயல்லை
ஆராயுணர்வுநீயென்ருன்—ஐயன்
அன்பாயுரைத்தசொல் ஆனந்தந்தோழி-சங்கர சங்கரசம்பு

என்றருளிச் செய்தனர்.

### நான்காஞ் சூத்திரம்

**அந்தக் கரண மவற்றி‌ெனுன் றன்றவை**
**சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா**
**தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.**

அன்வயம் - ஆன்மா அந்தக்கரண மவற்றின் ஒன்றன்று. சகச மலத்து உணராது அமைச்சு அரசு ஏய்ப்ப அவை சந்தித்தது நின்று அஞ்சு அவத்தைத்து.

(இ-ள்.) ஆன்மா அந்தக்கரண மவற்றின் ஒன்று அன்று—ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கினுள் ஒன்றன்று. (ஆயினும்), சகசமலத் துணராது—சகசமலத்தினுல் உணர்வின்றி, அமைச்சு அரசு ஏய்ப்ப—மந்திரிமாரோடு கூடிய அரசனைப் போல், அவை சந்தித்தது நின்று அஞ்சு அவத்தைத்து — அவ் வந்தக் கரணங்களோடு கூடிநின்று (சாக்கிர முதலிய) ஐந்து அவத்தை யுடைத்தாம். (எ-று.)

பிரமாணம் இலக்கணம் என்னும் இரண்டாலும் பதி பசு பாசங்களின் உண்மையைச் சாதிக்கவேண்டும் என்னும் முறைமையால், முதல் மூன்று சூத்திரங்களில், அனுமானப் பிரமாணத்தால், முறையே ப்தியுண்மையையும், பாச உண்மையையும், பசு உண்மையையும் சாதித்து, அவற்றின் இலக்கணங் கூறத் தொடங்கி, மூன்ருஞ் சூத்திரத்தாற் சாதிக்கப்பெற்ற பசுவின் இலக்கணத்தை இச்சூத்திரத்திற் கூறுகின்ருர்.

ஆன்மா அந்தக்கரணங்கள் நான்கினுள் ஒன்றன்ருயினும் சகசமலத்தால் தனக்கு நுண்ணுணர்வு இல்லாமையினுல், அரசன் மந்திரிகளோடு கூடித் தன் தொழிலைச் செய்வதுபோல், துணையாகிய அக்கரணங்களோடு கூடிநின்று, சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தைகளை யுடையதாம். அவ்வாறு நின்று அஞ்சவத்தைப் படுதல் ஆன்மாவுக்குத் தடத்த இலக்கணமாம்.

"செம்பிற் களிம்புபோல் ஆணவம் ஆன்மாவைப் பற்றியிருத்தலால் அது சகசம் எனப்பட்டது" என்று சிவாகமம் கூறுகின்றது.

ஆன்மா என்னுஞ் சொல் வியாபகம் எனவும் சித்தசித்து எனவும் பொருள்படும்.

### இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

க-வது-(ஆன்மா) அந்தக்கரணமவற்றின் ஒன்றன்று.

உ-வது—ஆன்மா சகசமலத்துணராது (அமைச்சர சேய்ப்ப) அவை சந்தித்தது.

ந-வது—(ஆன்மா) அமைச்சர சேய்ப்ப நின்று அஞ்ச வத்தைத்தே.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

க-வது — அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினு லன்றித் தொழிலில்லாதபடியினுலே, அந்தக்கரணங் களுக்கு வேருய் உயிர் உண்டு.

உ-வது—மலமறைப்பால் உயிர்க்கு அறிவில்லே.

ந-வது—உயிர் மூன்றவத்தைப்படும்.

### இச்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது—ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங் களாயுள்ள மனேபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது—அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாச மாய் நிற்றலான்.

உ-வது—இனி இவ்வான்மாச் சகசமலத்தினு லுணர் வின்றென்பது—அதுதான் ஞானதிரோதகமாய் மறைத் துக்கொடு நிற்றலான்.

ந-வது— இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது– அதுதான் மல சொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்.

இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் ஏழு.

## நான்காம் சூத்திரம் — முதல் அதிகரணம்.

### ஆன்மா அந்தக்கரணமவற்றின் ஒன்றன்று

(இ-ள்.) ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம், சித்தம் என்னும் நான்கினுள் ஒன்றன்று. (எ-று.)

இதில்,

க-வது— தன்னாற் கூறப்படும் பொருள்—அந்தக் கரணங்களுக்கு வேருய் உயிருண்டு.

உ-வது - ஐயப்பாடு—உயிர் அந்தக்கரணங்களேயோ, அவற்றின் வேறோ?

௩-வது—பிறர் கூறும் பக்கம் - முற் கூறியவாறு, தேகம், இந்திரியம் முதலியன வெல்லாம் வெவ்வேறு பெயர்பெற்றிருத்தலால் அவை உயிராகா. அந்தக்கரண மாகிய சிந்தையைச் சீவன் என்றும், சீவனைச் சிந்தை யென்றும் வழங்கி வருதலால், அந்தக்கரணங்கள் தனித் தனி ஆன்மாவாம். (இது அந்தக்கரணான்மவாதிகள் பட்சம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— அந்தக்கரணங்களானவை தம்மை நோக்கி அசித்தாகவும் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாகவும் இருக்கும். ஆன்மா அவ்வாறன்றித் தன்னை நோக்கியும் சித்தா யிருக்கும். ஆதலால் ஆன்மா என்பது அந்தக்கரணங்க ளாகிய மனோபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்றன்று. (இதனை இன்னும் விரித்துரைப்பாம்.) உயிரோடு கூடி ஐம்பொறிகளறிந்த விடயங்களுள் ஒன்றை இது யாது என சித்தம் சிந்தித்தறியும். அச்சித்தம் தான் அவ்வாறு அறிந்ததை யறியமாட்டாது. மனமானது அவ் விடயத்தை இன்னதெனச் சங்கற்பிக்கும். அன்றியும், அது இன்னதாமோ அன்றோ வென விகற்பமுஞ் செய் யும்; அவ்வாறு தான் சங்கற்ப விகற்பம் செய்ததை

யறியமாட்டாது. அகங்காரம் அவ்விடயத்தை யான் இன்னதெனத் துணிவேன் என்று ஒருப்பட்டு எழுந்து அறியும்; தான் ஒருப்பட்டெழுந்ததை யறியமாட்டாது. புத்தி அதனை இன்னது இது என நிச்சயித்தறியும்; தான் நிச்சயித்ததை யறியாது. ஆனால் ஆன்மாவானது அவற்றோடு கூடி அது அதுவாயிருந்து, சிந்தித்தும், பற்றியும், எழுந்தும், நிச்சயித்தும் அறிவதோடு, தான் சிந்தித்ததையும், பற்றியதையும, எழுந்திருந்ததையும், நிச்சயித்ததையும் அறியும். ஆதலால் தன்னை நோக்கியும் சித்துப்பொருளாயிருக்கும் ஆன்மா, தன்னை நோக்கச் சித்துப்பொருளாகாத அந்தக்கரணங்களுக்கு வேறாம்.

சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதி என்னும் எண்மருள், அந்தக்கரணான்மவாதிகள் ஒழிந்த மற்றை எழுவரும் பிரமாண வியலாகிய மூன்றாஞ்சூத்திரத்தில் மறுக்கப்பட்டு, இலக்கண வியலாகிய நாலாஞ்சூத்திரத்தில் அநுவாத முகத்தால் அந்தக்கரணான்மவாதிகள் மறுக்கப்பட்டனர்.

**உதாரண வெண்பா.**

மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
மனமாதி மன்புலனி னல்லன்—மனமேல்
உதித்தொன்றை யுள்ள முணர்த லதனின்
உதிக்குங் கடற்றிரையை யொத்து.

**அன்வயம்**—மனம் ஆதியால் உணர்தல் மன்னுபுலன்கள். உள்ளம் உணர்தல் மனம்மேல் உதித்த ஒன்றை. கடற்றிரையை ஒத்து உதிக்கும். அதனின் மனம் ஆதி புலனின் அல்லன்.

(இ-ள்) மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள்—மன முதலிய அந்தக்கரணங்களா லுணரப்படுவன

ஐம்பொறிகளாற் றரப்பட்டுப் புறத்தே நிலைபெற்ற விடயங்களாம்; உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை—ஆன்மா உணர்வது மனத்துக்கு மேலெனப் படும் புத்தியிற் றோன்றிய தொன்றனையாம்; கடல் திரையை ஒத்து உதிக்கும்—அவ்விரு வேறுணர்வும கடலிடை யெழுந்து கரைசாருந் திரைபோல் (பரம்பரையின் ஆன்மாவிடத்தில் வந்து) தோன்றும்; அதனின் மனம் ஆதி புலனின் அல்லன்—அதனாலே மன முதலியன அவ் விடயங்களின் வேருயினாற் போல ஆன்மாவும் அம்மன முதலியவற்றின் வேறும். (எ-று.)

மன் என்பது அசை. புத்தியிற் றோன்றிய தொன்று வது சுக துக்க மோக ரூப விடயம்.

கடல் ஐம்பொறிக்கும் புத்திக்கும், திரை இரு வேறுணர்வுக்கும், கரை ஆன்மாவுக்கும் உவமிக்கப் பட்டன.

பரம்பரையிற் றோன்றுதலாவது முன்னர் வாயிற் காட்சி யுணர்வு தோன்றி, அதன்பின் மானதக்காட்சி யுணர்வு தோன்றி, அதன்பின் தன்வேதனைக்காட்சி யுணர்வு உயிரினிடத்தே வந்து தோன்றுதல். இவற்றுள் வாயிற் காட்சியாவது புறத்துள்ள சத்த ஸ்பரிச ரூப ரச கந்தங்கள் ஐம்பொறிகளால் அறியப்படுதல். மானதக் காட்சியாவது ஐம்பொறிகளாலறியப்படும் சப்தாதி விஷயங்கள் மன முதலிய அந்தக்கரணங்களால் அறியப் படுதல். தன்வேதனைக் காட்சியாவது அந்தக்கரணங் களுள் மனத்துக்குமேலாய் புத்தியிற் றோன்றியவைகள் ஆன்மாவினால் உணரப்படுதல்.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
முவ்வேறும் போதுபோ லாங்கு.

**அன்வயம்**—உள்ளம் ஆங்கு சித்தமாய்ச் சிந்தித்து, மனமாகிப் பந்தித்து, ஆங்காரமாய்த் தெளியாது, புந்தியாய் ஆய்ந்து, வெவ்வேறே துணிந்து இவ் வேறும். போது அவ்வேறும் போல்.

(இ-ள்.) உள்ளம்—புருடதத்துவம் என நின்ற உயிர்; ஆங்கு—வாயிற் காட்சியாற் கண்ட சத்தாதி விடயங்களுள் ஒன்றை மன முதலிய கரணங்களால் உணரும் மானதக்காட்சியினிடத்தும் (ஒரு தன்மைத்தாயிராமல்); சித்தமாய்ச் சிந்தித்து—சித்தமாய் நின்று இதுயாது எனச் சிந்தித்தும்; மனம் ஆகிப் பந்தித்து - அதன்பின் மனமாய் நின்று இது இன்னதெனப் பற்றியும், ஆங்காரம் ஆய்த் தெளியாது - அதன்பின் அகங்காரமாய் நின்று இஃது ஆமோ அன்றோ, இதனை இன்னதெனத் தெளிவேன் யான் எனத் தெளிவு பிறவா தெழுந்தும்; புந்தியாய் ஆய்ந்து—அதன்பின புத்தியாய் நின்று இஃது இன்னதெனத் தெளிந்தும்; வெவ்வேறே துணிந்து இவ்வேறும் — இங்ஙனம் வெவ்வேறாகவே யுணர்தலால் அவ்வாறு உணரும் புருடன் இவ் வந்தக்கரணங்களின் வேறும்; (எதுபோலெனில்) போது அவ்வேறும் போல்—(ஞாயிறு முதலியவற்றோடு கூடி நின்று நாழிகை நாள் பக்கம் மாதம் வருடம் முதலிய பாகுபாடுகளைச் செய்யும்) காலதத்துவம் (அஞ்ஞாயிறு முதலியவற்றின்) வேறாயினாற் போல். (எ-று)

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

**அன்வயம்** — அகார உகாரம் அகங்காரம் புத்தி. மகாரம் மனம். விந்து சித்தம். நாதம் உள்வடிவாம். இவற்றைப் பகாது நாடில் பிரணவமாம். போதம் கடற்றிரையே போன்று ஆம்.

(இ-ள்.) அகார உகாரம் அகங்காரம் புத்தி—அகாரம் அகங்காரத்துக்கும், உகாரம் புத்திக்கும் சொரூபமாம், மகாரம் மனம்—மகாரம் மனத்துக்குச் சொரூபமாம், விந்து சித்தம்-விந்து சித்தத்துக்குச் சொரூபமாம்—நாதம் உள வடிவாம்—நாதம் ஆன்மாவுக்குச் சொரூபமாம், இவற்றை—அகாரம் உகாரம் மகாரம் விந்து நாதம் என்னும் இச்சூக்கும பஞ்சாக்கரங்களை, பகாது நாடில் பிரணவமாம்—பகுக்கப் படாது நிற்கும்போது ஆராயில் பிரணவமாம், போதம் கடல் திரையே போன்று ஆம்— இவை கூடின அவசரத்தில் கடலினிடத்து அலை யெழுந்தாற்போல் ஆன்மாவிடத்தில் அறிவு உண்டாம். (எ-று.)

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

**அன்வயம்**—எண் நிலவு ஓங்காரத்து நண்ணிய விந்துவொடு நாதத்து அதிதெய்வம் கண்ணில் ஈசர் சதாசிவமாம். அகர உகர மகரத்து (அதிதெய்வம்) பகர் அயன் மாலோடு பரமன் ஆம்.

(இ-ள்.) எண் நிலவு ஓங்காரத்து நண்ணிய—சூக்கும பஞ்சாக்கரங்களின் உருவமாக எண்ணப்படும் பிரணவத்திற் பொருந்திய, விந்துவொடு நாதத்து அதிதெய்வம்—விந்துவுக்கும் நாதத்துக்கும் அதிதெய்வம், கண்ணில்—கருதில், ஈசர் சதாசிவமாம்—முறையே மகேசுரரும் சதாசிவருமாம், அகர உகர மகரத்து அதிதெய்வம், அகார உகார மகாரங்களுக்கு அதிதெய்வம், பகர் அயன் மாலோடு பரமன் ஆம்—முறையே (சுத்த வித்தியா தத்துவத்தில் வைகுவார் என்று) சொல்லப்படும் பிரமனும் மாலும் உருத்திரருமாம். (எ-று.)

இவ்விரு வெண்பாக்களும் அகங்காரம், புத்தி, மனம், சித்தம், உள்ளம் என்னும் இவ்வைந்தும் சடமாதலால் இவைகளைக் கருவியாகக்கொண்டு ஆன்மா எவ்வாறு அறிதலைச் செய்யுமெனின், அக்கருவிகளுள் அகங்காரத்திற்கு அகாரமும், புத்திக்கு உகாரமும், மனத்திற்கு மகாரமும், சித்தத்திற்கு விந்துவும், உள்ளத்திற்கு நாதமும் என்கின்ற எழுத்துக்கள் உடனின்று செலுத்துவதால் அறிதலைச் செய்யும் எனவும் - எழுத்துக்களும் சடமாதலால் அவை எப்படி அறிதலைச் செய்யுமெனின், அவைகளை முறையே பிரமாவும், விஷ்ணுவும், உருத்திரனும், மகேசுரரும், சதாசிவருமாகிய ஐவரும் அதிதெய்வங்களாக நின்று செலுத்துவர் எனவும் - இவ்வாறு கரணமும் அக்கரமும் அதிதெய்வமுமாகிய முத்திறத்துப் பதினைந்தோடும் ஆன்மா பொருந்தியவிடத்து அறிதற்றொழிலைச் செய்யும் எனவும் விளக்கியவாறும்.

யோகப் பயிற்சியுடையோர்க்கே இவ்வுண்மை இனிது விளங்கும். இதனை "வளியிரண்டுந் தவிர்த்துறிற் றுனுந் தோன்றும்'' என்னும் சிவஞான சித்தியால் அறிக.

### நான்காஞ் சூத்திரம்—இரண்டாமதிகரணம்

**ஆன்மா சகசமலத்துணராது (அமைச்சரசேய்ப்ப) அவை சந்தித்தது.**

(இ-ள்) ஆன்மா சகசமலத்தினால் உணர்வின்றி (நுண்ணுணர்வில்லாமையால் அரசன் இராச காரியங்களை யறிதற்கு மந்திரிமாருடன் கூடியிருத்தல் போல்) அவ்வந்தக்கரணங்களோடு கூடியது. (எ-று.)

இதனால் உயிர் அந்தக்கரணங்களோடு கூடியிருத்தற்குக் காரணம் சொல்லப்பட்டது.

மலங்கள் மூன்றனுள் ஆணவமலம்(செம்பினிடத்துக் களிம்பு உடனாய் நிற்றல்போல்) காரணமின்றி ஆன்மா

வுடன் அநாதியாகவே உடனாய் (அத்துவிதமாய்) நிற்ற லால் **சகசமலம்** என்னப்பட்டது. ஆணவமலத்தால் அறிவு தடைப்பட்டு நின்ற ஆன்மாவின் அறிவை விளக்கும் பொருட்டு இறைவர் மாயாமலத்தையும் கன்ம மலத்தை யும் கூட்டுதலால் இவ்விரண்டு மலங்களும் **ஆகந்துகமலங்கள்** என்னப்பட்டன. (ஆகந்துகம்—இடையில் கூடுவது.) ஆணவ மலத்திற்கும் மாயை கன்ம மலங்களுக்கும் இடையிலுள்ள இவ்வேற்றுமையை யுணர்த்தி, ஆணவ மலத்தை வேறுபிரித்தற்கு ஆணவமலத்துணராது என்னாது **சகசமலத்துணராது** என்று விசேடிக்கப்பட்டது.

இவ்வதிகரணத்தால் பிரமாணவியலில் முதற்சூத்தி ரத்தில் உண்டெனச் சாதித்த ஆணவமலத்தின் இலக் கணமும் கூறியவாறும்.

சகசமலம் என்னப்படும் ஆணவமலத்தின் இலக்க ணம்:— இது ஞானதிரோதகமாய் (அதாவது உயிரின் அறிவை மறைப்பதாய்), செம்புள்ளபோதே அதனோடு களிம்பாகிய குற்றமிருப்பது போல் வேறுகாரணமின்றி உயிருள்ளவன்றே அதனோடு உடனாய் நிற்கும் குற்றமாய், இருள் பலகண்களை மறைத்தும் தான் ஒன்றா யிருப்பது போல் எண்ணிறந்த உயிர்களோடு கூடி அவற்றின் அறிவு இச்சை செயல்களை மறைத்துக்கொண்டிருந்தும் தான் ஒன்றாயிருப்பதாய், உயிர்களை விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என முத்திறப்படுத்துவதாய், உயிர்கள்தோறும் தனித்தனி வெவ்வேறாய் மறைந்து நின்று தத்தங் கால வெல்லையில் நீங்குவனவாகிய பல வேறு சக்திகளையுடையதாய், உயிர்கள் கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்றவத்தைகளையடைதற்கு மூல காரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகமாகிய உயிர் அணுத்தன்மை யடையுமாறு செய்வதாயிருப்பதாம். வியா பகமாகிய உயிர் அணுத்தன்மைப்படுமாறு செய்தலின்

ஆணவம் எனவும், உயிருக்குப் பசுத்துவத்தைச் செய்தலால் பசுத்துவம் எனவும், உயிரின் அறிவை மூடலால் பசுநீகாரம் எனவும், உயிரைச் சீவிக்கவொட்டாது செய்தலால் மிருத்தியு எனவும், மயங்கிக் கிடக்கச் செய்தலால் மூர்ச்சையெனவும், அசுத்தமாக்கலால் மலம் எனவும், இருள்போல் நிற்றலால் அஞ்சனம் எனவும், அறியாமையைச் செய்தலால் அவித்தை யெனவும், உயிரை மறைத்தலால் ஆவிருதி எனவும் பல பேர்களைப் பெற்றது.

இவ்வதிகரணத்தில்,

க-வது — தன்னுற் கூறப்படும் பொருள்— ஆன்மா அந்தக்கரணங்களைக் கொண்டு அறியும்.

உ-வது—ஐயப்பாடு— ஆன்மா தானே அறியுமோ, அந்தக்கரணங்களைக்கொண்டு அறியுமோ.

ந-வது—பிறர் கூறும் பக்கம்—ஆன்மா அந்தக்கரணங்களின் வேருய அறிவுப்பொருளாயின் அதற்கு அவ்வந்தக்கரணங்களின் துணை வேண்டுவதில்லை. (இது அந்தக்கரணுன்மவாதிகள் பட்சம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— ஆன்மா அறிவுப்பொருளாயினும், தன்னேடு அநாதியே உடனுய் நிற்கும் ஆணவ மலத்தால் தானே யறியமாட்டாமல் அந்தக்கரணங்களைக்கொண்டு அறிவதாயிற்று.

ரு—வது இயைபு—

**உதாரணவெண்பா.**

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணுதேல்
ஆயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றுங் காட்டம்போல்
தன்னைமல மன்றணைத ருன்.

(இ-ள்.) உள்ளம்—உயிரானது, மாயாதனுவிளக்கு ஆக் காணுதேல் ஒன்றை ஆயாது — மாயா காரியமாகிய

உடம்பைத் தனக்கு விளக்காக்கொண்டு காணுதாயின் ஒன்றையும் அறியாது, மற்று மலம் தன்னை அன்று அணைதல்—சகசமலம் உயிரை அநாதியே பற்றி நிற்றல், அது அது ஆய் வீயாத வன்னிதனை—அதுவதுவாய் நின்றும் தனக்குக் கேடில்லாத அக்கினியை, தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம்போல்—தனக்குள் மறைத்து வைத்து ஒன்றேயாய் நிற்கும் விறகைப்போலும் (எ-று.)

அக்கினி அதுவுதுவாய் நிற்றலாவது விறகினுள் மறைந்து நின்றபோது அவ்விறகேயாயும், சூரியகாந்தத்தில் மறைந்து நின்ற போது அச்சூரியகாந்தமேயாயும், இவ்வாறே வேறு பொருள்களில் மறைந்தவிடத்து அவ்வப்பொருளேயாயும் தான் (அக்கினி) என்பது ஒன்றில்லை யென்னும்படி நிற்றல். அக்கினியானது விறகு முதலியவற்றில் அதுவதுவாய் நின்று கேடில்லாதிருப்பது போல், உயிரானது ஆணவமலத்தில் அதுவாய் நின்று (அதாவது ஆணவமலமேயாய் இருந்து) கேடில்லாதிருக்கும்.

மாயையும் கன்மமும் ஆணவத்தைப்போல் அநாதியன்றெனக் காலத்தானும் வேற்றுமையுணர்த்தவேண்டி "அன்றணைதல்" என்றார்.

இதனால் விளக்காய்நின்று விடயங்களை யறியும் வண்ணம் உயிருக்கு அறிவை விளக்குதல் மாயையின் செயல் என்பதும், விடயங்களை அறியவொட்டாமல் அறிவைத் தடைசெய்து நிற்றல் ஆணவமலத்தின் செயல் என்பதும் கூறப்பட்டன.

ஐக்கவாத சைவர் முதலியோர் இடையே வந்து கூடிய மாயாமலமே ஞானத்தை மறைக்கும், அதனின் வேருக ஆணவமல மொன்று உண்டென்பது மிகையென்பர். அவிச்சை அகங்காரம் அவா ஆசை கோபும்

என்னும் பஞ்சகிலேசத்துள் ஒன்ருகிய அவிச்சையே ஆணவமலமாம் என்பர் சாங்கியர். உயிரின் குணமே ஆணவமலமென்பர் பாடாணவாதிகள், ஞானுபாவமே (ஞானமில்லாமையே) அது வென்பாரும், பிராந்தி ஞானமே (மயக்கஞானமே) அது வென்பாரும், தமோ குணமே அது வென்பாரும் உளர். இவ்வாணவமலத் திற்குப் பற்றுக்கோடாகிய ஆன்மாவையும் இவ்வாறே தத்தம் மதம்பற்றிச் சடமென வைசேடிகரும், அறிவு மாத்திரையான குணமேயன்றிக் குணிப்பொருள் அன் றெனச் சாங்கியரும், சுதந்திர அறிவுடையதெனப் பாட்டாச்சாரியரும், எவ்வெவ் வுடம்பைப் பற்றிற்ருே அவ்வவ் வுடம்பளவாய் வியாபித்து நிற்கும் எனச் சமண ரும், அணுவளவாயிருப்பதெனப் பாஞ்சராத்திரிகளும், உருவமெனப் பௌராணிகரும், அருவம் எனப் பாதஞ்சல ரும், அருவுருவம் எனக் கவுளரும், இன்னும் பலர் பல திறப்படவுங் கூறி மயங்குவர். அவர் கூறுவன வெல் லாம் பொருந்தாமை ஆகமங்களினும், சிவஞானசித்தியார் முதலிய நூல்களினுங் கண்டு தெளிக.

### நான்காஞ் சூத்திரம்—மூன்ரு மதிகரணம்

**ஆன்மா அமைச்சரசேய்ப்ப நின்று அஞ்சவத்தைத்தே.**

(இ-ள்.) ஆன்மா மந்திரிமாரோடு கூடிய அரசனைப் போல் (அந்தக்கரணங்களோடு கூடி) நின்று ஐந்து அவத்தைகளை யுடையதாம். (எ-று.)

இதில்,

க-வது — தன்ருற் கூறப்படும் பொருள் — ஆன்மா கருவிகளோடு கூடி ஐந்தவத்தையுறும்.

உ-வது—ஐயப்பாடு—ஆன்மா கருவிகளோடு கூடிய போது ஐந்தவத்தைப்படுமோ, படாதோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—இருளில் அகப்பட்ட கண் விளக்கோடு கூடியபோது விடயங்களைக் காண்டல்

மாத்திரமன்றி வெவ்வேறு அவத்தைப்படுதல் இல்லை. அதுபோல் மலத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு கூடிய போது ஒரு தன்மைத்தா யறிதலன்றி, ஐம்புலனறிந்தும், ஒடுக்கம் அறிந்தும், உண்டி வினையின்றிக் கிடந்தும், உணர்த்த உணர்ந்தும் இவ்வாறு வெவ்வேறு அவத்தைப்படுதலில்லை. அன்றியும் ஆன்மா அஞ்சவத்தைப் படுமாயின், அது வியாபகப் பொருளா தல் கூடாது. (இது அந்தக்கரணான்மவாதிகள் பக்கம்.)

௪-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— சகசமலத்தினால் அறிவு தொழிற்படாதிருந்த ஆன்மா கருவிகளோடு கூடி அக்கருவிகளும் தானும் அமைச்சரும் அரசனும்போல் நிற்றலால், மந்திரிமுதலிய பரிவாரங்களோடு பவனிசென்ற அரசன் தன்மாளிகைக்குட்செல்லுங்கால் வாயில்தோறும் நிறுத்தவேண்டியவர்களை நிறுத்திக் காவலும் வைத்து அவர்களைப் பிரிந்து அந்தப்புரத்திற் செல்வதுபோல், தத்துவங்களைக் கூடிப்பிரியும். அவ்வாறு கூடிப்பிரியும் முறையில் அவ்வான்மா சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைகளை யடையும். ஆன்மா மலத்தால் மறைப்புண்டு அவ்வாறு அஞ்சவத்தைப்படினும் தான் அருவுடம்பாகிய தத்துவசொரூபியா யிருத்தலால் அதன் வியாபகத்திற்கு இழுக்கில்லை.

ரு-வது இயைபு—

**உதாரணவெண்பா.**

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்து—மன்றவே
யையைந்தா நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

**அன்வயம்**—நல் நுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்தாம். கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி)

விட்டு அகன்று வேறு (ஐயைந்தாம்). இதயத்தில் சித்தம் சென்று அணையும். நாபியினில் உயிர் அணையும். அணையா மூலத்து ஒன்று என இயையும்.

(இ-ள்.) நல்நுதலில்—சாக்கிரத்தானம் எனப்படும் இலாடத்தில், வாக்காதி மெய்யாதி மன்ற ஏய்—வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் என்னும் கன்மேந்திரியம் ஐந்தும், மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஞானேந்திரியம் ஐந்தும், ஆகிய புறவிந்திரியம் பத்தையும் தேற்றமாகப் பொருந்திய, ஐயைந்து-சத்தம் பரிசம் ரூபம் இரசம் கந்தம் என்னும் சத்தாதி விஷயம் ஐந்தும், வசனம் கமனம் தானம் விசர்க்கம் ஆனந்தம் என்னும் வசனாதி ஐந்தும், பிராணன் அபானன் வியானன் சமானன் உதானன் நாகன் கூர்மன் கிருகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும் பிராணாதி வாயு பத்தும், மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணம் நான்கும், புருஷனும் ஆகிய இருபத்தைந்தும், ஆம் — (ஆக முப்பத்தைந்து கருவிகளும்) தொழிற்படுவனவாம். கண்டத்தின் (வாக்காதி மெய்யாதி) விட்டு அகன்று வேறு ஐயைந்தாம்—சொப்பனத்தானம் எனப்படும் கண்டத்தில், வாக்கு முதலிய கன்மேந்திரியம் ஐந்தும் மெய் முதலிய ஞானேந்திரியம் ஐந்தும் தொழிற்படாமல் விட்டு அகல, சத்தாதிவிடயம் ஐந்தும், வசனாதி ஐந்தும், அந்தக்கரணம் நான்கும், புருடன் ஒன்றும், பிராணாதி வாயு பத்தும் ஆக இருபத்தைந்து கருவிகளும் தொழிற்படுவனவாம். இதயத்தில் சித்தம் சென்று அணையும்—சுழுத்தித் தானமாகிய இருதயத்தில் சித்தம் பிராணன் புருஷன் என்னும் மூன்று கருவிகளும் தொழிற்படும். நாபியினில் உயிர் அணையும்—துரியத்தானமாகிய உந்தியில் பிராணவாயு புருஷன் என்னும் இரண்டும் தொழிற்படும். அணையா மூலத்து ஒன்று — இக்கருவிகளொன்றும் அணையாத

துரியாதீதத்தானமாகிய மூலாதாரத்தில் புருஷன் ஒன்றே தொழிற்படும். (எ-று.)

இவ்வாறு துரியாதீதத்திலே மலத்தோடுமாத்திரம் சம்பந்தப்பட்டு அறிவின்றிப் புருஷன் நிற்பது கேவலாவத்தை யென்னப்படும்.

**உதாரணவெண்பா.**

*இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம்*
*இலாடத்தே யைந்தவத்தை யெய்தும்—இலாடத்தே*
*யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே*
*யவ்வவற்றி னீங்கலது வாங்கு.*

(இ-ள்) இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்—இலாடத்தானத்தில் வந்து சாக்கிரத்தை யடைந்த புருஷன், (அஃதாவது சாக்கிரத்தானமாகிய இலாடத்திலிருந்து கீழ்நோக்கி, கண்டத்தை யுற்றுச் சொப்பனவஸ்தை யடைந்தும், இதயத்தை யுற்றுச் சுழுத்தியவத்தையடைந்தும், உந்தியை யுற்றுத் துரியாவத்தை யடைந்தும், மூலாதாரத்தையுற்று துரியாதீதாவத்தை யடைந்தும், பின் மூலாதாரத்தினின்றும் மேல் நோக்கி முறையேஅவ்வத்தானத்தில் துரியம் சுழுத்தி சொப்பனம் என்னும் அவத்தைகளை யடைந்து மீண்டும் இலாடத்தானத்தை யுற்று சாக்கிராவத்தையை யடைந்த புருஷன்), இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும்—அவ்விலாடத்தானத்திலும் (சாக்கிரத்திற் சாக்கிரம், சாக்கிரத்திற் சுழுத்தி, சாக்கிரத்திற் றுரியம், சாக்கிரத்திற் றுரியாதீதம்என்னும்)ஐந்துஅவத்தைகளையடையும். இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டு—இலாடத்தானத்தில் (அவ்வாறு ஐந்து அவத்தைகளை யடையும்போது) அவ்வப்பொறிகளால் அவ்வவ்விடயங்களை யுணர்ந்து, அதுவே-அப்போதே, அவ்வவற்றின் நீங்கல் அவ்வவ் விடயங்களின் நீங்குதலாம். அது ஆங்கு—இனி

வரும் சூத்திரங்களிற் கூறப்படும் சுத்தாவத்தையும் இவை போல் நின்மல சாக்கிரம், நின்மல சொப்பனம், நின்மலசுழுத்தி, நின்மல துரியம், நின்மல துரியாதீதம் என ஐவகைப்படும். (எ—று)

மேல் நோக்கிச் செல்லுங்கால் அவ்வத்தானத்தில் உண்டாகும் அவத்தைகட்கும், கீழ்நோக்கிச் செல்லுங் காற் படும் அவத்தைகட்கும் வேற்றுமையில்லாமையால் இவைகளை வகுத்துக் கூறுவதொழித்து "இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம்" என்று கூறியருளினர்.

அவ்வவ இந்திரியம்—அவ்வத்தானத்தில் விடயித் தற்குரிய இந்திரியம். அவ்வவ்விடயம்—அங்கங்கே புலனு தற்குரிய விடயம்.

இலாடத்தானத்தில் அவ்வப்பொறிகளால் அவ்வவ் விடயங்களை யுணர்ந்து அவற்றின் நீங்குதலாவது—சாக் கிரத்திற் சாக்கிர முதலிய ஐந்தவத்தையினும் ஆன்மா அந்தக்கரணங்கள் வாயிலாக அவ்வப் பொறிகளால் அவ்வவ் விஷயங்களை யுணர்ந்து அவ்வப்போது அவ்வவ் விஷயங்களினின்றும் நீங்குதல்.

ஆன்மாக்களுக்குக் கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூன்று மூல அவத்தைகள் உண்டு. இவற்றுள் கேவலா வத்தையாவது—ஆன்மாக்கள் சர்வசங்காரகாலத்துசுத்த மாயா காரணத்திலே யொடுங்கிச் சிருட்டி காலமளவும் ஆணவ மலத்தால் மறைப்புண்டு கலையாதி தத்துவங்க ளோடுங் கூடாமல் அறிவும் செயலு மிழந்து கிடக்கும் நிலை. சகலாவத்தையாவது—சிருட்டி தொடங்கிச் சர்வசங்கார மளவும் ஆன்மாக்கள் முப்பத்தாறு தத்துவங்களோடு கூடி எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதங்களிலும் பிறந்திறந் துழலும் நிலை. சுத்தாவத்தையாவது—கேவல சகலாவத்தைகளை யடைந்து பிறந்திறந்து உழலும் அவ

சரத்தில் இருவினை யொப்பும் மலபரிபாகமு மடைந்து திருவருளோடு கூடியிருக்கும் நிலை.

ஆன்மா கேவலம் சகலம் சுத்தம் என்னும் மூலாவத்தை யொவ்வொன்றிலும் சாக்கிர முதலிய ஐந்தவத்தைகளையும் அடையும். இம் முத்திறத் தைந்தவத்தைகளுள், ஆன்மா இலாடத்தான முதல் மூலாதாரம் வரையிலும் இருந்து சாக்கிரமுதல் துரியாதீத மீறுன ஐந்தவத்தைகளைப் பொருந்தும் நிலை சகலத்திற் கேவலம் என்னப்படும். இலாடத் தானத்திலிருந்து சாக்கிரத்திற் சாக்கிரம் முதல் சாக்கிரத்திற் துரியாதீதம் வரையிலுமுள்ள ஐந்தவத்தைகளை யடையும் நிலை சகலத்திற்சகலம் என்னப்படும். நின்மல சாக்கிரம் முதல் நின்மல துரியாதீதம் வரையிலுமுள்ள ஐந்தவத்தைகளை யடையும் நிலை சகலத்திற் சுத்தம் என்னப்படும். இவை முறையே கீழாலவத்தை, மத்தியாவத்தை, நின்மலாவத்தை எனவும் படும்.

கீழாலவத்தையில் ஆன்மாவைக் கூடி நிற்கும் கருவிகள் இதற்கு முன் வெண்பாவுரையிற் கூறப்பட்டன.

மத்தியாவத்தையில் சாக்கிர சாக்கிரத்தில் சிவ தத்துவ முதல் சுத்த வித்தியா தத்துவமிறுதியாகிய ஐந்து கருவிகளும், சாக்கிர சொப்பனத்தில் சிவதத்துவ முதல் ஈசுர தத்துவம் இறுதியாக நான்கு கருவிகளும், சாக்கிர சுழுத்தியில் சிவதத்துவமுதல் சாதாக்கிய தத்துவம் இறுதியாக மூன்று கருவிகளும், சாக்கிர துரியத்தில் சிவதத்துவம் சத்திதத்துவம் என்னும் இரண்டு கருவிகளும், சாக்கிர துரியாதீதத்தில் சிவதத்துவம் என்னும் ஒரு கருவியும் கலாதிகளைச் செலுத்தி நிற்கும்.

நின்மலாவத்தையுள், நின்மலசாக்கிரமாவது ஆசாரியராலே ஞானதீக்கை பெற்றுத் திரிபதார்த்த வுண்மை

யறிந்து சிந்தித்துத் தெளிந்து கருவிகள் நீங்க விசாரித்து நிற்பது. நின்மல சொப்பனமாவது கருவிகள் நீங்கியும் நீங்காமலும் நடுவே சற்றுப் பதைப்புண்டாவது. நின்மல சுழுத்தியாவது தத்துவம் நீங்கி மேலான கேவலம் தானாய் நிற்பது. நின்மல துரியமாவது கேவலம் நீங்கி அருளினாலே தன்னையுங் கண்டு அருளையுங் கண்டு அவ் வசமாய் நிற்பது. நின்மல துரியாதீதமாவது சிவத்தைத் தரிசித்துச் சிவானந்தத் தழுந்துதல்.

## நான்காஞ் சூத்திரத் தொகைப் பொருள்.

இச்சூத்திரத்தால் ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்று என்பதும், சகசமலத்தினால் உணர்வின்றி. அவ்வந்தக்கரணங்களோடு கூடி யறியும் என்பதும், அதனால் ஐந்தவத்தைப்படும் என்பதும் விளக்கப்பட்டன.

## ஐந்தாஞ் சூத்திரம்.

**விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்**
**களந்தறிந் தறியா வாங்கவை போலத்**
**தாந்த முணர்வின் றமியருள்**
**காந்தங் கண்ட பசாசத் தவையே.**

(இ-ள்) விளம்பிய உள்ளத்து—மேலைச் சூத்திரங்களிற் கூறிய உயிராலே, மெய் வாய் கண் மூக்கு—மெய் வாய் கண் மூக்கு (செவி) யென்பன, அளந்தறிந்து—தத்தம் விடயங்களை இஃது இன்னதென்று அளவிட்டறிந்தும், அறியா—(அவ்வாறறியும் தம்மையுந் தம்மை யதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வுயிரையும்) அறியமாட்டா. ஆங்கவைபோல் — அவ்விந்திரியங்கள் போல், தாம்— உயிர்களும், தம் உணர்வின் தமியருள்—தமது அறிவை விளக்குவதாகிய முதல்வனது சிற்சத்தியால்,(அளந்தறிந் தறியா — மேற் கூறியவாறு கீழாலவத்தையிற் படும் அஞ்சவத்தை, இலாடத்திற்படும் அஞ்சவத்தை ஆகிய

இருவகை அஞ்சவத்தையில் நின்று வினைப்பயன்களை யறிந்து அனுபவிக்கும் தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறியமாட்டா). அவையே—உயிர்கள் (அவ்வாறுணர்தல்), காந்தம் கண்ட பசாசத்து—காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதி மாத்திரையின் வலித்துக் கொள்ளப்படுமாறு போலக் கரணத்தாலன்றி சங்கற்பத்தால் அதிட்டிக்கும் முதல்வன் சந்நிதி மாத்திரையின் ஆம். ஆதலால் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இல்லை. (எ-று)

"செவி" என்பது சொல்லெச்சமும் "ஆதலால் அதுபற்றி முதல்வன் விகாரியாதல் இல்லை" என்பது குறிப்பெச்சமும் ஆதலால் உரையில் வருவிக்கப்பட்டன.

மெய் வாய் கண் மூக்குச் செவிகளைக் கூறியது உபலக்கணமாகலின், ஏனைக்கருவிகளும் அவ்வாறே அளந்தறிந்தறியா என்பது கொள்ளப்படும்.

உயிர் விடயங்களை யறியுமிடத்து முதல்வன் உயிருடன் நின்று அறியும்படி செய்வானாயின், உயிர் விடயங்களை யறிவதுபோல் முதல்வனையும் அறிதல்வேண்டும் என்பாரை மறுத்தற்பொருட்டு அளந்தறிந்து என்று கூறிவிடாமல் "அளந்தறிந்தறியா" என்று கூறியருளினர்.

உள்ளத்து—உள்ளத்தால்—உயிரால்.

ஆங்கவை—அவ்விந்திரியங்கள்.

தம் உணர்வின்தமி — தமது அறிவிற்கு துணையாகிய முதல்.

"தமியருள்" என்பது திரோதான சத்தியை. திரோதான சத்தியாவது உயிர்களுக்கு மறைப்பைச் செய்து போகத்திலழுத்தும் அருட்சத்தியின் அவசரம். மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுள் அடங்குவதனால், திரோதான சத்தியின் இலக்கணங்

கூறவே மாயா கன்மங்களின் இலக்கணங்களும் கூறப் பட்டனவாகக் கொள்ளல் வேண்டும்.

மெய் வாய் கண் மூக்குச் (செவி) உள்ளத்தால் அளந் தறிந்து அறியா; அவைபோல் தாம் (அஃதாவது உயிர்கள்) தம் தமியருள் (அஃதாவது தம் முதல்வன தருளால்) அளந்தறிந்தறியா எனக் கூட்டிப் பொருளுரைத்துக் கொள்க.

## இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

க-வது—விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு அளந்தறிந்தறியா.

உ-வது — ஆங்கவைபோலத் தாம் தம் உணர்வின் தமியருள் காந்தங் கண்ட பசாசத்தவையே.

## இச்சூத்திரத்தின் சூர்ணிகை

க-வது—உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

உ-வது—அரனாலே உயிர்களெல்லா மறியும்.

## இச்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது—ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரு மென்றது. அவற்றினன் ஆன்மா ஒற்றித்துக் காணி னல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான்.

உ-வது—இனி இதுவுந் தமது முதலாலே உணரு மென்றது—இவ்வான்மாத் தன்னாலே யுணரு மிந்திரியங் களைப் போலத் தானுந் தன்னை யுணராது நிற்றலான்.

இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் நான்கு.

ஐந்தாஞ் சூத்திரம் — முதல் அதிகரணம்

விளம்பிய உள்ளத்து மெய் வாய் கண் மூக்கு
அளந்தறிந்து அறியா.

(இ-ள்.) மெய் வாய் கண் மூக்குச் செவி யென்பன மேலைச் சூத்திரத்திற் கூறிய உயிராலே தத்தம் விடயங்களை அளவிட்டறிந்தும், அவ்வா றறியுந் தம்மையும் தம்மை யதிட்டித்து அறிவிக்கும் உயிரையும் அறிய மாட்டா (எ-று.)

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்—உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும்.

உ-வது—ஐயப்பாடு — இந்திரியங்கள் விடயங்களை உயிராலே உணருமோ, புத்திதத்துவத்தால் உணருமோ?

ங-வது—பிறர் கூறும் பக்கம்—புருஷன் இந்திரியங்களோடு கூடினும் தாமரையிலையின் நீர்போலப் பற்றற்று நிற்ப, புருடன் சந்நிதியில் புத்திதத்துவமே ஐம்பொறி வாயிலாக விடயங்களை யறியும். (இது சாங்கியர் பக்கம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—அவ்வைம் பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிந்தாலன்றி அவை ஒரு விடயத்தையும் விடயிக்க மாட்டா. ஆதலால் உயிரே புத்தியைக் கருவியாகக் கொண்டு இந்திரியங்களின் வழியாக விடயங்களை யறியும்.

ரு-வது இயைபு—

உதாரணவெண்பா.

ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப
ஐம்பொறிக ளுள்ள மறியாவாம்—ஐம்பொறியிற்
காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்
காணுகண் கேளா செவி.

(இ-ள்.) அரசு ஆய்—அரசனைப் போல (அஃதாவது அரசன் அத்தாணி மண்டபத்தில் தங்கி தன் கீழ்க் காரியங்களைச் செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற் செலுத்தி ஆளுமாறு போல), உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப—உயிர் ஐம்பொறிகளை (அவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்தி) யாண்டு இலாடத் தானத்தில் நிற்றலால், ஐம்பொறிகள் உள்ளம் அறியா ஆம்-(அரசனால் ஏவப்பட்டோர் அரசன் ஏவிய கருமத்தை மட்டும் செய்தலே யன்றி அதிகமாய்ச் செய்யமாட்டாத வாறு போல்) அவ்வைம்பொறிகள் (விடயங்களை யறிதலே யன்றி) உயிரை யறியமாட்டாவாம். (ஆனால், ஐம்பொறிகள் உயிரைக் கொண்டன்றி அறிதல் கூடாதாயினும் ஐம்பொறிகளையின்றி உயிர் அறிதல் கூடாதோவெனின்), ஐம்பொறியிற் காணாதேற் காணாது—(அமைச்சரின்றி அரசர் ஒரு காரியமுஞ் செய்யமாட்டாதவாறு போல்) ஐந்திந்திரியங்களில் நின்று அறியாதாகில் உயிர் அறியாது, காணும் உளம் காணாதேல் கண்காணா செவி கேளா—(அரசனின்றி அமைச்சர் ஒரு காரியத்தையுஞ் செய்யமாட்டாதவாறு போல) அவ்வாறறிகின்ற உயிர் காணவிடில் கண்ணுங் காணாது, செவியுங் கேளாது. (அஃதாவது கண் காது முதலிய இந்திரியங்கள் தத்தம் விடயங்களை யறியமாட்டாவாம்.) எ-று.

இதனால் உயிரையின்றி ஐம்பொறிகளும் ஐம்பொறிகளையின்றி உயிரும் விடயங்களை யறியமாட்டா வென்பது; அஃதாவது, ஒன்றையறிதற்கு உயிரும் ஐம்பொறிகளும் தம்முள் இன்றியமையா வென்பது பெறப்பட்டது.

ஐம்பொறிகளை யின்றி உயிர் விடயங்களை யறிய மாட்டாதென்பது ஐம்பொறிகள் இல்லாத சொப்பனத் தானத்தை உயிர் அடைந்தபொழுது அவ்விடத்தில்

உயிர் இருந்தும் விடயங்களை அறியாமையினாற் கண்டு கொள்க.

நிற்ப—நிற்றலால். அரசு ஆய்—அரசைப்போல.

**ஐந்தாஞ் சூத்திரம்—இரண்டாமதிகரணம்.**

**ஆங்கவை போலத் தாம் தம் உணர்வின் தமியருள்**
**காந்தங் கண்ட பசாசத்தவையே.**

(இ-ள்.) (தத்தம் விடயங்களை அளவிட்டறிந்தும், அவ்வாறறியும் தம்மையும் தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும் உயிரையும் அறியமாட்டாத) அவ்விந்திரியங் களைப்போல், உயிர்களும் தமது அறிவை விளக்குவ தாகிய முதல்வனது சிற்சத்தியால் இருவகை அஞ்சவத் தையில் நின்று வினைப்பயன்களை யறிந்து அனுபவிக்கும் தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறியமாட்டா. உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத்தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக் கொள்ளப் படுமாறு போலக் கரணத்தாலன்றிச் சங்கற் பத்தால் அதிட்டிக்கும் முதல்வனது சிற்சத்தியாலாம்; (ஆதலால் அதுபற்றி முதல்வன் விகாரியாதலில்லை.) (எ-று)

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்—அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.

உ-வது—ஐயப்பாடு—உயிர்கள் தாமே அறியுமோ, முதல்வன் அறிவிக்க அறியுமோ?

ந-வது—பிறர் கூறும் பக்கம்—இந்திரிய முதலிய கருவிகள் சடமாதலால் அவை விடயங்கள் முதலிய வற்றை அறிதற்குச் சித்தாகிய உயிரின் துணையை வேண்டி நிற்கும். உயிர் சித்துப் பொருளாகையால் அது வேறொரு சித்துப் பொருளின் உபகாரத்தை

வேண்டாது எதையும் தானே அறியும். சித்துப் பொருளாகிய உயிர் தான் அறிதற்கு வேறொரு சித்துப் பொருளின் உபகாரத்தை வேண்டி நிற்கும் எனின், உயிருக்கு அறிவிக்கும் அச் சித்துப் பொருளும் தனக்கு அறிவித்தற்கு வேறொரு சித்துப் பொருளை வேண்டி நிற்கும் எனப்பட்டு வரம்பின்றியோடும். ஆதலால் சடப் பொருள்களாகிய ஐம்பொறி முதலிய கருவிகளை உயிரோடு உவமித்துக் கூறுதலும், உயிர் முதல்வன் அறிவிக்க அறியும் என்பதும் பொருந்தாது. (இவ்வாறு கூறுவோர் ஈசுர அவிகாரவாதிகள்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—கருவிகள் சடமாகவும் உயிர்கள் சித்தாகவும் இருக்கும் வேறுபாட்டினால் இவை யிரண்டும் தம்முள் ஒவ்வா வாயினும், தம்மையும் தமது முதலையும் அறியமாட்டாமை யினால் தம்முள் ஒக்கும். அன்றியும், அறிவிக்க அறியும் முறைமை தமக்கொரு முதலையுடைய பொருள்களுக்கே யன்றி, தனக்குமேலொரு பொருளில்லாத தனிப் பரம் பொருளுக்கில்லை. ஆதலால் முற்று முணர்ந்த முதல்வனுக்கு அறிவிக்க வேறொரு முதல்வன் வேண்டப்படுதலில்லை. அம்முதல்வன் அறிவிக்கச் சிற்றறிவுடைய உயிர்கள் அறியும்.

ரு-வது இயைபு—

**உதாரண வெண்பா.**

*மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ் சேட்டித்த*
*தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்*
*கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா*
*ணெண்ணுன் சிவனசத்தை யின்று.*

இந்திரியங்கள் உயிராலறிவது போல் உயிர் முதல்வனாலறியுமெனின், அவ்விந்திரியங்களுக்கு வரும் பயன் உயிருக்காவதுபோல் உயிர்க்கு வரும் இன்ப துன்பங்கள்

முதல்வனுக்காதல்வேண்டும் என்னும் ஈசுர அவிகாரவாதி களை மறுத்து முதல்வன் உயிர்களைப்போல் விகாரப்படுத லிலன் என்பதை இவ்வெண்பா விளக்குகின்றது.

(இ-ள்) மன்னு சிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய் — (இவ்வதிகரணத் திற் கூறிய அநுமானப் பிரமாணமாத்திரமேயன்றி) நிலை பெற்ற முதல்வனது சந்நிதியில் உயிர்கள் செயற்படுகிற தென்று கூறும் வேதப்பொருளையும் மறந்தவனே, உளம் சொன்ன சிவன் கண்ணு வினையால் கண்டு அறிந்து நிற்கும்—உயிரானது, அவ்வேதத்துள் எடுத்தோதப் படும் முதல்வன் தனக்குக் காட்டாகி நிற்ப, தான் செய்த வினைக்கீடாக ஒன்றனை யறிந்து நிற்கும். (ஆனல், இந்திரியங்கள் தமக்கென ஓர் காரணமின்றி உயிரின் பொருட்டே அறிவனவாம்), காண்—இவ்வேறுபாட்டை நீ அறிவாயாக, இன்று—(அவ்வாறு காட்டாகி நிற்பினும் தனது சந்நிதியில் அசத்தெல்லாம்) சூனியம். (ஆதலால்) சிவன் அசத்தை எண்ணுன்—ஆதலால், மங்கல வடிவின ணுகிய முதல்வன் அவ்வுயிர்போல் அவற்றை அனு பவியான் (எ-று)

"மன்னு சிவன்" "சொன்ன சிவன்" "எண்ணுன் சிவன்" மும்முறை கூறியது யாதுகாரணத்தாலெனின், முதல்வனுக்கு இவ்விடத்திற் கூறற்பாலனவாகிய மூன் றிலக்கணங்களை யுணர்த்தும் பொருட்டென்க. "மன்னு சிவன்" என்பது முதல்வன் உயிர்கள்போற் பிறந் திறந்து வருந்துதலின்றி, என்றும் நிலைபெற்றிருக்கும் இன்பவடிவினன் என்னும் பொருளைத் தந்து, தனது சந்நிதியில் உலகத்தைச் சேட்டிப்பித்தலை யுணர்த்து கின்றது. "சொன்ன சிவன்" என்பது வேதத்தில் முற்றுணர்வினன் என்று எடுத்தோதப்படுபவன் என் னும் பொருளைத் தந்து சிற்றறிவுடைய உயிர்களுக்கு

அறிவித்தலை யுணர்த்துகின்றது. "எண்ணுன் சிவன்" என்பது தூயதன்மையன் என்னும் பொருளைத் தந்து தன் சந்நிதியில் மாயையின் காரியமாகிய அசத்தெல்லாம் முனைத்துத் தோன்றுமையை யுணர்த்துகின்றது.

வேறுபாடாவது—ஐம்பொறிகள் ஆன்மாவின் பொருட்டு உணர்வன, தம்பொருட்டு உணர்வனவல்ல; ஆன்மாக்கள் தம்பொருட்டே உணர்வன, முதல்வன் பொருட்டு உணர்வனவல்ல என்பதாம்.

உலகம்—உயிர்கள்.

மறையின் இயல் மறந்தாய்—மறையின் இயலும் பொருளையும் மறந்தவனே.

ஆதலால்—சொல்லெச்சம்.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

இவ்வெண்பா, முதல்வன் உணர்த்த உயிர் உணருமாயின், உயிர் முதல்வனின் வேருயிருந்து உணருமோ, ஒன்ருய் நின்றே உணருமோ என்று கேட்கும் ஈசுர அவிகார வாதிகளை நோக்கி, அவ்விரண்டியல்புமின்றி நின்றுணரு மென்பதை வலியுறுத்துகின்றது.

(இ-ள்) வெய்யோன் ஒளியில் ஒடுங்கி—சூரியன் ஒளியில் அடங்கி, விளங்காது—(அதனின் வேருய்) விளங்கித் தோன்றுமல், வெய்யோன் ஆகாத மீன்போல—அச் சூரியனுதலுமாகாத நட்சத்திரங்கள் (அச்சூரியனுலே ஒளியுடையவாமாறு) போல, கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை—கண்டும் கேட்டும் உண்டும் மோந்தும் தீண்டியும் அறியப்படும் ஐவகை விடயங்களையும், மெய் அவனில் கண்டு—(உயிர்) மெய்ப் பொருளாகிய முதல்வனுல் உணர்ந்து, உடனாய் மன்னு

தலைக்காண்—(வேறுதலும் ஒன்றுதலுமின்றி அவ் விரண்டுக்கும் பொதுவாய் அடங்கி) உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக (எ-று.)

அஃதாவது, நட்சத்திரங்கள் சூரியனிடம் ஒளியைப் பெற்று, அதின் ஒளியில் விளங்காது அடங்கி நின்று, அதனோடு ஒன்றாகாமலும் வேறாகாமலும் இருந்து பிரகாசிப்பதுபோல், உயிர்கள் முதல்வன் அறிவிக்க, அவனில் அடங்கி, அவனோடு ஒன்றாகாமலும் வேறாகாமலும் உடனாயிருந்து அறியும் என்பதாம்.

நட்சத்திரங்களின் ஒளி சூரியனிடமிருந்து உண்டாவதென்பது வேதநூற் றுணிபு.

வெய்யோனை என்பதில் ஐகாரம் சாரியை.

உயிர் என்னும் எழுவாய் மேலை வெண்பாவினின்றும் வருவித்து உரைக்கப்பட்டது.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

இவ்வெண்பா, முதல்வன் அறிவிக்க உயிர்கள் அறியுமெனின், உயிர்களின் அறிவு ஒருவகையாயிராமல் பல்வேறு வகையாயிருத்தலினால் முதல்வன் உணர்த்து முறைமையும் வேறுபட்டிருத்தல்வேண்டும் எனப்பட்டு, முதல்வன் நிர்விகாரி என்னுஞ் சுருதிக்கு மாறாக விகாரி யென்று சொல்லவேண்டிவரும் என்னும் ஈசுர அவிகார வாதிகளை நோக்கி முதல்வன் விகாரியாகாமையை வலியுறுத்துகின்றது.

(இ-ள்.) அருள் ஈசற்கு அன்றே உண்டாம்—(உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கண் உளதாகிய) இரக்கம் முதல்வனுக்கு அனாதியேயுள்ளது, அது சத்தி—அவ்விரக்கம் (முதல்வனின் வேறு

பொருளன்று; முதல்வனுக்குள தாகிய) சத்தியேயாம்' அருளும் அவனன்றி இல்லை, அவன் அருள் இன்று இல்லை—(இரக்கமும் அவனும் முறையே குணமும் குணியு மாதலால், அஃதாவது இரக்கம் அவனுடைய குணமாத லால்) அவ்வருளும் முதல்வனை இன்றியமையாது; முதல் வனும் அவனையின்றி யமையானாய், அருட்கண்ணார் கண் ணுக்கு இரவிபோல் ஏய்ந்து நிற்கும் அரன்—ஞானக் கண்ணுடையார் உணர்விற்கு, சூரியன் தன் ஒளியோடு தாதான்மியமாய் இயைந்து நிற்பதுபோல், (அவ்வரு ளோடு தாதான்மியமாய்) இயைந்து நிற்பன் முதல்வன். ஆதலால், தன்வயத்தனாகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்தி சங்கற்பமாத்திரையால் அனைத்துஞ் செய்தல் கூடும். (எ-று)

இவ்வியல்பு சித்தாந்த நெறியுணர்ந்தார்க் கன்றி விளங்காதென்பார் "அருட்கண்ணார் கண்ணுக்கு" என் றருளினர்.

அவன் அன்றே என்பதில் அன்றே என்பது அசை.

திருவாசகம்

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையு முடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.

"குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானு முடனே காண்க"

ஐந்தாஞ் சூத்திரத்தின் தொகைப் பொருள்— உயிராலே தத்துவங்களெல்லாம் தொழில் செய்யும் என்பதும், அரனாலே உயிர்களெல்லாம் அறியும் என்ப தும் இச்சூத்திரத்தாற் சாதிக்கப்பட்டன.

ஆறுஞ் சூத்திரம்

***உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்***
***இருதிற னல்லது சிவசத் தாமென***
***இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.***

(இ-ள்.) உணருருவெனின — ("தம்முணர்வின்றமி" யாகிய முதற்பொருள்) அளவைகளால் அறியப்படும் இயல்பையுடையது எனில், அசத்து—(அவ்வாறு அறியப் படும் பிரபஞ்சம்போல் அழிபொருளாகிய) அசத்தாம், உணராது எனின்—எதனாலும் அறியப்படாதது எனின், இன்மையின்—சூனியப்பொருளாமாதலால், இருதிறனல் லது—இவ்விருபகுதியுமன்றி, இரண்டுவகையின் சிவ சத்தாமென — (ஒருவாற்றால் அறியப்படாமையும் ஒரு வாற்றால் அறியப்படுதலுமாகிய) இரண்டு வகையாலும் சிவசத்தாமென, இசைக்கும் மன் உலகே—கூறுவர் மெய் யுணர்வி னிலைபெற்றுயர்ந்தோர். (எ-று.)

மேலைச்சூத்திரத்தில் ஐம்பொறிகள் ஆன்மாவினால் விடயங்களை யறிந்தும் அவ்வாறறியும் தம்மையும் ஆன்மா வையும் அறியமாட்டாதவாறு போல, முதல்வனால் ஆன்மா அறிந்தும் அவ்வாறறியும் தன்னையும் முதல்வ னையும் அவ்வான்மா அறியமாட்டாது என்று கூறியத னால், முதல்வன் எதனாலும் அறியப்படாத பொருளோ என்னும் ஐயம் நிகழாதவாறு இச்சூத்திரத்தாற் சத்தை யும் அசத்தையும் வரையறுத்து முதல்வனின் சிறப் பிலக்கணத்தைக் கூறுகின்றார்.

முதல்வனிலக்கணம் பொதுவியல்பு எனவும் சிறப் பியல்பு எனவும் இருவகைப்படும். பொதுவியல்பு முதல் வன் பிரபஞ்சத்தோடு பேதமாயும் அபேதமாயும் பேதா பேதமாயும் கலந்து நிற்றல். இது இரண்டாஞ் சூத்திரத் தில் விளக்கப்பட்டது. சிறப்பியல்பு தன்வயத்தனாதல்

முதலிய சிற்குணங்கள் எட்டையும் உடையவனுயிருத்தல். இவை யெட்டும் சத்து சித்து என்னும் இரண்டனுள் அடங்குதலால், பதி பசு பாசம் என்னும் மூன்றனுள் பதியாகிய முதல்வனே சத்தும் சித்துமாயிருக்கும் பொருள் என்பது இச்சூத்திரத்தால் உணர்த்தப்படுகின்றது.

"தம்முணர்வின் தமியாகிய முதற்பொருள்" என்னும் எழுவாய் ஐந்தாஞ் சூத்திரத்தினின்றும் வருவிக்கப் பட்டது. உணருரு அசத்தெனின் என்பதனை உணருருவெனின் அசத்து என மாறுக. எனின் என்பதனை உணராது என்பதனோடுங் கூட்டுக. இன்மையின் என்பதில் இன் என்பது ஆகலான் என்னும் பொருளைத் தரும். "இருதிறன்" "இரண்டுவகையின்" என்பவற்றில் தொக்கு நிற்கும் முற்றும்மைகளை விரித்துப் பொருளுரைக்க. "அல்லது" என்பது அன்றி என்னும் பொருளைத் தரும் வினையெச்சக் குறிப்பு முற்று. (குறிப்பு முற்றெச்சம்). இருதிறனுமன்றி ஆம் எனக் கூட்டுக. ஒரு வாற்றாலு மறியப்படாமையாவது பசுஞான பாசஞானங்களா லறியப் படாமை. ஒருவாற்றால் அறியப்படுதலாவது சிவஞானம் ஒன்றானே யறியப்படுதல். இரண்டுவகையிற் சிவசத்தாம் எனக் கொண்டு கூட்டுக.

பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியப்படுவது சடப்பொருளே யாதலால் அவ்விரண்டினாலும் அறியப்படாத பொருள் சிவமாதலும், பதிஞானத்தால் அறியப்படும் பொருள் பாசஞான பசுஞானங்களால் அறியப்படும் பொருள்போல் அநித்தமாகாமையால் சத்தாதலும்பெறப்படுமெனக்கூறவேண்டி "இரண்டுவகையினும் சிவசத்தாமென இசைக்கும்" என்றருளிச் செய்தனர்.

சிவசத்து என்பது சித்தாகிய சத்து. அஃதாவது, சச்சிதானந்தப் பொருள் என்பதை யுணர்த்தும்.

சைவசித்தாந்தத்தின்படி பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களும் அனுதி நித்தப் பொருள்களாயிருக்க, சிவம் ஒன்றே சத்துப் பொருள் என்று ஏன் கூறவேண்டு மெனில், பாசமானது சடப்பொருளா யிருத்தலினாலும், தனு கரண புவன போகங்களாகக் காரியப்பட்டு விகாரங் கள் மருவுதலானும், முத்தியிலும் ஆன்மபோத நீக்கத்தி லும் தன் வலி கெட்டு நிற்றலானும், சர்வசங்காரகாலத் திற் சிவசத்தியில் ஒடுக்கமுறலானும் அது முதல்வனைப் போல் மெய்ப்பொருளாகாமல் கனவும் கானற்சலமும் போன்ற பொய்ப் பொருளாமென்ப. * ஆன்மா சார்ந்த தன் வண்ணமாயிருந்துகொண்டு கேவலாவத்தையில் ஆணவம் வேறு தான் வேறு என்னுதபடி அவ்வாணவ மலமேயாயிருத்தலானும், சகலாவத்தையில் பிறப் பிறப்புகளால் விகாரமெய்துதலானும், சுத்தாவத்தையில் ஆன்மபோதம் நசித்துச் சிவமேயாய் விடுதலானும், சர்வசங்காரகாலத்தில் சர்வான்மாக்களும் சிவத்தி லொடுங்கச் சிவம் ஒன்றே சேட்டித் திருத்தலானும், ஆன்மாவும் மெய்ப்பொருள் என்று சொல்லப்படாமல் சிவமொன்றே மெய்ப்பொருள் என்று நாட்டப்படும். இத னைத் திருக்குறளில் "மெய்யுணர்தல்" என்னும் அதிகாரத் தில் மெய் என்பது முதல்வனை யுணர்த்தி நிற்றலாலும் அறிக. இவ்வுண்மைகளை விளக்கிச் சடமாகிய சத்தி னின்று முதல்வனை வேறு பிரித்தற்கு "சிவசத்து" என் றருளினர்.

---

* ஆன்மாவானது கேவலாவத்தையில் மலத்தில் மறைப் புண்டு, தன்சத்தி மடங்கி சூனியம்போற் கிடத்தலால் அசத்தா தற்கும், சுத்தாவத்தையில் ஆணவமலமறைப்பு நீங்கியவழி தனது சத்தி விளங்கப்பெற்று தனக்குரிய என்றும் ஒருதன்மைத் தாய சிவானந்தத்தை யனுபவித்தலால் சத்தாதற்கும் பொது வாய் நிற்றலினுல் சதசத்து எனப்படும்.

பதி பசு பாசம் என்னும் மூன்றனுள், பசுவும் பாசமும் பசுஞான பாசஞானங்களால் அறியப்படுதலினால் அவை அசத்துப் பொருள்கள் என்றும், பதிப்பொருள் சிவஞானம் ஒன்றினாலேயே அறியப்படுதலால் அதுவொன்றே சிவசத்தாம் என்றும் கூறில், சிவனைக் காணாதவர் தம்மையும் காணார், பாசத்தையுங் காணார் என்று நூல்கள் கூறுவதனால், ஏனைப் பசு பாசங்களும் சிவஞானத்தாலறியப்படும் என்பது பெறப்படும். படவே, அவையும் சிவசத்தாம் எனச் சொல்லவேண்டி வருமே யெனில், அவை சிறப்புவகையால் சிவஞானத்தால் அறியப்படுமாயினும் பொதுவகையால் ஏனை ஞானங்கட்கும் விடயமாதலால் அவை உணருருவாகிய அசத்துப் பொருள்கள் என்னப்பட்டனவென்க. ஒருவன் இதனை "யான் அறிந்தேன், அறிகின்றிலேன்" என்னுங்கால், இதுவென்னும் சுட்டுணர்விற்கு விடயம் புறத்தே தோன்றும் குடமும், யான் என்னும் உணர்விற்கு விடயம் அந்தக் கரணங்களை யதிட்டிக்கும் ஆன்மாவும், அறிந்தேன் என்னும் உணர்விற்கு விடயம் அவ்வான்மபோதமும், அறிகின்றிலேன் என்னும் உணர்விற்கு விடயம் அறியாமையுமேயாயிருத்தலாலும், உடம்பை மயக்கத்தால் யான் என மதிப்பினும் இதனை யான் அறிந்தேன் என்றபோது யான் எனும் உணர்விற்கு விடயம் ஆன்மாவேயாயிருப்பதனாலும் பசு பாசங்கள் பசுஞான பாசஞானங்களினாலும் அறியப்படுதல் பெறப்பட்டது. ஆனால் பதிஞான முணராதாரும் சிவனுண்டு எனவும் சிவனில்லை யெனவும் வழங்கிவருவதனால் சிவப்பொருளும் பொதுவகையால் பாசஞான பசுஞானங்களுக்குவிடயமாம் போலும் எனின், ஆகாது. குடம் உண்டு குடம் இல்லை யென்றபோது குடமானது புத்தி விருத்தியிற் பரிணமித்துத் தோன்றி ஆன்மாவின்கண் வந்து அநுபவமாகின்

றது. சிவப்பொருள் அவ்வாறு அநுபவத்தால் உணர வருகிறதில்லை. அநுபவஞானத்திற்கு விடயமாவதே ஈண்டு உணருரு என்னப்படுவதனால் அவ்வாறு விடய மாகாத சிவப்பொருள் உணருருவல்லவென்க.

இவ்விடத்தில் அசத்து எனப்படுவது நீர்மேலெழுத் துப் போல் நிலை பெறுதல் போலக் காணப்பட்டு சடுதி யில் மறைந்துபோம் காரியப் பிரபஞ்சத்தை யென்பதறிக.

பாசஞானமாவது-பாசமாகிய கருவிகளால் ஆன்மாவி னிடத்தில் நிகழும் ஞானம். பசுஞானமாவது - தற்போத முனைப்பால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம். பதி ஞானமாவது - பதியின் அருளால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம்.

### இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

க-வது—உணருரு வசத்தெனி னுணராதின்மையின்.

உ-வது—இருதிறனல்லது சிவசத்தாமென இரண்டு வகையி னிசைக்கு மன்னுலகே.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

க-வது-உயிரறிவினாலேயறியப்பட்டவெல்லா மழியும்.

உ-வது—அப்பிரமேயமாக வறியப்பட்டவனே அரன்.

### இச்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது—ஈண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத் தென்றது. அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாச மாய் நிற்றலான்.

உ-வது—இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிர காசமின்மையானும், இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்றுணர்தற்பாற்று.

இதின் உதாரண வெண்பாக்கள் கூ.

### ஆறுஞ் சூத்திரம்—முதலதிகரணம்

## உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்.

(இ-ள்.) பதிப்பொருள் அளவைகளால் அறியப்படும் இயல்பையுடையது எனில் அது அசத்துப்பொருளாம். எதனுலும் அறியப்படாதது எனின் அது சூனியப் பொருளாம். (ஆதலினுல்.)

இதில்,

க-வது—தன்னுற் கூறப்படும் பொருள்:—

உயிரறிவினுலே யறியப்பட்டன வெல்லாம் அழியும். (அஃதாவது அசத்தாம்.)

உ-வது—ஐயப்பாடு — முதல்வன் அறியப்படும் பொருளோ, அறியப்படாத பொருளோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—பிரபஞ்சம் அறியப் படுவது போல் முதல்வனும் அறியப்படும் பொருளே. (இது நையாயிகர் பக்கம்)

எல்லாப் பொருளுஞ் சத்தாகலின் அளந்தறிபொருளுஞ் சத்தே. (இது சாங்கியர் பக்கம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—

முதல்வன் பிரபஞ்சம்போல் அறியப்படும் பொருளாயின், முதல்வனும் பிரபஞ்சம்போல் அசத்தாவான். (அசத்து — அழியும் பொருள்.) ஆதலால் முதல்வன் அறியப்படும் பொருளன்று. (இது நையாயிகரை மறுத்தது.)

சற்காரியவாதம்பற்றி எல்லாப் பொருள்களுஞ் சத்தேயாமெனினும் பிரபஞ்சமானது மாயையின் காரியமாய், தோன்றிநின்றழிதல்பற்றி அசத்தெனப்படும். (இது சாங்கியரை மறுத்தது.)

ரு-வது இயைபு—

**உதாரண வெண்பா.**

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லாம்
அசத்தாகு மெய்கண்டா ஞயின்—அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரினவை யின்ருமா ஞெப்பு.

(இ-ள்.) அசத்து அறியாய் நீ கேள்—அசத்தின் இயல்பை யறியாத மடவோனே, யாம் கூறும் விடையை நீ மனம் பற்றிக் கேட்பாயாக, மெய்கண்டான் ஆயின்—சத்தின் இயல்பை யறிந்தவன் ஆராய்ந்தாஞ யின், அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும்—அறிவிஞலறியப்பட்டன வெல்லாம் அசத்தேயாம். அசத்து அலாய்—அசற்காரியவாதியல்லாத அறிவுடையோனே, அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின்—அங்ஙனம் தோன்றி மறைவனவாய பிரபஞ்சம் அசத்தா மாற்றிற்கு உவமை யாராயின், நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த் தேரும்—நிகழாநின்ற நீர்மேலெழுத்தும் கனவிற் காட்சி யும் பேய்த்தேருமாம். (எ—று.)

இதனுல் "அசத்தறியாய்" என்று நையாயிகரையும், "அசத்து அலாய்" என்று சாங்கியரையும் நோக்கி அவ் விருவர் மதங்களும் மறுக்கப்பட்டன. நையாயிகனை நோக்கி 'நீ சத்து அசத்து என்பவற்றின் இலக்கணங்களை யறிந்தாயாயின் இவ்வாறு பிணங்காய்; அறியாமையாற் பிணங்குகின்ருய்' என்பார் "அசத்தறியாய்" என்றனர்.

**திருஞானசம்பந்தப் பெருமானர்**

ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்புங்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்க தக்கார்.

என்று திருவாய் மலர்ந்தருளியவாறே நீ வணங்கிக் கேட்டறிவாயாக என்பார் "கேள் நீ" என்றனர். உபலத்

திக்கு (அஃதாவது உள்ளது என்னும் உணர்விற்கு) விடயமானவை யெல்லாம் அநுபலத்திக்கு (அஃதாவது இல்லையென்னும் உணர்விற்கு) விடயமாதல் நிச்சயம் என்பார் "அறிவறிந்த வெல்லாம் அசத்தாகும்" என்றனர். சத்தின் இயல்பு உணர்ந்தார்க்கன்றி அசத்தின் இயல்பு உணரவராதென்பார் "மெய்கண்டான் ஆயின்" என்றனர். ஆய்தற்கருமை நோக்கி "ஆயின்" என்றனர். அசற்காரியவாதியை "அசத்து" என்று உபசரித்தார். இன்று ஆம் ஆறு—அசத்தா மாற்றிற்கு. ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட்டிக்காணும் அளவை யறிவினை. இதனை "அறிவினலறிந்த யாவுமசத்தாதலறிதி" என்னுஞ் சிவப்பிரகாசச் செய்யுளானுணர்க.

உள்ளது என்னும் உணர்விற்கு விடயமாகும் பிரபஞ்சத்தை இல்லை யென்னும் உணர்விற்கு விடயமாகும் இல்பொருளோடொப்ப அசத்தென்றல் பொருந்தாது என்று நையாயிகர் கூறுவதை மறுத்து, அச்சுட்டுப் பொருள்களானவை இராசதகுணத்தால் உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய், தாமதகுணத்தால் இல்லையென்னும் உணர்விற்கு விடயமாதலால் 'அறிவினலறியப்பட்ட வெல்லாம் அசத்து' என்று சாதிக்கப்பட்டது.

சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுவதனலேயே அசத் தென்றல் சற்காரியவாதத்திற்கு மாறும் என்று சாங்கியர் கூறுவதை மறுத்து, பிரபஞ்சமானது காரியவவத்தையில் தூலமாய் விளங்கி நின்றே கண்ணுக்குப் புலனய், பின் சடுதியின் மறைந்து சூக்குமமாய்க் காரணவவத்தையின் விளங்காது நிற்கும் வேறுபாட்டால், அவ்வாறு புலனுகாத காரணப் பொருள்களை நோக்கக் காரியப் பிரபஞ்சம் அசத்தாம் என்று சாதிக்கப்பட்டது.

நீரிலெழுத்தும் கனவும் பேய்த்தேரும் பொய் என்பாரை மறுத்தற்கு "நிகழ்" என்று அடைகொடுத்தார். நீரிலெழுத்து தோன்றும்போதே மறைவதுபோல் பிரபஞ்சம் தோன்றும்போதே மறையும் இயல்பினதாகையாலும், கனவின்கண் காண்பவை விழித்தலினாலே முடிவுபெறுதலின்றி இடையே மறைந்து போதல் போல் பிரபஞ்சம் என்றும் நிலைத்திருத்தல் போலத் தோன்றி இடையே மறைந்துபோதலாலும், பேய்த்தேர் சூரிய கிரணத்தின் வெம்மையால் தோன்றி அக்கிரணம் மேகத்துள் மறைந்த காரணத்தால் மறைந்துபோவதுபோல் பிரபஞ்சம் நோய்முதலிய யாதானுமோர் காரணங்காட்டி மறைதலாலும், நீரிலெழுத்து முதலிய மூன்றும் பிரபஞ்சத்திற்கு உவமைகளாயின. பேய்த்தேர் என்பது கொடிய பாலைநிலத்தில் கோடைகாலத்தில், நடுப்பகலில் சூரியகிரணத்தின் கொடிய வெம்மையால் சலத்தைப் போற் காணப்பட்டு, சூரியகிரணம் மேகத்துள் மறைந்தபோது மறைந்துபோவதாகிய கானல்.

இவ்வுண்மை யறியாத மாயாவாதிகள் முதலியோர் பேய்த்தேர் முதலியன இல்பொருள்களாயிடுதல்போல் பிரபஞ்சமும் இல்பொருளே என்பார். இது சற்காரிய வாதமாகிய சைவசித்தாந்தத்திற்கு முரணும். பேய்த்தேர் முதலாயின மெய்யே; பொய்யன்று. எவ்வாறெனில், பேய்த்தேரை நீரெனக் காண்பதனால் அது பொய்யெனப் பட்டதே யன்றி பேய்த்தேர் பொய்யன்று. கனவின்கண் பெண்களோடு சுகிக்கும் போதும், புலி முதலியவற்றைக் கண்டு அஞ்சும்போதும் அவ்வனுபவக்குறி தூலவுடம்பினில் உண்டாவதனாலும், நீரிலெழுத்து எழுதுங்கால் உள்ளதாய்த் தோன்றுதலினாலும் இவையும் மெய்யே. ஆதலால் இவைகளோடு உவமிக்கப்பட்ட பிரபஞ்சமும் மெய்யே யன்றி பொய்யன்று.

### ஆறுஞ் சூத்திரம்

### இரண்டாமதிகரணம்

இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

(இ-ள்.) அறியப்படும் அசத்துப் பொருளும் அறியப்படாத சூனியப்பொருளும் ஆகிய இவ்விரு பகுதியுமன்றி, ஒருவாற்ருல் அறியப்படாமையும் ஒருவாற்ருல் அறியப்படுதலுமாகிய இரண்டு வகையாலும் சிவசத்தாம் எனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற்றுயர்ந்தோர். (எ-று.)

இதில்,

க-வது—தன்ருற் கூறப்படும் பொருள் — அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.

உ-வது—ஐயப்பாடு—முதல்வன் வாக்கு மனதீதப் பொருளோ, கோசரப் பொருளோ. (கோசரம்—அறியத் தக்கது.)

ந-வது—பிறர் கூறும் பக்கம்—வாக்கு மனதீதமாகிய அநிருவசனம் என்றல் பொருந்தும். கோசரமாமென்றல் பொருந்தாது. (இது மாயாவாதிகள் பக்கம்.)

கோசரமாமென்றல் பொருந்தும். வாக்குமனதீதம் என்றல் பொருந்தாது. (இது நையாயிகர் முதலியோர் பக்கம்.)

பாவனைக்குக் கோசரமாதலே யன்றித் தன்னுலுணரும் உணர்விற்குக் கோசரமென்றல் பொருந்தாது. (இது பாதஞ்சலர் பக்கம்.)

பசுத்துவம் நீங்கியவழி ஆன்மஞானத்திற் கோசரமாம். (இது சமவாத சைவர் பக்கம்.)

முத்தியிற் சிவமேயன்றி உயிரென வேறின்மையின் உயிருக்குக் கோசரமாதலென்ப தொன்றில்லை. (இது சிவாத்துவித சைவர் முதலியோர் பக்கம்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—வாக்கு மனங்களால் ஓதி யுணரப்படும் நிருவசனப் பொருளைச் சாதனங்களினின்றும் அறியவேண்டுவதில்லை யாகையாலும், ஒருவாற்ருலும் அறியப்படாத அநிருவசனப் பொருள் சாதனத்தினின்றும் அறியப் படுதலில்லையாகையாலும், அறியப்படுதலும் அறியப்படாமையு மாகிய இவ்விருதன்மையுமின்றி வாக்குமனதீதகோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமாம். (வாக்குமனதீதமாவது பசுஞான பாசஞானங்கட்கு எட்டாமை. கோசரமாவது ஒற்றுமைப்பட்டு நின்றுணரும் அநுபவஞானமாத்திரைக்கே விளங்குதல். வாக்கு என்பது நாதமுடிவான பாசஞானத்தையும், மனம் என்பது பசுஞானத்தையுமாம். முற்கூறிய ஐவரும் பின்வரும் ஐந்து வெண்பாக்களால் முறையே மறுக்கப்படுதல் காண்க.)

ரு-வது இயைபு—

**உதாரண வெண்பா.**

எண்ணிய சத்தன் றசத்தன்ரு மென்ருலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டான்—எண்ணி
அறிய விரண்டா மசத்தாதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்ரு ளாம்.

(இ-ள்) எண்ணிய சத்து அன்று அசத்து அன்று என்ருல் உளது என்றல் என் கண்ணி — (பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் விவகாரத்திற்) கருதப்பட்ட சத்துமன்று அசத்து மன்று என்னின், அங்ஙனம் ஒரு பொருள் உண்டென்பது யாது பிரமாணங்கருதியோ?, (அதனைக் கூறுவாயாக, பிரமாணம் உண்டெனின்

அதற்கு அது பிரமேயம் எனப்பட்டு ஞேயமாவான் செல்லு மென்றஞ்சிப் பிரமாணமில்லை யென்பையாயின்) மெய்கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம்—சத்தினியல்பை யுணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் (காட்சி முதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம் ஒருவாற்ருனும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய) இரண்டும் (மேற் கூறியவாற்ருன்) அசத்தேயாம், ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம்—ஆதலால் (சாந்தோக்கியம் முதலியவற்றுட்) சத்து என்று ஓதப்படும் சுட்டறிவிஞல் அறியப்படாத மெய்ப்பொருள் (சைவ உபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அந்நியமின்றி நின்றுணரும் அநுபவமாத்திரையிற் கேர்சரிப்ப தென்ருேதப்படுஞ்) சிவனருளாவதன்றி நீ கூறுஞ் சூனியமன்று. (எ-று)

இதனல், "பரமார்த்தமாகிய பரப்பிரமப் பொருள் அவிச்சைவயத்தான் *ஞாதாவெனவும் ஞேயமெனவும் பகுக்கப்பட்டு, முன்னர்க் கூறப்படுஞ் சாதனங்களினின் றறியவும்படும். அவிச்சை நீங்கிய வழி அப்பகுப்பின்மை யாற் சத்தென்றுதல் அசத்தென்றுதல் ஒருவாற்ருனும் ஞேயமாமாறின்றிக் கேவல ஞானமாத்திரையேயாய் நிற்ப தொன்ருகலான் அது கோசரமாம் என்றல் பொருந்தாது" என்று கூறும் மாயாவாதியை மறுத்து "சத்து மன்றி அசத்துமன்றி ஒரு பொருள் உண்டு எனின் அதற்குப் பிரமாணம் என்னை? பிரமாணுதீதமாகிய சூனியம் எனின், சூனியமும் அழிபொருளுமாகிய இரண்டும் அசத்தே யென்பது மேற்காட்டினமையால் பிரமப்பொருள் அசத்தென்னப்பட்டுச் சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணுமாகலின் அவற்றுட் சத்து என்ருேதப்படும் பரப்

---

* ஞாதா—அறிபவனுகிய சீவன்; ஞேயம்—அறியப் படுவதாகிய பிரமப் பொருள்.

பிரமப்பொருளாவது உண்மை ஞானத்திற் கோசரிப்பதென யாங் கூறுஞ் சிவமேயன்றி நீ கூறும் சூனியம் அன்று" என்று கூறி கோசரம் என்றதனை வலியுறுத்தியவாறும்.

**உதாரணவெண்பா.**

உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
யுணருநீ தானுணரா யாயி—னுணருமுனிற்
றனிரண்டா மெய்கண்டான் றன்ற லுணர்தலாற்
றனிரண்டாய்க் காணன் றமி.

(இ-ள்.) உணர்ப அசத்து—(நின்றால்) அறிவனவாய கருவிகளெல்லாம் (நான்காஞ் சூத்திரத்திற் கூறியவாறு) அசத்தாம். (அசத்தெனவே அசித்தாதலும் பெறப்பட்டது). ஆதல்—ஆதலால், ஒன்று ஒன்றை உணராது—(அவற்றுள்) ஒரு கருவியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட்டாது, (அஃதாவது பதிப்பொருள் பாசஞானத்தால் அறியப்படாதது என்பதாம்), உணரும் நீதான் உணராய்—அக்கருவிகளால் அறிகின்ற நீதானும் அம்முதற்பொருளை அறியமாட்டாய். (அஃதாவது பதிப்பொருள் பசுஞானத்தாலும் அறியப்படாதது என்பதாம்), ஆயின்—நீ ஆய்ந்தறிவையாயின், உணரும் உனின் இரண்டு ஆம் — உணர்கின்ற உனக்கு வேறாம். (அஃதாவது உன்னால் கருவிகளைக் கொண்டு அறியப்படும் பொருள்கள் உனக்கு வேறாதல் போல முதற்பொருளும் உனக்கு வேறாம்), மெய்கண்டான்—(உயிர்க்கு அறிவு விளங்கும்) உண்மையை அறிந்தோன், தன்னால் உணர்தலால்—தன் அறிவு அச்சிவத்தினருளின் அடங்கி அவ்வருளாய் நின்று அவ்வருளாலே அச்சிவத்தை யறியுமாதலால், தமி — அத்தனி முதற்பொருளை, இரண்டாய் காணான்—(ஏனைப் பொருள்களை வேறாய் நின்று அறியுமாறு போல்) வேறாய் நின்று அறியமாட்டான்.

உணர்ப—உணர்வன. ஒன்று—ஒன்றும். உன்னின் என்பது உனின் என நின்றது புறநடை. தமி—தமியை. தான் அசை.

இவ்வெண்பாவினாற் போந்த பொருள்—"அறிந்த பொருளைப் பின் வேறு வழியாய் அறிதலுங் கூடும். (எங்ஙனமெனில் ஸ்பரிச உணர்ச்சியால் அறிந்த பொருளை ரூப உணர்ச்சியாலும் அதாவது கண்ணினாலும் அறியலாம்.) அதுபோல் முன்னே பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் அறிந்த முதற்பொருளையே பின்னர் பதிஞானத்தால் உயிர் அறியும். ஆதலால் முதற்பொருள் பாசஞான பசுஞானங்களுக்கு எட்டாதது என்றல் பொருந்தாது'' என்று கூறும் நையாயிகரை மறுத்து, பதிப்பொருள் பசு பாசஞானங்களால் அறியப்படின், அவ்விரண்டு ஞானங்களினால் அறியப்படும் குடம் படம் முதலியவை உயிரின் வேறாதல் போல், முதற் பொருளும் உயிரின் வேறாம். வேறாகும் பொருள்கள் அஞ்ஞானத்தா லுண்டாகும் சுக துக்கங்களை யுண்டாக்குமே யன்றி அஞ்ஞானத்தினின்றும் நீங்கிய பேரின்பத்தைத் தரா. ஆதலால் ஆன்மா அறியும் உண்மையை உணர்ந்தோன் (முதற் பொருள் ஏனை உலகப் பொருள்கள் போல அசத்தல்லாத தனிமுதற்பொருளாகையால்,) அதனை அறியுங்கால் தன் அறிவு அதன்கண் அடங்கி அதுவாய் நின்று அதனாலே அதனை யறிவன். ஏனைய பொருள்களைப் போல் வேறாய் நின்றறிவானல்லன் என்று கூறி முதற்பொருள் வாக்கு மனாதீதமாய் நின்றே கோசரமாமென வலியுறுத்தப்பட்டது.

கீழ்வருஞ் செய்யுட்கள் இவ்வுதாரண வெண்பாவின் கருத்தை விளக்குவனவாம்:—

தல் கூடாது. ஆதலால் மேலே வெண்பாவிற் கூறிய வாறு 'தன்னால் உணர்தல்' என்பது தன்னைப்பற்றுதல் (அஃதாவது ஒன்றனை ஒன்று பற்றுதல்) என்னும் குற்ற மாகும் ஆதலால், அவ்வாறன்றி வாக்குமனாதீதமாய் நிற் கின்றபொருள்யோகநூலிற் கூறுந்தியானபாவனைகளிற்கு எட்டும் என்பதே பொருத்தமாம்'' என்று கூறும் பாதஞ்சலர் கூற்றை யாசங்கித்து, அம்முதற் பொருளின் அருளைக்கொண்டு அதனை யறிதலே "தன்னாலுணர்தல்'' எனப்படுதலால் தன்னைப் பற்றுதல் என்னும் குற்றம் உண்டாகுமாறில்லை யென்பதையும், நால்வகைப் பாவனை களுக்கும் அது கோசரமாகாமையும் விளக்கி அவர்களை மறுத்து முதல்வன் தன்னாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்தியவாறும்.

அவனருளை யறியுமாறும், அவ்வருளால் பாவிக்கு மாறும் உண்மை யதிகாரத்தில் (ஒன்பதாஞ் சூத்திரத்திற்) பெறப்படும்.

உதாரண வெண்பா.

அறிய விரண்டல்ல னாங்கறிவு தன்னா
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

கொண்டுகூட்டு—அறிய இரண்டு அல்லன், அறிவி னுள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான். அறிவிக்குக் காட்டாகி நின்றானை அறிவு கண்டறிந்து காட்டாது; மெய்யறியாக் கண் என்ன.

(இ-ள்.) அறிய இரண்டு அல்லன்—(சிவாகமங்களில் அத்துவிதமே கூறுதலால்) உயிர் தன் அறிவால் முதல் வனை அறிதற்கு முதல்வன் உயிரின் வேறல்லன் (ஆக லானும்), அறிவின் உள்ளான் அறிவு தன்னால் அறியப் பட்டான்—(சமமாதலின்றித் தூலசூக்கும முறையில்) தன்

அறிவுக்குள்ளுமாய் நிற்றலின் தன் அறிவினு லறிய வாரான் (ஆகலானும்), அறிவுக்குக் காட்டு ஆகிநின்றுனே—தன் அறிவுக்கு வியஞ்சகமாய் (துணையாய் அல்லது விளக்கந் தருவதாய்) அறிவித்து உயிர்க்குயிராய் நிற்றலாலும், அத்தன்மையான முதல்வனே, அறிவு கண்டறிந்து காட்டாது—(பசுத்துவம் நீங்கிய வழியும்) ஆன்மாவினறிவு தான் கண்டறிந்து (தன் குணியாகிய ஆன்மாவுக்குக் கோசரமாம்படி) காட்டமாட்டாது, (எது போலவெனில்), மெய்யறியாக்கண் என்ன—(தன்னின் வேறின்றித் தனக்குள் நிற்றலினுல் தன்னுற் காணப்படாது தனக்குக் காட்டாகி நின்ற) உயிரை அறியமாட்டாத கண்ணுெளிபோல (எ-று.)

ஆங்கு அசை. கண்டறிதல் என்பது ஒரு பொருட் பன்மொழி; இது சிறப்பின் கண் வந்த மீமிசை. காட்டு—காட்டுதல் என்னும் பொருளைத் தரும் முதனிலைத் தொழிற்பெயர். கண் என்பது கண்ணுெளியை. மெய் என்பது உயிரை. கண் முதலியவற்றை நோக்க உயிர் சத்துச்சித்து என்பது தோன்ற உயிரை மெய் என்றுர்.

உயிரின் வேருன பொருளை உயிரின் அறிவு அறிதல் கூடுமேயன்றி, உயிரோடு அத்துவிதமாய்க் கலந்திருக்கும் முதல்வனை அறியமாட்டாது என்பது தோன்ற "அறிய இரண்டல்லன்" என்றுர்.

முதல்வன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்திருந்தும் உயிரோடு சமமாதலின்றி, உயிர் தூலமாய் வெளிப்பட்டு நிற்க, முதல்வன் சூக்குமமாய் வெளிப்படாமல் உயிரின் அறிவுக்குள்ளாக நிற்பன். ஆதலால் மலம் நீங்கிய விடத்தும் உயிரின் அறிவால் முதல்வன் அறிய வாரான் என்பது தோன்ற "அறிவு தன்னுல் அறியப்படான் அறிவினுள்ளான்" என்றுர்.

முதல்வன் உயிர்க்குயிராயிருந்து, அதன் அறிவுக்குத் துணையாய் நின்று அறிவித்தலால் உயிர் அறியும். ஆதலால் அத்தன்மையான முதல்வனை ஆன்மஞானம் கண்டறிந்து உயிர்க்குக் காட்டமாட்டாது என்பது தோன்ற "அறிவுக்குக் காட்டாகி நின்றுனைக் காட்டா தறிவறிந்து கண்டு" என்றார்.

கண்ணொளி கண்ணின் வேறான பொருளை யெல்லாம் அறியும். கண்ணின் உள்ளாய் நிற்கும் உயிரையறியாது. அதுபோல், உயிரின் அறிவு உயிரின் வேறான பொருளை யறிதல் கூடும். உயிர்க்குயிராய் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் முதல்வனை யறியமாட்டாது என்பார் "கண்ணறியா மெய்யென்ன" என்றார்.

இவ்வெண்பாவினாற் போந்த பொருள் — "பாவனையும் பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் ஆவதனால், சத்தாகிய சிவம் பாவனைக்குக் கோசரமாகாதென்றல் ஒக்கும். ஆனாலும், தன்னருளாற் பாவிக்க வேண்டுவதில்லை, ஆன்மா பசுத்துவம் நீங்கிய முத்திக் காலத்தில் சிவத்தைப்போல் முற்றுமுணர்தல் முதலிய எண்குணங்களும் உடையதாம் என்று ஆகமங்கள் கூறுவதனால் அப்போது ஆன்மாவினறிவு சிவஞானத்தோடொத்த ஞானமேயன்றி பசுஞானமன்று. ஆதலால் முதல்வன் அவ்வறிவினால் அறியப்படும் கோசரப் பொருளாம் என்பதே பொருத்தமாம்" என்று சிவசமவாதிகள் கூறுவதை மறுத்து அவனருளாலன்றி அம் முதல்வன் கோசரமாகாமை சித்தாந்தஞ் செய்யப்பட்டது.

**திருத்தாண்டகம்**

ஆட்டுவித்தா லாரொருவ ராடா தாரே
யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரே
ஓட்டுவித்தா லாரொருவ ரோடா தாரே
யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரே

பாட்டுவித்தா லாரொருவர் பாடாதாரே
பணிவித்தா லாரொருவர் பணியாதாரே
காட்டுவித்தா லாரொருவர் காணாதாரே
காண்பாரார்கண்ணுதலாய் காட்டாக்காலே.

**உதாரண வெண்பா**

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல னுங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.

(இ-ள்.) அது என்னும் ஒன்று அன்று—(சத்தாகிய சிவம் ஞேயப்பொருளாய், அதாவது அறியப்படும் பொருளாய், விசிட்டமாய், அதாவது பசுபதியாய், நிற்பதென்பது சிவாத்துவித சைவரும் சுத்த சைவருமாகிய உமக்கும் உடன்பாடேயாகலான், அச்சிவம் இன்னதென்றறியவாராது அநிருவசனமாய், அதாவது சொல்லொணாததாய், நிற்பதொரு விசேடமற்ற பொருளெனக்கொண்ட மாயாவாதத்தைப் போல) அதுவென்று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனியம் அன்று. (ஆகலான்), அது அன்றி—அந்த ஞேயமாத்திரையேயன்றி, (அதாவது அருளாலறியப்படும் அச்சிவம் மாத்திரமேயன்றி), வேறு—அதனின் வேருக, அது என்று அறி அறிவும் — (வாக்குமனாதீதமாய் நிற்பது) அம் முதற்பொருள் என்றறிகின்ற ஞாதாவாகிய உயிரும், ஆங்கு உண்டே — அம் முத்திநிலையில் உள்ளதேயாம். (அவ்வாறு சிவமும் உயிரும் முத்தியில் வெவ்வேருய் உண்டென்றல், உயிர் சிவத்தோடு ஒன்றுதல், அதாவது சிவமாதல், பெறப்படாதேயெனின்), அது என்று அறிய இரண்டு அல்லன் — (உலகத்துப் பொருள்போல்) அதுவென்று சுட்டி யறியுமாறு முதல்வன் உயிரின் வேருய் நிற்பானல்லன், அறிவுள் நிற்றல்—உயிரின் அறிவின்

கண் முதல்வன் கலந்து வேற்றுமை தோன்ருது நிற்ற லால், அறியும் அறிவு சிவமும் ஆம் — (நீரோடு கலந்த உப்பு நீரேயாய் நிற்றல் போல்) சுட்டியறியும் அறிவுகெட்டு முதல்வனருளாலறிகின்ற அவ்வுயிர் சிவமேயாம். (எ-று.)

சிவமுமாம் என்பதில் உள்ள உம்மை உயிர் கலப்பி ஞல் சிவமாயும், பொருளின் தன்மையால் உயிராயும் இருத்தலை விளக்கிநின்றது.

ஏகான்மவாதிகள் துவம்பத லட்சியார்த்தமாகிய சித்தே தற்பத லட்சியார்த்தமாகிய சிவம் என்பர். வாச்சி யார்த்தம் தடத்தமும் லட்சியார்த்தம் சொரூபமுமாம்- தடத்த நிலையில் உயிரும் சிவமும் அந்நியமாயிருக்கும். சொரூபநிலையில் அவ்விரண்டும் அநந்நியமாயிருக்கும். அது பற்றியே உயிர் சிவம் என்று ஆகமங்கள் கூறும். இவ்வளவேயன்றிச் சிவமன்றி உயிர் வேறில்லை யென்பது கருத்தன்று. உயிர் வேறில்லையாயின் இன்ப அநுபவ மும் இல்லையாய்விடும். இன்ப அனுபவமும் இல்லை யென்பதே தமது கொள்கை யென்பரேல், அநுபவிப்பவ னும் அநுபவமும் இல்லாதபோது அநுபவிக்கப்படும் பொருளும் இல்லை யெனப்பட்டு அவர் வாதம் சூனிய வாதமாம்.

இவ்வெண்பாவிஞற் போந்த பொருள் - முத்தியில் முதல்வஞேடு கூடிய உயிர் அம்முதல்வஞேடு ஒன்ருய்ப் போதலிஞல் அந்நிலையில் அறியும் பொருளும் அறியப் படும் பொருளும் இல்லை எனச் சிவாத்துவித சைவரும் சுத்த சைவரும் கூறுவதை மறுத்து, உயிர் முதல்வ னுடன் கூடி ஒன்ருன விடத்தும் உயிர் அறிவதும் முதல் வன் அறியப்படுதலும் உண்டென்று விளக்கியவாரும்.

இவ்வதிகரணத்தாற் போந்த பொருள் — இவ்வதி கரண வெண்பாக்கள் ஐந்தில் முதல் வெண்பாவால்

"முதற்பொருள் வாக்கு மனதீதமென்றல் பொருந்தும்; கோசரமா மென்றல் பொருந்தாது" என்னும் மாயாவாதிகளையும், இரண்டாவது வெண்பாவால் "கோசரமா மென்றல் பொருந்தும். வாக்கு மனதீதமென்றல் பொருந்தாது" என்னும்-நையாயிகர் முதலியோரையும், மூன்றுவது வெண்பாவால் "பாவனைக்குக் கோசரமாம்" என்னும் பாதஞ்சலரையும், நாலாவது வெண்பாவால் "ஆன்மஞானத்திற்கே கோசரமாம்" என்னும் சமவாத சைவரையும், ஐந்தாவது வெண்பாவால், "முத்தியிற் சிவமே யன்றி உயிரென வேறின்மையின் உயிர்க்குக் கோசரமாதல் என்பதொன்றில்லை" என்னும் சிவாத்துவித சைவர் முதலியோரையும் மறுத்து முதல்வன் வாக்கு மனதீத கோசரமாய் நிற்கும் இயல்பை வலியுறுத்திய வாறும்.

இவ்வாறு முதல் மூன்று சூத்திரங்களினால் (பிரமாண இயலில் உண்டென்று சித்தாந்தஞ் செய்த) பசு பாச பதிகட்கு இலக்கணங் கூறுமுறையில் நான்காஞ் சூத்திரத்தால் சகச மலத்துணராது கிடக்குங் கேவலாவத்தையும், ஐந்தாஞ் சூத்திரத்தால் கருவிகளோடு கூடி விடயங்களை யறியுஞ் சகலாவத்தையும், ஆறாஞ் சூத்திரத்தால் பாச ஞான பசுஞானங்களைக் கடந்து பதிஞானத்தாற் சிவனை யறியுஞ் சுத்தாவத்தையும் காட்டப்பட்டன.

இலக்கணவியல் முற்றிற்று.

## ஏழாஞ்சூத்திரம்

**யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்**
**சத்தே யறியா தசத்தில தறியா**
**திருதிற னறிவுள திரண்டலா வான்மா.**

இந்நூற் சூத்திரம் பன்னிரண்டனுள் முதல் ஆறு சூத்திரம் பொதுவதிகாரமும், பின் ஆறு சூத்திரம்

அறிவில்லாத சடமாதலினால் சத்தாகிய சிவத்தை யறியாது, (ஆதலாற் பாரிசேட அளவையால்), இருதிறன் அறிவு உளது – இருதிறன் அறிவுள தொன்று உண்டென்பது பெறப்படும், (அதாவது சத்து அசத்தாகிய இரண்டினையும் அறியும் அறிவை யுடைய ஒரு பொருள் உண்டென்பது பெறப்படும்), ஆதலால் அப்பொருளே, இரண்டலா ஆன்மா — சத்தாதலும் அசத்தாதலும் ஆகிய இரண்டு மன்றிச் சதசத்தாயுள்ள உயிராம். (எ-று.)

பொதுவதிகாரத்துள் இலக்கணவியலாகிய ஆறாஞ் சூத்திரத்தால் "உணருருவசத்து" எனவும் "இருதிற னல்லது சிவசத்து" எனவும் கூறி அசத்தி னிலக்கணத் தையும் சிவசத்தினிலக்கணத்தையும் வரைசெய் துணர்த் திய ஆசிரியர், இது அசத்து, இது சிவசத்து என்று அறியும் பொருள் அவ்விரண்டினுள் ஒன்றோ வேறோ என்னும் ஐயம் நிகழாமை வேண்டி, அச் சூத்திரத்திற்குப் புறனடை யெடுத்து உண்மை யதிகாரத்துச் சாதன வியலாகிய இவ்வேழாஞ் சூத்திரத்தில் சத்து அசத்து என்னும் அவ்விரண்டினையும் அறிவதும் அவ்விரண்டின் வேறானதுமான (அதாவது சத்தும் அசத்தும் அல்லா ததுமான) சதசத்தாகிய உயிரின் இயல்பை யுணர்த்து முகத்தால் சாதனஞ் செய்து பயன்பெறுதற்குரிய அதிகாரியின் இயல்பை உணர்த்துகின்றார்.

"சத்தெதிர் யாவையுஞ் சூனியம்" என்றது சுட்டுணர் வின்றி நின்றறியுஞ் சிவசத்தின் முன்னர்ச் சுட்டியறியப் படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாமையை; (இல்லாமையை யன்று). விளங்கித் தோன்றாமையாவது– இது குடம் இது ஆடை யென நம்மவராற் சுட்டியறியப் படுவதுபோல் முதல்வனாற் சுட்டியறியப்படுவதாய் வேறு நில்லாமையாம். முற்றுணர்வுடைய முதல்வனுக்கு அசத்தை யறியும் சுட்டுணர்வும் உண்டென்பதனால்

வரும் குற்றம் யாதெனில், தன்னியல்பாகிய இயற்கை யுணர்வின்முன் பொதுவியல்பாகிய , செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையால், முதல்வனுக்குச் சுட்டுணர்வும் உண்டென்பது அறியாதார் கூற்றும்.

சத்தே என்பதில் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

சிவமும் பிரபஞ்சமும் ஆகிய இரண்டும் ஒன்றினை யொன்று அறியாதென விலக்கவே, எஞ்சிய உயிரே அவ்விரண்டினையும் அறியும் என்று கூறுதல் பாரிசேட அளவையாகும். உயிர் சத்தாகவேனும் அசத்தாக வேனும் தனித்து நிற்றலன்றி சார்ந்ததன் வண்ணமா யிருந்து (அதாவது சத்தொடு கூடிச் சத்தாயும் அசத் தொடு கூடி அசத்தாயும் நின்று) சத்து அசத்து ஆகிய இரண்டினையும் அறிதலால் சதசத்து எனப்பட்டது.

## இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

1-வது:— யாவையுஞ் சூனியஞ் சத்தெதிராகலிற் சத்தே யறியாது.

2 வது:— அசத்திலதறியாது.

3-வது:— இருதிறனறிவுள திரண்டலாவான்மா.

## இச்சூத்திரத்தின் சூர்ணிகை

1-வது:—அரன் பாசத்தை அநுபவியான்.

2-வது:— பாசம் அரனை அநுபவியாது.

3-வது:— உயிர் அவ்வரனையடையும்; அநுபவிக்கும்.

## இச்சூத்திரத்தின் வார்த்திகம்

க-வது:—ஈண்டுச் சத்தினிடத் தசத்துப் பிரகாசி யாது என்றது—மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

உ-வது:— இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது—அதுதான் நிரூபிக்கில் இன்றாகலான்.

ங-வது:— இனி இருதிறனறிவுள திரண்டலா வான்மா என்றது — இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டின்பாலு முளதா யுள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இச்சூத்திரத்தின் உதாரண வெண்பா ஐந்து.

### ஏழாஞ் சூத்திரம் முதலதிகரணம்

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியாது.

(இ-ள்) வாக்கு மனாதீதமாகிய சிவத்தின் சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழாகலின், சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை யறிதல் செய்யாது. (எ-று)

இதில் க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்—அரன் பாசத்தை யநுபவியான்.

உ-வது—ஐயப்பாடு—பிரபஞ்சம் அரனால் அறியப் படுவதோ அறியப்படாததோ.

ங-வது— பிறர் கூறும் பக்கம் — பிரபஞ்சம் சிவனுக் குத் திருமேனியாகவும், மாயை சத்தியாகவும் விளங்கும் எனச் சுருதிகள் கூறுவதனாலும், சத்தின்முன் அசத் தெல்லாம் சூனியம் என்பது அவசித்தாந்தமாய் (அதா வது சைவசித்தாந்தத்தோடு முரணி) மாயாவாதிக் கூற்றாய் முடியுமாதலினாலும், முற்றுணர்வுடைய முதல்வ னுக்குப் பிரபஞ்சத்தைச் சுட்டியறியும் சுட்டுணர்வும் உண்டு என்பதனால் வருவதோர் குற்றமில்லாமையாலும் பிரபஞ்சம் முதல்வனால் அறியப்படும் பொருளே. (இவ்வாறு கூறுவோர் சிவாத்துவித சைவர்.)

சு-வது மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— சிவ சத்தின் முன் அசத்தாகிய பிரபஞ்சம் சூனியம் என்றது, பிரபஞ்சம் மாயாவாதிகள் கூறுவது போல் இல்பொருளா மென்று கூறவந்ததன்று. சிவத்தின் முன் பிரபஞ்சம் விளங்கித் தோன்றுதென்பதே அதன் பொருள். விளங் கித் தோன்றுதென்பதும், பிரகாசியாதென்பதும், முனைத் திடாதென்பதும், ஒருபொருளன. விளங்கித் தோன்றுமையாவது இது குடம், இது ஆடை என நம்மவரால் சுட்டியறியப்படுவது போல் முதல்வனாற் சுட்டியறியப் படுவதாய் வேறு நில்லாமையாம். ஆதலால் சத்தெதிர் யாவையுஞ் சூனியம் என்பது அவசித்தாந்த மாகாது. முற்றுணர்வுடையமுதல்வனுக்குச் சுட்டுணர்வும் உண்டுஎன்பதனல் வரும் தோஷம் என்னையோவெனில், முதல்வனுடைய முற்றுணர்வு தன்னியல்பாகிய இயற்கை யுணர்வாம். இது இடையே நீங்குதலின்றி எக்காலத் தும் நிலைபெற்றிருப்பதனல் மெய்யுணர்வாம். சுட்டுணர் வாவது பொதுவியல்பாகிய செயற்கை யுணர்வாம். இது இடையே தோன்றி மறைவதனல் பொய்யுணர்வாம். ஆதலால் முதல்வனுடைய தன்னியல்பாகிய இயற்கை யுணர்வின் முன் பொது வியல்பாகிய சுட்டுணர்வு பிரகாசியாது. அன்றியும், அசத்தை யறிவதாகிய ஏகதேச உணர்வு முற்றுணர்வைத் தடுப்பதாகலான் அஃது இல்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவதன்றி இழுக்காகாது. இவ்வேதுக்களால், சத்தாகிய சிவத்தின் முன் அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்று தென்பது துணியப்படும்.

ரு-வது—இயைபு.

**உதாரண வெண்பா.**

அன்னியமில் லாமை யரற்கொன் றுணர்வின்று
மன்னியமில் லானசத்தைக் காண்குவனே—லன்னியமாக்

காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

(இ-ள்.) அன்னியம் இல்லாமை அரற்கு—(தன்னுள் வியாப்பியமான, அஃதாவது தன் வியாபகத்தினுள் அடங்கிநிற்கும், பசு பாசங்களோடு) வேற்றுமையின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்கு, உணர்வு—சுட்டியுணரக்கிடப்பதாகிய ஒரு பொருள், இன்று ஆம்—இல்லை. (ஆகலான்), அன்னியமில்லான் — அத்தன்மையனாகிய முதல்வன், அசத்தைக் காண்குவனேல் — அசத்தாகிய பிரபஞ்சத்தை யறியலுறுவானாயின், அன்னியமாக் காணான் — (அறிந்தாங் கறிவனன்றி நம்மனோர் போல்) வேறாகச் சுட்டியறிவானல்லன், கதிர் முன் இருள்போல—சூரியன் முன் இருள் விளங்கி நில்லாததுபோல, அவன் முன் மாணு அசத்து இன்மை — அம் முதல்வ னெதிர் நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாது ஆகலான். (எ-று.)

இவ்வதிகரணத்தால் வாக்கு மனாதீதமாகிய சிவ சத்தின் சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழே யாகலாற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை யறிந்து அநுபவியாது என்பது விளக்கப்பட்டது.

## இரண்டாமதிகரணம்

### அசத்து இலது அறியாது

(இ-ள்.) அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலினால் சத்தாகிய சிவத்தை யறியாது. (எ-று.)

இதில் க-வது, தன்னாற் கூறப்படும் பொருள்—பாசம் அரனை அநுபவியாது.

உ-வது ஐயப்பாடு—கரணத்திற்குச் சிவத்தை யறியும் அறிவு உண்டோ, இல்லையோ,

௩-வது—பிறர் கூறும் பக்கம் — சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை யறியாதாயினும், அசத்தென்று சொல்லப்படும் தனு கரணம் புவனம் போகம் என்னும் நான்கினுள் ஒன்ருகிய கரணமானது, விளக்குப்போல் விகாரமின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியில், பெத்த நிலையில், அசத்தாகிய விடயங்களை யறிந்தாற்போல், முத்தி நிலையில் சிவகரணமாய் நின்று சிவத்தையறியும். ஆன்ம சந்நிதியில் சடமாகிய கரணத்திற்கு அறிவு உண்டாதல் எதுபோலு மெனின், கண்ணுடியின் சந்நிதியில் அதன் நிழலுக்குப் பிரகாசம் உண்டாவது போலும். அன்றியும், பதிஞானமும் பசுஞானமும் போல பாச ஞானமும் ஒன்று உண்டெனப்படுதலால், பாசத்தை அறிவுடையதன்று என்றல் பொருந்தாது. ஆதலால் பாசம் சிவத்தை யறியும் என்றல் அமையும். (இவ்வாறு கூறுவோர் சிவசங்கிராந்தவாதிகள்)

சிவசங்கிராந்தமாவது:— ஆன்மாவின் சந்நிதியில் காந்த பசாசம்போல் (அதாவது காந்தத்தை யடுத்த இரும்புபோல்) உடல் இயங்க, அதன்கணின்று கருவிகளே விடயங்களை யனுபவிக்கும். மலம் நீங்கிய விடத்து, கண்ணுடியில் முகவொளி தோற்றுமாறு போல, முதல்வன் திருவருள் ஆன்மாவிடத்துச் சங்கிரமித்துத் தோன்றும். அப்போது, உப்பளத்தி லிட்டவை யெல்லாம் உப்பா மாறுபோல ஆன்மாச் சிவமேயாய் அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங் களுஞ் சிவகரணங்களாய் மாறிச் சிவத்தை யறியும் என்பதாம்.

௪-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபு—பாச ஞானம் என்பதை தூலமாய் நோக்கும்போது அசத்துக்கு அறிவுஉள்ளதுபோல் தோன்றும். சந்தேக விபரீதமின்றிக் குற்றமற்ற காட்சியால் ஆராயுமிடத்து அதன்கண் அறி

வில்லாமை விளங்கும். பாசம் வாயிலாக உயிரின்கண் நிகழும் ஞானமே பாச ஞானம் என உபசரித்துக் கூறப் படுவதனுல், அதனைப் பாசத்திற்குள்ளதாகிய ஞானம் என்று கொள்ளல் அறியாதார் கூற்றும். அன்றியும் கண்ணுடியின் ஒளி நிழல்போலத் தோன்றினதேயன்றி ஒளியின் வேருய் நிழலென ஒன்றில்லாமையால், உயிரின் சந்நிதியில் கரணம் அறியும் என்பதற்குக் கூறிய உவமை பொருந்தாது. ஆதலால் பாசம் சிவத்தை யறியாதென் பது துணியப்படும்.

ரு-வது இயைபு.

**உதாரண வெண்பா**

பேய்த்தேர்நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் காணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்.

(இ-ள்.) பேய்த்தேர் நீர் என்று வ்ரும் பேதைக்கு—(பாலை நிலத்திற் காணப்படும் கானல் ஆகிய) பேய்த் தேரை நீர் என்று கருதி (அதனையுண்ண) வருகின்ற (தாகவிடாய் உடைய) அறிவில்லாதவனுக்கு, மற்று அணைந்த பேய்த்தேர்—(அதனையடுத்தபோது) தன்னுல் அணையப்பட்ட அப்பேய்த்தேர், அசத்து ஆகும் பெற்றி மையின்—(தான் முன்கருதியவாறு நீராதலின்றிப்) பொய் யாந் தன்மைபோல, வாய்த்து—(ஞானுசிரியன் கூறும் உபதேச மொழி) கிடைத்து, அதனைக் கண்டு உணர்வார் இல்வழியின்—அவ்வசத்தின் இயல்பை ஆராய்ந்தறிவார் இல்லாவிடத்து, அசத்து இன்மை காணும்—(அவர்க்கு) அவ்வசத்தின்கண் அறிவில்லாதாய் அசத்தாந்தன்மை காணப்படுதலின்றி, அறிவுள்ளதாய்ச் சத்தாந் தன்மையே காணப்படும். கண்டு உணர்வார் இல்லது எனக்காண்—அவ்வுபதேச மொழி கிடைத்து அதனியல்பை ஆராய்ந்

தறியவல்லார்க்கு அவ்வசத்து அறிவில்லதேயாம் என் றறிவாயாக. (எ-று.)

இதனால், நெருங்கிப் பார்க்குமுன் பாலை நிலத்தில் நீர் இருப்பதாக மதித்த ஒருவன் அதனை நெருங்கிப் பார்த்தபின் அதில் நீர் இல்லை என்று துணிவதுபோல், குரவன் உபதேசமொழியைக் கொண்டு ஆராய்ந்தறியாத விடத்துக் கரணம் அறிவுடையது போலத் தோன்றினும், உபதேசமொழி கிடைத்து ஆராய்ந்தறிந்த விடத்துக் கரணம் அறிவில்லாததேயாம் என்பது துணியப்படும் என்றவாறும்.

மூன்றும் அதிகரணம்

இருதிறனறிவுள திரண்டலாவான்மா

(இ-ள்.) சத்தும் அசத்துமாகிய இவ்விரண்டினையும் அறியுந் தன்மைத்தாய், உபதேசியாய் (அதாவது அறிவிக்க அறிவதாய்,) நிலைபெற்ற சத்தும் அசத்தும் ஆகிய இரண்டினிடத்தும் அநுபவ அறிவுளதாய் உள்ள அதுவே சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய ஆன்மா (எ-று.)

இருதிறனறிவு என்னுஞ் சொற்றொடர் இரண்டாம் வேற்றுமைத் தொகையாக இருதிறனையும் (அதாவது சத்தையும் அசத்தையும்) அறியும் அறிவு எனவும், மூன்றும் வேற்றுமைத் தொகையாக இருதிறனால் விளங்கிய அறிவு எனவும், ஏழாம் வேற்றுமைத் தொகை யாக இருதிறனிலுமுள்ள அறிவு எனவும் மூன்று பொருள்களைக் கொடுக்கின்றது. இம்மூன்று பொருள் களும் பின் வரும் மூன்று உதாரண வெண்பாக்களால் விளக்கப்பட்டிருக்கின்றன.

இதில் க-வது—தன்றற் கூறப்படும்பொருள்—உயிர் அரனை அடையும் அனுபவிக்கும்.

உ-வது—ஐயப்பாடு—சத்து அசத்தையும் அசத்துச் சத்தையும் அறியாதாயின் இவ்விரண்டினையும் அறியும் பொருள் இவ்விரண்டின் வேருய் உண்டோ, இல்லையோ.

௡-வது—பிறர் கூறும்பக்கம்—சத்து அசத்தையும் அசத்துச் சத்தையும் அறியாதாயின் இவ்விரண்டினையும் அறியும் பொருள் வேறில்லை. இவ்வாறு கூறுவோர் சிவாத்துவித சைவர் சிவசங்கிராந்தவாத சைவர் முதலாயினோர்.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபு. சத்தும் அசத்துமாகிய இவ்விரண்டினையும் அறியும் பொருள் வேறில்லையாயின் இவற்ருல் யாதொரு பயனுமின்ருய் இவை சூனியமாய் முடியும். ஆதலால் இவ்விரண்டையும் அறியும்பொருள் (பாரிசேட அளவையால்) இவற்றின் வேருய் ஒன்று உண்டு என்பதும், அதுவே சதசத்தாகிய ஆன்மா என்பதும் பெறப்படும்.

இருதிறனறிவு என்னுஞ் சொற்ருெடர்க்கு இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள் கொண்டு முற்கூறிய சிவாத்துவித சைவர் சிவசங்கிராந்தவாத சைவர் முதலியோரும், மூன்ரும் வேற்றுமைத் தொகைப் பொருள் கொண்டு ஆன்மா ஒருவர் அறிவிக்க வேண்டாது தானே அறியும் இயல்புடையது என்னும் சமவாத சைவர் ஈசுர அவிகாரவாத சைவர் ஐக்கியவாத சைவர் முதலியோரும், ஏழாம் வேற்றுமைத் தொகைப் பொருள் கொண்டு ஆன்மாவினறிவு சத்தோடு கூடுவதில்லை என்னும் பாடாணவாத சைவர் பேதவாத சைவர் முதலியோரும், ஆன்ம அறிவு சத்திேடு கூடியபோது ஒன்ருய்ப் போதலேயன்றி அதனிடத்தில் உள்ளதாகாது என்னுஞ் சுத்த சைவர் முதலியோரும் மறுக்கப்பட்டனர்.

இருதிறனறிவு என்பதற்கு, இருதிறனையும் அறியும் அறிவு என்று பொருள் கூறுங்கால், ஆன்மாவினறிவு சத்துப்போல் ஒருசேர அறியுந்தன்மையும் அசத்துப் போல் அறியாத தன்மையும் இன்றி, இருளின் தன்மை யும் ஒளியின் தன்மையுமல்லாத கண்ணின் தன்மைபோல், ஏகதேசமாய் அறியும் வேருய தன்மையது என்பது பெறப்படும். இரு திறனல் விளங்கிய அறிவு என்று பொருள் கூறுங்கால், அந்த ஏகதேச அறிவும் ஆகாயத் தின் குணமாகிய ஓசையானது துணையுள்ள விடத்து விளங்குவது போல, பெத்தத்தில் கருவியையும் முத்தி யில் திருவருளையும் துணையாகக்கொண்டு விளங்குந் தன்மையது என்பது பெறப்படும். இருதிறனிலு முள்ள அறிவு என ஏழாம் வேற்றுமைத் தொகைப்பொருள் கூறுங்கால் துணையைக் கொண்டு விளங்கும் ஏகதேச அறிவும் சார்ந்த பொருளின் வண்ணமாய் விளங்கும் படிகம்போல அசத்தோடு சார்ந்தவிடத்து அசத்தாயும் சத்தோடு சார்ந்தவிடத்துச் சத்தாயும், இவ்வாறு சார்ந்ததன் வண்ணமாய் அழுந்துந் தன்மையது என்பது பெறப்படும். இதனல் ஆன்மாவின் சிறப்பிலக்கணம் கூறியவாறுமாம்.

ரு-வது—இயைபு.

**உதாரணவெண்பா.**

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்ருகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்ருது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் ரெக்கு.

(இ-ள்) ஆய் இழை ஆய் ஆன்மா — நுணுகிய நூற் பொருள்களை ஆராய்வதாகிய உயிரே, அரு உருவம் அறிதல்—சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவ

தாகலான், அரு உருவம் அன்றாகும் — அஃது அவ் விரண்டுமன்றி அவற்றின் வேறாம் - (அவ்வாறாயின் அவ் விரண்டினையும் அறியும் உயிர்க்குத் தன் உண்மை அறியப்படுமோ, படாதோ என்று கேட்போர்க்கு அறியப் படும் எனில், தன்னோடு கூட மூன்றினையும் ஆன்மா அறிவது என்று கூறாமல் இரண்டினையும் அறிவது என்றல் பொருந்தாது. அறியப்படாது எனின் அறியப் படாத பொருள் சூனியம் எனப்பட்டுக் குற்றமாம். ஆத லால்), உண்மை — அவ்வான்மாவின் உண்மைத் தன்மை யானது, அருவுருவாய்த் தோன்றி உடன் நில்லாது — சத்தும் அசத்துமாகிய அவ்விரண்டும் போல விளங்கித் தோன்றி அவற்றோடு ஒப்ப நிற்பதும் அன்றாய், தோன் றாது நில்லாது — விளங்காது சூனியமாய் நிற்பது மன்றாய், மலர் மணம் போல் தொக்குத் தோன்றல் — மலரின் கண் வாசம்போல் அடங்கித் தோன்றுவதோரியல்பாம் (அஃ தாவது மலரின்கணுள்ள வாசமானது அம்மலர் போல விளங்கித் தோன்றாமலும், விளங்காது சூனியமாகாமலும் அதனின் அடங்கித் தோன்றுவதுபோல், சத்து அசத் தாகிய அவ்விரண்டும்போல் விளங்கித் தோன்றி அவ் விரண்டினோடு சமமாய் நிற்பதாகாமலும், விளங்காது சூனியமாய் நிற்பதாகாமலும், சத்தைச் சார்ந்த பொழுது சத்தாகவும், அசத்தைச் சார்ந்த பொழுது அசத்தாகவும், இவ்வாறு சார்ந்த பொருளின் வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோ ரியல்பாம்.) ஆதலால் அவ்வுயிர் அவ் விரண்டும் போல் தனித்தறியப்படுவதன்றி அவ்விரண் டினையும் அறியும் வழியால் அறியப்படுவதாம் (எ—று.)

இவ்வெண்பாவினால் இருதிறனறிவு என்பதற்குக் கூறிய மூன்று பொருள்களுள், ஆன்மா இரண்டினையும் அறியும் என்றதனை வலியுறுத்தி, அது அவ்விரண்டல் லாமை விளக்கப்பட்டது.

சுட்டியுணரப்படாமையால் சத்தை அருவென்றும், சுட்டப்படுதல் பற்றி அசத்தை உரு என்றுங் கூறினர். இழை யென்பது நூல். அது இவ்விடத்தில் சாத்திரத்தை யுணர்த்துகின்றது. ஆன்மாக்களுக்கு அறியும் தன்மை இருப்பதுபற்றியன்றே வேதாகமம் முதலிய நூல்கள் உண்டாயின என அதனை வலியுறுத்த வேண்டி "ஆயிழையா யான்மா" என்றனர்.

**உதாரண வெண்பா**

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர்நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

(இ—ள்) மயக்கமது உற்றும்—(நின் அறிவை விளக்குதற்குரிய வியஞ்சகம் இல்லாதபோது ஒரு விடயத்தை இன்னதென அறியமாட்டாது) மயக்கத்தை யடைந்தும், மருந்தின் தெளிந்தும்—(பசி நோய்க்கு அன்னம் போல) அம்மயக்க நோய்க்கு மருந்தாய வியஞ்சகம் உள்ளபோது அம்மயக்கம் நீங்கி அதனையின்னதென நிச்சயித்தும், பெயர்த்து உணர் நீ — இங்ஙனம் மாறி மாறி யுணர்ந்து வருகின்ற நீ, பேசில் சத்து ஆகாய்—சொல்லுமிடத்துச் சிவசத்தோடு ஒப்ப அறியுஞ் சத்தியுடையாய் அல்லை, அவ்வாறாயின் யான் அசத்தனோ என்பையேல், நீ அறிந்து செய்வினைகள் — (வியஞ்சகம் உள்ளபோதும்) நீ முன் அறிந்துசெய்த வினைகளை, நீ அன்றி அசத்து தான் அறிந்து துய்யாமை—இப்பொழுது நீயே அறிந்து அநுபவிக்க வல்லாயன்றி, நின்னின் வேறாயதும் அசத்தாகியதுமாகிய பாசம் அறிந்து அநுபவிக்க மாட்டாமையால், அசத்தும் அலை—அதனோடொப்ப அசத்தனுவாயுமல்லை, வேறு— (ஓசையாகிய குணத்தையுடைய ஆகாயம்போல், அஃதாவது ஆகாயத்திலுள்ள குணமா

இய ஓசை துணையுள்ளவிடத்து விளங்கித் துணையில்லாத விடத்து விளங்காதவாறு போல, வியஞ்சகம் உள்ள போது அறிதலும் அது இல்லாதபோது அறியாமையும் ஆகிய இரண்டும் உடைய நீ) அவ்விரண்டிற்கும் வேருய்ச் சித் அசித்தாம் தன்மையுடையாய் (எ—று.)

இதனல் இருதிறனறிவு என்னுஞ் சொற்ருெடர்க்கு முற்கூறிய மூன்று பொருள்களுள், ஆன்மா அறிவிக்க அறிவதாகிய உபதேசியாய் நிற்பதென்பதை வலி யுறுத்தி அது சத்தும் அசத்துமாகிய இரண்டுமல்லாத சதசத்து என்பது விளக்கப்பட்டது.

மயக்கமது என்பதில் உள்ள அது என்பது பகுதிப் பொருள் விகுதி. ஈற்றிலுள்ள தான் என்பது அசை. துவ் வாமை என்பது துய்யாமை என மருவியது. சத்தி யுடைய பொருள் சத்தம். அஃதில்லாப்பொருள் அசத் தம். சத்தம் அசத்தம் என்பன அம் ஈறுகெட்டு சத்து அசத்து என நின்றன. ஆதலால் சத்து ஆகாய் என்ப தற்குச் சத்தியுடையாய் அல்லை என்று பொருளுரைக்கப் பட்டது.

**உதாரணவெண்பா.**

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளதன்றே தண்கடனீ ருப்புப்போற்
ருனே யுளமுளவாத் தான்.

அன்வயம்:— அஞ்ஞானம் மெய்ஞ்ஞானந்தன்னில் அசத்தாதல் விளையாது. மெய்ஞ்ஞானந்தானே உளது அன்றே தான் ஏய் உளம் உளவா, உள்ளம் அணைதல் தண்கடல் நீர் உப்புப்போல் காண்.

(இ-ள்.) அஞ்ஞானம் — மேற்கூறிய மயக்கமாவது, மெய்ஞ்ஞானந் தன்னில்—ஒரு பெற்றித்தாய அறிவு

எனப்படும் சிவத்தின் முன் (அஃதாவது வேறுவேருகவும் விட்டுவிட்டும் அறியாது எவற்றையும் ஒரு தன்மையாக்வும் நீங்காமலும் அறிகின்ற அறிவுருவாகிய இறைவன் சந்நிதியில்), அசத்து ஆதல்-(சூரியன்முன் இருள் நில்லாதவாறுபோல) நிற்பதில்லை யாகலான், விளையாது—ஆண்டு உளதாதலின்றி (அதாவது அவ்விறைவனிடத்து உளதாகாமல்), மெய்ஞ்ஞானம் தானே உளது அன்றே—அச்சிவம் உள்ள அன்றே (அஃதாவது என்று சிவம் உண்டோ அன்றே), தான் ஏய் உளம் உளவா — தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிர்கள் உள்ளனவாக, உள்ளம் மணைதல்—அவ்வுயிர்களைப் பற்றி நிற்றல், தண் கடல் நீர் உப்புப் போல் காண்—தண்ணிய கடலின்கண் உளதாதலின்றி அக்கடலிடத்துள்ளதாகிய நீரைப் பற்றி நிற்கும் உப்புப் போல் என்றறிவராக. (எ-று.)

இதனல் இருதிறனறிவு என்பதற்குக் கூறிய பொருள்கள் மூன்றனுள் இருதிறனிலுமுள்ள அறிவு என்றதனை வலியுறுத்தவேண்டி உயிருக்கு உண்டென்று கூறிய மயக்கம் அவ்வுயிரோடு சம்பந்தமுடைய முதல்வனுக்கு உண்டாகாதோ எனவும், அம்மயக்கந்தான் உயிர்க்கு எக்காலத்து வந்தது எனவும் ஆசங்கை நிகழாவண்ணம் இறைவனுக்கு மயக்கமில்லை என்பதும் இறைவன் என்று உண்டோ அன்றே உயிர்களும் உளவாயிருத்தலால் அம்மயக்கம் உயிருக்கு அனுதியாகவே உள்ளதென்பதும் விளக்கப்பட்டன.

"தண் கடல் நீர் உப்பு" என்பதில் கடல் என்பது நீர் தங்குமிடமாகிய வெளியாம். கடல் சிவத்திற்கும், நீர் உயிருக்கும் உப்பு பாசத்திற்கும் உபமானங்களாம். கடல் (பூரண) வியாபகமும், நீர் (ஏக தேச வியாபகம் என்னும்) வியாப்பியமும், உப்பு (நீரளவில் வியாபகமான) வியாத்தியுமாம். இவ்வுதாரணத்தால், உப்பானது

நீர்க்கு இடம் கொடுத்திருக்கும் ஆகாயத்தைப் பற்ருது நீரைப்பற்றி நிற்பதுபோல் அஞ்ஞானமாகிய மயக்கம் இறைவனைப் பற்ருது உயிரை அனுதியே பற்றி நிற்கும் என்பதும், முப்பொருள்களும் வியாபகவியாப்பியங்களாய் நிற்குமாறும், உயிர் சத்து அசத்து ஆகிய இரண்டன்பாலும் அநுபவ அறிவு உள்ளது என்பதும் விளக்கப்பட்டன.

இச்செய்யுளின் ஈற்றிலுள்ள தான் என்பது அசை.

இருதிறனறிவுளது என்பதற்கு இருதிறனையும் அறியும் அறிவு உளது என்று பொருள் கூறுங்கால் இருதிறனுகிய சத்து அசத்து என்பன பிரமேயமும், அவற்றை யறியுஞ் சதசத்தாகிய உயிர் பிரமாதாவும், அவ்வுயிரின் அறிவாகிய சிற்சத்தி பிரமாணமும், அவ்வறிவு நிகழ்ச்சி பிரமிதியுமாம் என்பது பெறப்படும். (பிரமேயம்—அளக்கப்படும் பொருள். பிரமாதா—அளப்பவன். பிரமாணம்—அளவைக் கருவி. பிரமிதி—அளத்தல்). இருதிறனுல் விளங்கும் அறிவுளது என்று பொருள் உரைக்குங்கால்அசத்தால்அறிவு விளங்கும்போது தனக்கு வேருய் நின்று விளக்குவனவாகிய காட்சி அனுமானம் உரை எனப்படும்அசத்தாகியபாசஞானம் மூன்றும் தனக்கு வியஞ்சகங்களும், சத்தால் (அதாவது சிவத்தால்)அறிவு விளங்கும்போது அன்னியமின்றித் தனக்கு ஆதாரமாய் உடன் நின்று விளக்கும் சிவஞானம் தனக்கு வியஞ்சகமுமாம் ஆதலால் அவையும் பிரமாணம் என்று உபசரித்துக் கூறப்படும் என்பதும், இருதிறனிலும் அறிவுளது என்று பொருளுரைக்குங்கால் இரண்டிடத்தும் கேடின்றி, அசத்தான் அறிவு விளங்கி அசத்தை அறிந்தவிடத்து அசத்தினிடத்தும், சத்தால் அறிவு விளங்கிச் சத்தை யறிந்தவிடத்துச் சத்தினிடத்தும் அதுவதுவாய் அழுந்தி நிற்பது என்பதும் பெறப்படும்.

இச்சூத்திரத்தின் தொகைப்பொருள்—வாக்கு மனாதீதமாய்ச் சுட்டுணர்வின்றி நின்றறியுஞ் சிவசத்தின்முன் சுட்டியுணரப்படுவதாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாதென்பதும், அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாதலினால் அது சத்தாகிய சிவத்தை யறியாதென்பதும், இவை யொன்றை யொன்று அறியாதென விலக்கவே பாரிசேட அளவையின்படி இவற்றை யறியும் பொருள் வேறொன்றிருத்தல் வேண்டும் என்பதும், அதுவே சத்தும் அசத்தும் ஆகாமல் சத்தை யறியும்போது சத்தாகவும், அசத்தை யறியும்போது அசத்தாகவும் நிற்கும் இயல்புடைய சதசத்தாகிய உயிர் என்பதுமாம்.

## எட்டாஞ்சூத்திரம்

**ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினி னுணர்த்தவிட்**
**டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.**

ஏழாஞ்சூத்திரத்தால் சாதித்தற்குரிய அதிகாரம் தனக்குண்டென்றறிந்த ஆன்மாவுக்குச் சாதித்தலால் வரும் பயனையும், அதற்குச் சிறந்த சாதனத்தையும், அது வரும் வழியையும் உணர்த்தி, அவ்வான்மாவின் ஞானமானது அசத்தால் விளங்கி அசத்தினிடம் உள்ளதாய் அசத்தினையறிந்து நிற்கும் தன்மையினையும், சத்தால் விளங்கிச் சத்தினிடம் உள்ளதாய்ச் சத்தினையறிந்து நிற்கும் தன்மையினையும் தரிசிக்கும் முறைமையினை உணர்த்துதல் இச் சூத்திரத்தின் கருத்தாம்.

அன்வயம்:— தவத்தினில் தம்முதல் குருவுமாய், ஐம்புலவேடரின் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த, விட்டு, அன்னிய மின்மையின், அரன் கழல் செலும்.

(இ-ள்.) தவத்தினில் — (ஆன்மாவானது தான் முன்னே செய்துகொண்ட) புண்ணிய விசேடத்தால், தம்

முதல்—(தனக்கு இதுவரையில் வெளிப்படாது அந்தரியாமியாய் உள்நின்று உணர்த்தி வந்த) தன் முதலாகிய பரம்பொருளே, குருவுமாய் — இப்போது குருவடிவமுங் கொண்டெழுந்தருளிச் (சிவதீக்கை செய்து), ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்ந்தனை என — (அரசகுமாரனாகிய) நீ ஐம்பொறிகளாகிய வேடரோடுகூடியிருந்து வளர்ந்ததனால் நின் பெருமையறியாது மயங்கி இடர்ப்பட்டாய், (நின் பெருமை இத்தன்மையது) என, உணர்த்த—அறிவிக்க, விட்டு—(அறிந்த மாத்திரமே அவ்வேடரை) விட்டு நீங்கி, அன்னியம் இன்மையின் அரன்கழல் செலும் — அன்னியமின்றி அநந்நியமாந்தன்மையில் நிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை யணையும். (எ-று)

ஆன்மா என்பது மேலைச் சூத்திரத்தினின்றும் வருவித்து உரைக்கப்பட்டது. அரசகுமாரனாகிய நீ என்பது தோன்றா எழுவாய். ஐம்புலம் என்பது ஐம்பொறிகளை யுணர்த்தும் ஆகுபெயர். வளர்ந்து அயர்ந்தனை—வளர்ந்ததனால் அயர்ந்தனை. அயர்த்தல்—மறத்தல். ஆன்மா தன்முதல் என்னாது தம்முதல் எனப் பன்மைப்பாலிற் கூறியது நான் எங்கள் ஊருக்குப்போவேன். நீ உங்கள் ஊருக்குப் போ என்பது போலாம். ஆதலினால் அது பால் வழுவாகாது. குருவும் என்ற உம்மை இதுகாறும் உயிர்க்குயிராய் உண்ணின்றுணர்த்தியதுவுமன்றி ~~என இறந்தது தழுவியது~~. இறைவன் குருவடிவமுங் கொண்டுணர்த்தும் கருணையின் சிறப்பையு முணர்த்தலால் அது சிறப்பும்மையுமாம். அன்னியமின்மையின்—அன்னியமின்றாந் தன்மையுடையதாகி. ஆன்மா ஐம்பொறிகளோடு கூடியிருக்கும்போதும், அவைகளை விட்டு நீங்கியபோதும் முதல்வனோடு பிரிப்பின்றி நிற்குமாயினும், பொறிகளோடு கூடியபோது முதல்வனை மறந்து நிற்கும். அவற்றை விட்டு நீங்கினபோது இறைவனையறிந்து நிற்கும். அவ்

வாறு இறைவனை அறிந்து நிற்றலே ஈண்டு அரன் கழல் செலும் என்னப்பட்டது. அரன் என்பது அந்தத் தம் முதல் என்பதை யுணர்த்தும் சுட்டுப் பெயர் மாத்திரை யாய் நின்றது.

வெண் கொற்றக்குடையும், நவரத்தின கிரீடமும், சிங்காதனமும் அரசர்க்கேயுரிய அடையாளங்களாம். அது போலப் பிரபஞ்ச மெல்லாவற்றிற்கும் மூல காரணமாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் பேரறிவாகிய ஒரு பெருஞ் சுடர் முடியும் எவற்றினையும் அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று செலுத்து மியல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும் பிறர்க்கின்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமைபற்றி (பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலால் அரனென்னுந் திருப்பெயருடைய) முதல்வனை மன்னவனாகவும், அம் முதல்வனது பேரானந்தப் பெருஞ் செல்வமுழுவதும் தனதேயாகக்கொண்டு அநுபவிக்குஞ் சுதந்திரமுடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொப்புமையும்பற்றி ஆன்மாவை அரசகுமாரனாகவும், அவ்வான்மாவை அறிவுப் பெருஞ் செல்வ முழுவதும் வழிபறித்துக்கொண்டு சிறுமை யுறுத்துதலும் விதிவிலக்கை இழப்பித்து இழிதொழிலில் நிற்பித்தலுமாகிய இயல்பு பற்றி ஐம்பொறிகளை வேடராக வும் உருவகஞ் செய்தார்.

## இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

1-வது—தவத்தினி லுணர்த்த.

2-வது—தம் முதல் குருவுமாய்.

3-வது—ஐம்புல வேடரினயர்ந்தனை வளர்ந்தென.

4-வது—விட்டன்னிய மின்மையினரன்கழல் செலும்.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

*1-வது—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.*

*2-வது—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.*

*3-வது—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.*

*4-வது—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.*

### இச்சூத்திரத்தின் வார்த்திகம்

*1-வது—ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞான நிகழும் என்றது, மேற்சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.*

*2-வது—இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது, அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.*

*3-வது—இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா என்றது, அவை தாம் பளிங்கிலிட்ட வன்னம்போற் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.*

*4-வது—இனி இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் ஸ்ரீபாதத்தை யணையும் என்பது, ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந் துணையான்.*

*இச்சூத்திரத்தின் உதாரணவெண்பா ஒன்பது.*

### எட்டாஞ் சூத்திரம்—முதல் அதிகரணம்

### தவத்தினிலுணர்த்த

(இ-ள்.) (ஆன்மாவானது தான் முற்பிறவிகளிற் செய்த) தவமாகிய சரியை கிரியா யோக விசேடத்தால் (முதல்வன் குருவடிவங் கொண்டெழுந்தருளி) அறிவிக்க (அறியும்.) (எ-று.)

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்—உயிருக்கு நல்லறிவு சரியை கிரியா யோகமாகிய தவத்தினாலேயே வரும்.

உ-வது—ஐயப்பாடு—முத்திக்குச் சாதனம் சரியையாதிகளோ, ஞானமோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—

(1) முத்திக்குச் சாதனம் சரியையாதிகளாம்.

(2) முத்திக்குச் சாதனம் வேதத்துட் கூறிய வேள்வி முதலாயினவாம். (இவ்வாறு கூறுவோர் பாட்டாசாரியர்.)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு, சரியையாதிகள் ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடா.

வேள்வி முதலாயினவெல்லாம் அழிவெய்துவனவாகிய காமியப் பயன்களைத் தருவனவேயன்றி தத்துவ ஞானத்தைத் தருவனவன்று. ஆதலால் மேலான ஞான நெறியொன்றே முத்தியைப் பயப்பதாம்.

ரு-வது—இயைபு.

**உதாரணவெண்பா.**

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராக—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு.

(இ-ள்.) தவம் செய்தார்—சரியை முதலியவற்றைச் செய்தவர்கள், தவலோகம் என்றும் சார்ந்து—அவ்வத் தவப் பயன்களைப் பயப்பிக்குஞ் சாலோக முதலிய பதங்களைத் தப்பாமல் அடைந்து (அங்குள்ள இன்பங்களை அனுபவித்து), பற்று—(முன் உடம்பு இறக்குங்காலத்

தில் உண்டாயிருந்த) அவாவினை, பவஞ்செய்து அறுப்பார் ஆக—(மீள நிலத்தின்கண்) பிறந்து நீக்கிக் கொள்ளும்பொருட்டு, தவஞ்செய்த நற்சார்பில் வந்து உதித்து—(மீளத்) தவஞ்செய்தற்குரிய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றி, ஞானத்தை நண்ணுதலை—(தவக்குறைவால் அவ்விடயப்பற்று வளராவண்ணம் அறுத்துத்) தத்துவஞானத்தை யடைவர்; அவ்வாறடைதலை, கற்றோர் சூழ்—முத்தி நூல்களைக் கற்றோரது சூழ்ச்சி, கண்டு சொல்லும்—அந்நூற் கருத்துணர்ந்து சொல்லும். (அதாவது கற்றோர் தமது சூழ்ச்சியால் உணர்ந்து சொல்லுவர்.) (எ-று.)

ஈண்டு தவம் என்றது சரியை கிரியா யோகங்களை. தவலோகம் என்பது அச்சரியை கிரியா யோகங்களின் பயனாகிய சாலோக சாமீப சாரூப பதவிகளை.

உயர் குலத்திற் பிறந்து ஞானத்தை யடைதல் முற்சனனங்களிற் செய்த தவமுயற்சி யுடையார்க்கேயாம் என்பார் "தவஞ் செய்தார்" என்றனர்.

இவ்வுலகத்தில் உயிர்களாற் செய்யப்படும் வினைகள் (தவ வினையாயினும் ஏனைய வினையாயினும்) தத்தமக்குரிய உலகங்களிற் செலுத்தித் தத்தம் போகங்களைக் கொடுப்பது எக்காலத்தும் தவறாது என்பதை யுணர்த்துவார் "என்றுந் தவலோகஞ் சார்ந்து" என்றார்.

பற்றறுதற்பொருட்டு வந்துதிப்பர் என்றதனால் விடயங்களிற் பற்றுச் செல்லவில்லையாயின் இவ்வுலகத்தில் மீளவந்து பிறவாமல் சாலோக முதலிய பதங்களிலிருந்தே ஞானத்தை யடைதலுங் கூடும் என்பதறிக.

தவஞ் செய்யினும் ஞானம் உண்டாயினன்றிப் பற்று முற்றிலும் அறாது. ஆதலால் இறக்கும்போது ஞானமடையாதார் மனம் விடயத்திற் பற்றும். பற்றவே,

அதனை யனுபவித்தற்குத் துணையாகி எஞ்சி நின்ற உடல் வினையோடும் பிறந்து அனுபவித்த பின்னரே அப்பற்றறு தல் கூடும். ஆதலால் "பவஞ் செய்து பற்றறுப்பார்" என்றார்.

தவஞ் செய்தார் மனம் நல்விடயங்களையே பற்றுத லால்அவர்கள் அப்பற்றுக் காரணமாகப்பிறந்திடில் சிறந்த பிறவியே யெய்துவர் ஆதலால் "தவஞ் செய்த நற்சார்பில் வந்துதித்து" என்றார்.

(இழிதொழில்களைச் செய்பவர்களாகிய) இழிகுலத் தோர் தத்துவ ஞானத்திற் குரியரல்லர்; ஆதலால், "நற் சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலை" என்றார்.

தவமுதிர்ச்சியுடையார்க்கு இறக்குந் தருவாயிலிருந்த பற்றானது மறுபிறப்பில் இலேசாய் அனுபவித்துக் கழிவ தன்றி வளர்வதில்லாமையால் அம்மறுபிறப்பிலேயே அவர்களுக்கு ஞானமுண்டாம்; ஆதலால் "உதித்து ஞானத்தை நண்ணுதலை" யென்றார்.

இவையெல்லாம் வேதாகம நூற்றுணிபென்பார் "கற்றோர் சூழ் கண்டு சொல்லும்" என்றார். ஆம்—அசை.

உதாரண வெண்பா

பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்
இசைத்து வருவினையி லின்ப—மிசைத்த
இருவினை யொப்பி லிறப்பில் தவத்தான்
மருவுவனு ஞானத்தை வந்து.

(இ-ள்.) இசைத்து வருவினையில் இன்பம்—அறநூல் களிலே சொல்லப்பட்டு வருவனவாகிய புண்ணியப் பயனு கிய இன்பம், பசித்துஉண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்— முன்னர்ப் பசித்து உண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுணவால் வரும் இன்பத்தையொக்கும் (ஆதலால்), இசைத்த இருவினை—சொல்லப்பட்ட புண்ணிய பாவங்க

ளிரண்டும், இறப்பில் தவத்தால் ஒப்பில்—கெடுதலில்லாத சரியை கிரியா யோகங்களாகிய தவத்தால் நேராக ஒத்தால், வந்து ஞானத்தை மருவுவன்—(அத்தவப்பயனுகிய பத முத்திகளை யனுபவித்து அப்பதங்களிலிருந்தே ஞான நெறியைத் தலைப்படுவன். அவை அங்ஙனம் நேராகா விடின் மீள நிலத்தின்கண்) வந்து (வினையொப்பு நிகழ்ந்து குரவன் திருவருளால்) ஞானத்தைத் தலைப்படுவன். (எ-று.)

இவ்வெண்பா, பசுக்கள் பலவாயிருப்பினும் அவற்றால் தரப்படும் பால் ஒன்றேயாவதுபோல், நல்வினைகள் பலவாயிருப்பினும் அவற்றால் விளையும் புண்ணியம் ஒன்றேயாக, அவற்றுள் வேள்வி முதலியவற்றை யொழித்துச் சரியை கிரியா யோகங்களை மாத்திரம் ஈண்டுத் தவம் என்று சிறப்பித்துக் கூறியதற்குக் காரணம் யாதோ என்னும் ஆசங்கையை நீக்கி, ஏதுவை வலியுறுத்துகின்றது. அறநூலிற் கூறப்படும் நல்வினையின் பயனெல்லாம் அழிவெய்துவன என்பதற்கு அவ்வறநூலே சான்றென்பார் இசைத்து வருவினை என்றார். அதாவது, வேள்வி முதலியவற்றை விதித்த அறநூலே, அவற்றிற்குப் பயன் காமியம் என்பதையும் உடன் கூறுவதனுலும், காமியப் பொருளெல்லாம் அழிவெய்துவனவாதலாலும், அழிவெய்தும் பயனைத்தரும் புண்ணியங்கள் அழியாமல் நிலைபெற்ற ஞானத்தைத் தரமாட்டாவென்றவாறும்.

சரியை கிரியா யோகங்களால் வரும்பயன் அவை போல் அழிவதன்றென்பார் 'இறப்பில் தவம்' என்றார்.

இசைத்து வருவினையிலின்பம் நிலைபெருமை, முன்னர்ப் பசித்துண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுணவால் வரும் இன்பத்தை யொக்கும் எனவே, இறப்பில் தவத்தால் வரும் இன்பம் நிலைபெற்றிருத்தல் பசித்

துண்டு பின்னர்ப் பசியா தாராகிய தேவர்களுக்கு அவ் வமிழ்தவுணவால்வரும் இன்பத்தை யொக்கும் என்ற வாறுமாயிற்று.

சரியை முதலியவற்றிற்குச் சிறந்த பயன் ஞானமே யாகலாற் சாலோகம் முதலிய பதமுத்திகள் அவாந்தரப் பயனும்.

## இரண்டாமதிகரணம்.

### தம்முதல் குருவுமாயுணர்த்த

(இ-ள்.) தமக்கு அந்தரியாமியாய் உள்நின்று இது காறும் உணர்த்தி வந்த சிவபரம்பொருளே இப்பொழுது குருவடிவமுங் கொண்டெழுந்தருளி அறிவிக்க உயிர் அறியும் (எ-று.)

இதில் க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

உ-வது—ஐயப்பாடு—சற்குருவாய் (அதாவது ஞான குருவாய்) வருவது கடவுளோ நம்மிலொருவரோ?

ங-வது—பிறர் கூறும் பக்கம்:—

(1) உயிர்களுக்குத் தோன்றும் ஞானமானது ஓர் ஆசிரியன் உணர்த்த உண்டாதலே யன்றித் தானேயுண்டாதலில்லை. அவ்வாசிரியன் ஏனைய நூற்பொருள்களை யுணர்த்தும் நம்மனோரில் ஒருவனாதல் அமையும். (இவ்வாறு கூறுவோர் சாங்கியர் நையாயிகர் முதலியோர்.)

(2) அரும்பினின்று மலரும் மலரினின்று காயும் காயினின்று கனியும் தாமேயுண்டாவதுபோல சரியை கிரியா யோகங்களின் முதிர்ச்சியால் பிறிது காரணம் வேண்டாது மெய்ஞ்ஞானம்

தானே விளையும். ஆதலால் மெய்ஞ்ஞானத்தை யுணர்த்த அரன் சற்குருவாய் வரவேண்டுவ தில்லை.

(3) அழியாத திருமேனியையுடைய முதல்வன் மாயையின் காரியமாயழிகின்ற வடிவத்தைப் பொருந்தான். பொருந்துவனெனில், அவன் நம்மனோரில் ஒருவனாய் முடிவன். ஆதலால் முதல்வனே சற்குருவாய் வருவன் என்றல் பொருந்தாது. முதல்வன் குருமூர்த்தியை யதிட்டித்து (அதாவது ஆதாரமாகக்கொண்டு) நின்று பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு ஞானத்தை உணர்த்துவன் என்பதே பொருத்தமுடைத்து. இதுவே ஆகமங்களிற் கூறியதுமாம்.

சு-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—சரியை கிரியா யோகங்களை முறையே யநுட்டித்து அதனால் மலபரிபாகம் பெற்ற உயிர்களின் பக்குவத்தை அறிந்து உணர்த்துதல் அதுகாறும் உண்ணின்று உணர்த்தி வந்த முதல்வனுக்கே கூடுமன்றி ஏனையோர்க்குக் கூடாது. ஆதலால் உயிருக்கு ஞானாசிரியனாய் வருவது அரனே.

அரும்பினின்று மலரும், மலரினின்று காயும், காயினின்று கனியும் உண்டாவனவாயினும், அரும்பு மலர் காய் கனிகளுக்குச் சூரியனுதவி இன்றியமையாதது போல், உயிர்கள் சரியை கிரியா யோகங்களை யநுட்டித்து அதன் பயனாக ஞானத்தை யடைவதற்கும் இறைவன் திருவருள் இன்றியமையாததாம்.

தேவாரம்

படுவிப்பா யுனக்கேயாள் பலரையும் பணியாமே
தொடுவிப்பாய் துகிலொடுபொன் தோலுடுத் துழல்வானே

கெடுவிப்பா யல்லாதார் கேடிலாப் பொன்னடிக்கே
விடுவிப்பாய் குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

இத்தமிழ் வேதப்பனுவலால் இறைவன் உயிர்கள் சரியை கிரியா யோகங்களைச் செய்து தனக்கு ஆட்படுமாறு செய்வது மாத்திரமன்றி, அவைகட்கு ஞான குருவாய் வந்து தனது கேடிலாப் பொன்னடிக்கே விடுவித்தலாகிய கருணைத்திறமும் விளங்கும். ஆனால் இறைவன் உயிர்களிடம் பாலில் நெய்போல் மறைந்திருந்து அவைகளைச் சரியை கிரியா யோகங்களிற் செலுத்துவன். சரியை கிரியா யோகங்களைச்செய்து மலபரிபாகம் பெற்ற பின் தயிரில் நெய்போல் ஞான குருவாய் வெளிப்பட்டு உண்மை ஞானத்தை யுணர்த்துவன்.

தேவாரம்

விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

இறைவன் ஞானகுருவாய் வரும்போது மாயாகாரியமாகிய சரீரத்தை யதிட்டித்து நிற்காமல் குருவாகிய சுத்தான்மசைதன்னியமே (அதாவது மலமாசு நீங்கிய உயிரையே) தனக்குச் சொரூபமாகக்கொண்டு நிற்கும். அன்றியும், இறைவன் திருமேனியாகக் கொண்டருளும் ஆன்ம சைதன்னியம் இறைவனைச்சார்ந்து அவ்விறைவன் தன்மையை யடைந்தவிடத்து அவ்வான்ம சைதன்னியம் தங்கும் இடமாகிய சரீரமும் மாயாமயமாயிருப்பதொழிந்து அருள்மயமாய்ப் பொலிந்திலங்கும்.

இறைவனுடைய அதிட்டானம் பொதுவெனவும் சிறப்பெனவும் இருவகைப்படும். இவற்றுள், பொதுவதிட்டானமாவது (பாலில் நெய்போல்) மற்றெல்லா

வுயிர்களிடத்து மறைந்து நிற்றல். சிறப்பதிட்டானமாவது (தயிரில் நெய்போல்) ஞான குருவினிடத்து அவர் தமக்கு விளங்கி, கலப்பினுல் ஒன்ருயும் பொருளின் தன்மையால் வேருயும் நிற்றல். இது ஆவேசபக்கம் எனவும் சொல்லப் படும். (பேய்பிடியுண்டவனிடத்து அவன் செயலொழிந்து அப்பேயின் செயல் விளங்கிநிற்றல் ஆவேசமாம்.) ஆக மங்கள் கூறியதும் இச்சிறப்பதிட்டானத்தையேயாம்.

ரு-வது—இயைபு.

உதாரண வெண்பா.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் மூன்.

அன்வயம்—விஞ்ஞானகலர்க்கு தானே மெய்ஞ்ஞானம் விளையும். அன்றிப் பிரளயாகலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும். அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குரு வாய்ப்பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும் மூன்.

(இ-ள்.) விஞ்ஞானகலர்க்கு தானே மெய்ஞ்ஞானம் விளையும்—அம்முதல்வன் (மூவகை ஆன்மாக்களுள்) விஞ் ஞானகலருக்குத் தன்மையில் நின்றவாறே (அதாவது உள்நின்றபடியே) தத்துவஞானத்தை விளைவிப்பன், அன்றிப் பிரளயாகலருக்குத்தான் குருவாய் முன் உணர்த் தும்—அவ்வாறன்றிப் பிரளயாகலருக்கு நாற்றேளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்புகளோடுகூடி முத்தொழில் நடத்தி நின்ற தன் இயற்கைவடிவே குரு வடிவாகக் காட்டி முன்னுக நின்று தத்துவ ஞானத்தை உபதேசித்து உணர்த்துவன், அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குரு வாய்ப்பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும்—அவிச் சையை உடைய சகலருக்கு அச்சகலர் வடிவுபோலும்

வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை உணர்த்துவன், முன்—அவ் வேறுபாட்டை யறிவாயாக. (எ-று.)

முன் என்றது முன்னாகிய முதல்வன் என எழுவாயாய் நின்று உணர்த்தும் என்னும் பயனிலைகள் கொண்டதெனலுமாம்.

விளையும்—விளைவிக்கும். தன்மையில் விளையும்-தன்மையில் நின்றவாறே விளைவிக்கும். எளிதில் சமைக்கப்படுதலை நோக்கி அரிசிதானே வெந்தது என்பதுபோல், விஞ்ஞானகலர்க்கு மெய்ஞ்ஞானம் எளிதில் விளைவிக்கப்படுதலை நோக்கி "தானேவிளையும்" என்றார். மெய்ஞ்ஞானம்என்பது வீடுபயக்கும் உணர்வை.

அஞ்ஞானம் என்பது ஆணவத்தைக் குறிக்குமாயினும், இவ்விடத்தில் சகலர்க்கே அடையாகக் கூறப்பட்டிருத்தலால் அவிச்சை யென்றுரை செய்யப்பட்டது. அவிச்சையாவது மாயாமலத்தின் காரியமாகிய மயக்கமாதலால் இவ்விடத்தில் மாயாமலம் அஞ்ஞானம் என்னப்பட்டது.

அச்சகலர் என்றது தவஞ் செய்தார் என்று முற்கூறிய சகலரையும், அக்குரு என்றது இவ்வதிகரணத்து மேற்கோளிற் கூறிய குருவையும் சுட்டியவாறும்.

தானேவிளையும் என்றது விஞ்ஞானகலர்க்குத் தன்மையில் நின்று உணர்த்துதலையும், முன் உணர்த்தும் என்றது பிரளயாகலருக்கு முன்னிலையில் நின்று உணர்த்துதலையும், பின் உணர்த்தும் என்றது சகலர்க்குப் படர்க்கையில் நின்று உணர்த்துதலையும் வரைசெய்து உணர்த்தியதாகும்.

விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் மூவருள், சகலர்க்குணர்த்துங்கால் இயற்கை வடிவொழித்துப் பிறிதொரு வடிவத்தை ஆதாரமாக நின்று உணர்த்துதலால் அது சாதாரம் எனப்படும். ஏனை யிரண்டும் நிராதாரம் எனப்படும். சாதாரம்—ஆதாரத்தோடு கூடியது. நிராதாரம்—ஆதார மில்லாதது. (ஆதாரம்—இடம்.)

விஞ்ஞாஞகலர் என்பது விஞ்ஞானகலர் என மருவியது. விஞ்ஞானகலர்-விஞ்ஞானத்தாற் கலையற்றவர். பிரளயாகலர்—பிரளயத்திற் கலையற்றவர். சகலர்—கலையோடு கூடினவர். இவை காரணப்பெயர். விஞ்ஞானகலர் ஆணவ பந்தமொன்றுமேயுடையவர். பிரளயாகலர் ஆணவம் கன்மம் என்னும் இரண்டுபந்தமுமுடையவர். சகலர்-ஆணவம் கன்மம் மாயை என்னு மூன்று பந்தமு முடையவர். இனி, விஞ்ஞானகலர் அநாதியே ஆணவமலபந்த மாத்திரமுடைய விஞ்ஞானகலரும், அனுபவத்தாலாயினும் விஞ்ஞானத்தாலாயினும் யோகத்தாலாயினும் சந்நியாசத்தாலாயினும் தீக்கையாலாயினும் இடையே மாயாபந்தமும் கன்மபந்தமும் முழுவதும் நீங்கி, அசுத்த மாயையின் மேல் உள்ள புவனங்களில் அனுபவிப்பனவாகிய போகங்கட்கு ஏதுவாய் நின்ற ஆணவமலபந்தம் ஒன்றே உடையராகிய விஞ்ஞானகலரும் என இருவகைப்படுவர். பிரளயாகலர் அநாதியே ஆணவ மலமும் கன்ம மலமு மாத்திரமுடைய பிரளயாகலரும், இடையே பரிபக்குவ விசேடத்தால் மாயாபந்தமாத்திரம் நீங்கி ஏனை இரண்டுமுடைய பிரளயாகலரும் என இருவகைப்படுவர். சகலர் தேவர் மக்கள் முதற் பலவகைப்படுவர். விஞ்ஞானகலருக்குரிய புவனங்கள் அசுத்த மாயைக்கும் சுத்த வித்தைக்கும் இடையே உள்ளன. பிரளயாகலருக்குரிய புவனங்கள் அசுத்தமாயை முதல் அராகம் ஈறுன தத்துவங்களில் உள்ளன. சகலருக்குரிய புவனங்கள் மூலப் பகுதி முதல் பிருதிவி ஈறுன தத்துவங்களில் உள்ளன,

**உதாரணவெண்பா.**

*அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்*
*செறியுமா மூன்பின் குறைக—ணெறியிற்*
*குறைவுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடென்*
*குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.*

*அன்வயம்—உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா. குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு குறைகள் முன்பின் செறியுமாம். குறைவு உடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடு (ஆம்) என்.*

(இ-ள்) *உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா*—உயிர்கள் (சார்ந்ததன் வண்ணமாயிருந்து அறியும் இயல்பினவாதலால்) தத்தமக்குரிய படிவழியின் வைத்து (முதல்வன்) அறிவித்தாலன்றி அறியா. ஆதலால், *குறைவு இல் சகன் சூழ்கொள்பவருக்கு*—ஞானத்தாற் குறைபாடில்லாத சககடவுளது உபதேச மொழியைக் கொண்டுணரும் பிரளயாகலர்க்கும் சகலர்க்கும், *குறைகள் முன் பின் செறியுமாம்*— (அறிவித்தாலறிதலாகிய) குறைகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம், *குறைவு உடைய சொல் கொள்ளார் கொள்பவத்தின் வீடு (ஆம்) என்*— (பலவாற்றானுங் கேட்டுச் சிந்தித்தன்றித் தெளியமாட்டாத) குறைபாடுடைய நூல் வேண்டாத நுண்ணுணர்வுடைய விஞ்ஞானகலருக்கு முதல்வனாற் கொள்ளப்பட்ட தன் உண்மை மாத்திரையின் (அதாவது நிராதாரமாகிய சொரூப நிலை மாத்திரத்தால்) வீடு பயக்கும் உணர்வு உண்டென்றறிவாயாக. (எ-று.)

இவ்வெண்பாவால், உயிர்கள் தத்தம் பக்குவத்திற் கேற்றவாறு படிமுறையில் வைத்து அறிவித்தாலன்றி அறியாவாதலால், முதல்வன் விஞ்ஞானகலர்க்கு அறிவுக்குள் அறிவாய் உள்நின்றும், பிரளயாகலருக்கு உருவத்

திருமேனி கொண்டு முன்னின்றும், சகலருக்கு அச்சகலர் வடிவுதாங்கி அதில் மறைந்து பின் நின்றும் உணர்த்து வன் என்பது விளக்கப்பட்டது.

குறை—இன்றி யமையாமை. பவம்—உண்மை. வீடு—வீடு பயக்கும் உணர்வு. சூழ்—சூழ்ச்சி (அதாவது நுண்ணுணர்வைப்) பயக்கும் உபதேச மொழி. கொள்ளார்—கொள்ளார்க்கு.

**உதாரண வெண்பா**

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
னல்லா யுளவாமா னீர்நிழல்போ—வில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

(இ-ள்.) நல்லாய்—தவத்தால் நன்மையுடைய மாணாக்கனே, ஏந்து இழைபால் முலைப்பாலுங் கண்ணீரும் இல்லா உள ஆம்—ஏந்திய இழைகளையுடைய ஒரு பெண்ணுக்கு (த்தன் குழந்தையினிடத்துள்ள அருவாகிய அன்பினைப் பிறர் அறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பினுருவாகிய) முலைப்பாலும் கண்ணீரும் (குழந்தையைக் காணுமுன்) இல்லாதனவாய் (கண்டபின்) உள்ளனவாம். (அதுபோல்), நீர் நிழல் போல் இல்லா அரு ஆகி நின்றானை—நீரினிடத்துள்ள நிழல் போல் (உயிர்களிடத்து வெளிப்பட்டுத் தோன்றுதல்) இல்லாத அருவமாய் நின்ற முதல்வனை, தானே உருவாகி உற்றுத் தோன்றானேல் ஆரறிவார்—அவனே குருவடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்தானாயின் யார்தாமறிவார். (ஒருவருமில்லை) (எ—று.)

ஆல்—அசை. நீரானது தன்னிடத்து வசிக்கும் உயிர்களுக்கு இடங்கொடுத்தலினால் நீரினிடத்தில் வெளி யுண்டென்பதும், வெளி யுண்டெனவே அங்கு நிழலுண்டென்பதும் பெறப்படும். அந் நிழல் வேறு நில்லாது

நீரின் கண் விரவிநிற்றலின் நீர்போலப் புலப்படா தாயிற்று. அது போலச் சிவ சைதன்னியமும் யான் என்னும் உணர்விற்கு விடமாய்ப் புலப்படும் ஆன்ம சைதன்னியத்தோடு விரவிப் புலப்படாது நிற்பதொன் றென்பார் "நீர் நிழல் போல் உற்று இல்லா அருவாகி நின்றனே" என்றார்.

### மூன்றும் அதிகரணம்

### ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தேன

(இ-ள்) (முதல்வன் குருவடிவங்கொண் டெழுந்தருளி அரச குமாரனாகிய நீ) ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடியிருந்து வளர்ந்ததனால் நின் பெருமை யறியாது மயங்கி இடர்ப்பட்டாய். (நின் பெருமை இத்தன்மைத்து) என்று உணர்த்த (உயிர் உணரும்.)

இதில்,

க-வது — தன்றாற் கூறப்படும் பொருள் — உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுதலினாலே தன்னையும் அறிய மாட்டாது.

உ-வது—ஐயப்பாடு - பஞ்சேந்திரியங்கள் தத்துவ ஞானத்தை மறைக்குமோ, விளக்குமோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகள் பசுகரணங்களாக நின்று உலகப் பொருள்களை அறியும் அறிவை விளக்குவது போல், சிவகரணமாய் நின்று தத்துவ ஞானத்தை விளக்குதலுங் கூடும். ஆதலால் தத்துவ ஞானத்தை விளக்குதற்கு முதல்வன் குருவுமாய் வருதல் வேண்டா. (இவ்வாறு கூறுவோர் சிவசங்கிராந்தவாதிகள்.)

ச-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— ஐம்பொறிகள் அறிவை விளக்குமாயினும், அவற்றால் விளக்கப்படுவது விடய விளக்கமேயன்றி ஆன்மாவின் உண்மை விளக்கமன்று. அன்றியும் ஒவ்வொரு இந்திரிய

மும் ஒவ்வொரு விடயத்தையே யுணர்த்தும். ஒரு இந்திரியம் உணர்த்தும் விடயத்தை மற்ருேரிந்திரியம் உணர்த்தாது. ஆதலால் உயிரை மயக்கி விடயக்காட்சி யொன்றையே தரும் ஐம்பொறிகளால் ஆன்மாவினியல்பு விளங்கமாட்டாது. முதல்வனே குரு வடிவங்கொண் டெழுந்தருளி உணர்த்துவன்.

ரு-வது—இயைபு.

**உதாரண வெண்பா**

பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.

(இ-ள்.) பல் நிறம் காட்டும் படிகம்போல் இந்திரியம் தன் நிறமே காட்டும் தகை நினைந்து — (தன்னைச் சார்ந்த) பலவேறு வகைப்பட்ட வன்னங்களையே தன்னிடத்துக் காட்டும் இயல்புடைய படிகம் போல், (ஆன்மா தன்னைச் சார்ந்த) இந்திரியங்களி னியல்பையே தன்னிடத்து விளக்குவதாகிய தனது (சார்ந்ததன் வண்ணமாயிருக்கும்) தன்மையை முன்னர்ச் சிந்தித் துணர்ந்துகொண்டு (பின்பு), பல் நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து— பலவேறு வகைப்பட்ட இயல்புடைய பொதுவியல்பைச் செய்யும் இந்திரியங்களைத் தனக்கு வேருகக் கண்டு, பொய்பொய்யா — அவற்ருலாகிய பொதுவியல்பு பொய்யாய் ஒழியுமாறு, மெய் கண்டான்—தனது சிறப் பியல்பை உணர்ந்தாஞயின், வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம் — (அவன் அசத்தாகிய அப்பொறிகளுக்கு) வேருகிய சிவபரம்பொருளுக்கு அடிமையாய், அப்பரம் பொருளினியல்பு தன்னிடத்து விளங்கச் செய்வன். அப்பொழுது முன் விளங்கிய பொதுவியல்பு தனக்கு வேருயொழியும். (எ-று.)

பொய் என்பது பொதுவியல்பையும், மெய் என்பது சிறப்பியல்பையும் குறிப்பனவாம்.

தைவம் என்பது வடமொழிப் பகுபதம். இது தேவனது உடைமை என்னும் பொருளில் சிவத்துக்கு அடிமை என்றதைக் குறித்து நின்றது.

அடிமையாம் என்பது ஆன்மாவானது கருவிகளைக் கழித்த பின்னர்க் கழிக்கப்படாமல் என்றும் உடனாய் வியாபகமாய் நிற்கும் சிவத்துள் வியாப்பியமாய் அடங்கி நின்று சிவானந்தத்தை யநுபவித்தலாகிய சிறப்பியல்பை.

இவ்வெண்பாவினால் கருவிகள் உள்ள விடத்து அக் கருவிகள் விடயத்தைக் காட்டி நிற்றலின் குருவாய் வந்துணர்த்தினும் உண்மை ஞானத்தை அறிய முடியாது. கருவிகள் நீங்கிய விடத்துக் கேவல அவத்தை வந்து கூடும் ஆதலால் தன் உண்மையாகிய உண்மை ஞானத்தை அறிவ தெவ்வாறு என்னும் ஆசங்கை நீக்குதற்கு, அக்கருவிகள் உள்ளவிடத்தே அவற்றின் இயல்பைப் பொதுவியல்பென்று கண்டு கழிக்கும் உபாயத்தால் சிறப்பியல்பாகிய தன் உண்மையை யறியலா மென்று கூறி அவ்விந்திரியங்கள் காட்டிற்றைக் காட்டி நிற்றற்கு இழுக்கில்லை யென ஏதுவை வலியுறுத்திய வாறுயிற்று.

நான்காம் அதிகரணம்

விட்டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

(இ-ள்.) ஆன்மா தான் ஐம்பொறிகளின் வேறெனஉணர்ந்த மாத்திரமே அவற்றை விட்டு நீங்கி அன்னிய மின்றி அநந்நியமாந் தன்மையில் நிலைபெற்றுச் சிவ பெருமான் திருவடிகளை யணையும். (எ-று.)

இதில்,
க-வது — தன்னாற் கூறப்படும் பொருள்— ஆன்மா தன்னை இந்திரியங்களின் வேறென

உணரவே தனக்கு ஆதாரமாகிய முதல்வனது திருவடியை யணையும்.

உ-வது—ஐயப்பாடு — ஆன்மா இந்திரியங்களினின்றும் நீங்கினவிடத்து முதல்வனுக்கு அடிமையாதல் உண்டோ இல்லையோ.

ந-வது—பிறர் கூறும் பக்கம் — இந்திரியங்களைத் தன்னின் வேறென அறிந்து அவ்விந்திரியங்களினுலுண்டாகிய தன் பொதுவியல்பு பொய்யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பாகிய மெய்யைக் கண்ட ஆன்மாவினுக்கு அவ்வாறு காண்டலே போதும். இந்திரியங்களாகிய கருவிகள் நீங்கினவிடத்து ஒரு செயலும் செய்ய முடியாது. ஆதலால் அந்நிலையில் முதல்வனுக்கு அடிமையாதல் கூடாது. (இவ்வாறு கூறுவோர் பேதவாத சைவர் முதலாயினோர்.)

ச-வது— மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு—

ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறற்றதாயின் அவனுக்குத் தாரகமாவது தரையேயன்றி வேறில்லை. அதுபோல் ஆன்மா தன்னை இந்திரியத்தின் வேருகக் காணின் அதற்குத் தாரகமாய் நிற்பது முதல்வன் சீபாதமேயாம். அன்றியும், ஆன்மா அறிவாயும் வியாபகமாயும் உள்ள தனது சிறப்பியல்பையறிந்து தான் இந்திரியத்தின் வேறென உணர்ந்த பிறகு தன்னின் வேறெனக் கழித்த இந்திரியத்தால் ஆவ தொன்றுமில்லை. ஆதலால் குருவினுல் தன்னை இந்திரியங்களின் வேறென உணர்ந்த அக்காரணத்தினுலேயே தனக்கு ஆதாரமாகிய முதல்வனது திருவடியை அணையும். ஆன்மா இந்திரியங்களின் நீங்குதலாவது அவற்றைத் தன்னின் வேறெனக் கண்டு பற்றறற்றிருத்தலாம்.

ரு-வது—இயைபு.

உதாரண வெண்பா

சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்
சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்
டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா
துலைவிலரன் பாதத்தை யுற்று.

(இ-ள்.) சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்-ஒருவன் அணையை உயர்த்துக் கட்டித் தடைசெய்ய ஆண்டுத் தடையுண்டு தேங்கிநின்ற ஆற்று நீர் போல (கருவிகளாலாய பாச ஞானம் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதனிடத்தில் ஏகதேசமாய் அடங்கித் தடையுண்டு நின்ற) உயிர், சிறைவிட்டு அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல்—அவ்வணை முறிந்து தடை நீங்கிய விடத்து இடை யீடின்றிக் கடலின்கண் விரைந்து சென்று அந் நீரேயாய் அதனுள் அடங்கி மறித்து வாராத ஆற்றுநீர் போல, சிறைசெய் புலனுணர்வில் தீர்ந்து—கருவிகளானாய பாசஞானத் தடையி னின்று நீங்கியபோது, உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது—தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக் கூடி அத்திருவடி நிறைவேயாய் அதன்கண் அடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது. (எ-று)

புனலின்—புனலைப் போல.

மலசத்திக்குக் கேடு இயல்பாயிருத்தலினால் கேவலப் பட்ட உயிர் (அதாவது சகலாவத்தையிலிருந்து கேவலாவத்தையை யடைந்த உயிர்) கருவிகளின் மீளுத லும் கூடும் (அதாவது மீண்டும் சகலாவத்தையை யடை தலுங் கூடும்). சிவ சத்திக்கு எக்காலத்தும் கேடில்லாமை யால் சகலாவத்தையினின்றும் நீங்கிச் சுத்தாவத்தையை யடைந்த உயிர் (அதாவது சிவன் சீபாதத்தை யணைந்த உயிர்) அதுபோல் மீள்வதற்கு (அதாவது மீண்டுஞ்

சகலாவத்தையை யடைவதற்கு) ஏதுவில்லை யென்பார் உலேவிலரன் என விசேடித்தார்.

இவ்வெண்பாவினால் கருவிகளினின்றும் நீங்கி மலம் தாரகமாகக் கேவலாவத்தையை யடையும் உயிர் மீளவும் கருவிகளைக் கூடிச் சகலாவத்தையை யடையுமாறுபோல, கருவிகள் நீங்கிச் சிவம் தாரகமாய்ச் சுத்தாவத்தையை யடைந்த உயிரும் மீண்டும் கருவிகளைக் கூடிச் சகலாவத்தையை யடையும்போலும் என்னும் ஆசங்கையை உவமை முகத்தால் நீக்கியவாறும்.

எவ்வுருவுந் தானென்னி னெய்துவா ரில்லைதா
ளிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
கண்போ லவயவங்கள் காணவக் கண்ணில்லார்
கண்பேறே காணக் கழல்.

(இ-ள்) எவ்வுருவும் தான் என்னின் தாள் எய்துவாரும் இல்லை – உயிருணர்வேயன்றிப் புலனுணர்வும் சிவமே யாயின் (புலனுணர்வைக் காட்டிலும் உயிருணர்விற்கு விசேடமில்லாமையால் புலன் வழியொழுகும் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியை யடையவேண்டாமையின் அத்) திருவடியை யடைபவர் ஒருவரும் இல்லை (யாய் முடிந்து "பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினையடைய முத்தி" என்னும் வேதாகமங்கள் போலியாய் முடியும்), இவ்வுருவின் வேறேல் இறை அல்லன்—(ஆதலால் முதல்வன் கருவிகளின் அறிவோடு கலவாமல்) அவற்றின் வேறாய் நிற்பன் எனில், (அக் கருவிகளின் அறிவிற்கு முதல்வனாலாகவேண்டிய உபகாரம் ஒன்றுமில்லை யெனப்பட்டு அவற்றிற்கு) இறைவனல்லன் (என்றாகி அவன் முதன்மைக்கு இழுக்காய் முடியும்)–(இவ்வாறாயின் அதனியல்பு தான் யாதோ எனின்), எவ்வுருவும்—உயிருணர்வு போலப் புலனுணர்வும் (கலப்பினாற் சிவமேயாயினும் இரண்டும் தம்முள் ஒப்பன வல்ல), அவயவங்கள்

கண்போல் காணு—(உயிரானது மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளினும் ஒப்பக் கலந்து நிற்பினும், கண் இந்திரியம் நீங்க மற்ற நான்கும் நின்றவிடத்திலிருந்தே தம்மிடத்துவந்த தத்தம் விடயத்தையேயறியும். தூரத்திலுள்ள விடயத்தை உயிரின் அறிவோடு கலந்து சென்று அறியா. கண்ணிந்திரியமோ வெனில், ஒளியால் ஆன்மபோதத்தோடு கலந்து தூரத்திலுள்ள விடயத்தையும் வியாபித்தறியும். ஆதலால் மற்ற நான்கு அவயவங்கள் கண்போல் அறியமாட்டா, அக்கழல்—அக்கண்ணினது வெற்றிப் பாட்டை (அதாவது ஏனை இந்திரியங்களைப் போலன்றிக் கண்ணிந்திரியம் ஆன்மபோதத்தோடு கலந்து தூரத்திலுள்ள விடயத்தையும் வியாபித்தறிதலாகிய மேம்பாட்டினை), அக்கண் இல்லார் கண் பேறேகாண் — கண்ணொளி யிழந்தாரது கண்பேற்றிற் கண்டு அறிவாயாக (அதாவது அவ்வொளி யிழந்தவர் மாசு நீங்கிக் கண்பெற்ற விடத்துத் தூரத்திலுள்ள பொருளை அறிவதனாலறிந்து கொள்க). (அவ்வாறே முதல்வன் உயிருணர்வினும் புலனுணர்வினும் ஒப்பக் கலந்து நிற்பினும் புலனுணர்வு உயிருணர்வு போல வியாபக விளக்கமார்தலின்றி ஏகதேச விளக்கமாம். உயிருணர்விற்குளதாகிய அம்மேம்பாடானது அவ் வியாபக உணர்வை யிழந்த பசுத்துவமுடையாரிடத்தில் அறியப்படாதாயினும், அவரது பசுத்துவம் நீங்கிய சிவப்பேற்றின் கண் அறியப்படும்.) (எ-று.)

கண்ணும் அவயவங்களும் இந்திரியங்களையுணர்த்தும் ஆகு பெயர்; கண்பேறே—கண்பேற்றிலே (அதாவது கண் பெறுதலிலே). கழல் என்பது வெற்றியைக் காட்டும் காலணி மணிவடம். கண்ணுக்கு வெற்றியாவது நான்கு இந்திரியங்களையும் நோக்கி மேம்படுதல்.

இவ்வெண்பாவால் ஆன்மா பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் பெற்ற விடத்துப் பசுகரணமுஞ் சிவகரணமாவதனால் ஐம்பொறியின் மீளினும் இழுக்கில்லையாதலால் மேலைவெண்பாவில் ஆன்மா கருவிகளின் மீளாதெனக் கூறியது எற்றுக்கு என்னும் சங்கிராந்தவாத சைவரை மறுத்து மீளாமையை வலியுறுத்தியவாறும்.

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து.

(இ-ள்.) ஐம்பொறியின் அல்லை யெனும் அந்ததர—(நீ, நின்னால் அதிட்டிக்கப்பட்ட விடத்தும் ஏகதேசவறிவைச் செய்வனவாகிய) ஐம்பொறிகள் போலல்லை, (அவற்றின் மேம்பட்டு வியாபகமாயறியும் வெற்றிப்பாடுடையை) என (மேலைவெண்பாவால்) உணர்த்தப்படும் தீவிரதரத்திற் றீவிரதரமான சத்திநிபாத முடையோனே, சிவனை ஐம்பொர்றியை விட்டு அங்கு அணை—(அவ்வியல்பின வாகிய) ஐம்பொறிகளைக் கைவிட்டே சிவன் திருவடியை யடைந்து, முன் அவ்வைம் பொறியினின்றது போல் அதுவாய் உறைத்து நிற்பாயாக,(அவ்வாறணைந்து நின்றுயாயின்) சகலன் ஐம்பொறியின் நீங்கான்—சகலனை ஐம்பொறிவிட்டு நீங்காதவாறு போல அச்சிவன் உன்னை விட்டு நீங்கான், நீர்ப்பாசிபோல் நீங்கும் மலகன்மம்வரின்-கல்லெறிந்த விடத்து நீங்கி, விட்டவிடத்துப் பரக்கும்) நீரின்கட் பாசி போல, (நீ அவ்வாறுறைத்து நிற்றலினால்) நீங்குவனவாகிய மலகன்ம மாயைகள் (உலகப்பயிற்சி வயத்தால் நிகழும் அயர்ச்சிபற்றி) வந்து கூடுமாயின், நீங்கானை நினைந்து நீங்கு—(நின்நிலை குலையினும் நின்னை விட்டு) நீங்காத அம் முதல்வனை உணருமாறு முன்னர்க்

கூறப்படும் உபாயத்தினின்று சாதித்து அவற்றை நீங்கிக் கொள்க. (எ-று)

விட்டன்றி அணைதல் கூடாதென்பார் விட்டு அணை யென்றும், ஐம்பொறியை விட்டு நீங்கிய விடத்துச் சிவன் மீளாமையை வலியுறுத்துவார் சகலனைம்பொறியினீங் கான் என்றும், ஒருக்கால் மீளுமாயின் அதற்குக்காரணம் இஃதென உவமை முகத்தால் உணர்த்துவார் நீர்ப்பாசி போல் என்றும், ஐம்பொறியின் மீளுமாயின் அவற்றிற்கு மூலமாகிய மலகன்ம மாயைகளும் அது பற்றாகவந்து கூடும் என்பார் மலகன்மம் வரின் என்றும், அம்மீட்சியை நீக்குதற்கு உபாயங்கூறுவார், "நீங்கானை நினைந்து நீங்கு" என்றுங் கூறினர். இன் இரண்டும் உவம உருபுகள். அந்தம் என்றது நான்காஞ் சத்திநிபாதத்தை. அதுவும் நால்வகைப்படுமாகலின் அவற்றுள்ளும் மேம்பட்ட சத்திநிபாதமுடையாய் என்பார் அந்ததர என்றார். சகலனை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. மலகன்மம் எனவே இனம்பற்றி மாயையுங் கொள்ளப் படும்.

இவ்வெண்பாவினால் ஆற்று நீரானது கடலிற் சென்று அடங்குவது மாத்திரமன்றி அவ்வாற்றின் வழி யாக அதினின்று மீளுதலுங் கூடும். அவ்வாறே சிவன் திருவடியை யடைந்த உயிர் அத்திருவடியில் அடங்கி யிருத்தலே யன்றி ஒரு சமயத்தில் இந்திரியத்தில் மீளுத லுங் கூடும். ஆதலால் அது ஒருபோதும் மீளாதென் பது பொருந்தாது என்று கூறும் சிவாத்துவித சைவரை மறுத்து அவ்வாறு மீளுதற்குக் காரணம் பழையவாசனை யென்றும், அப் பழைய வாசனையால் மீளவரின், ஆற்று நீர் ஆற்று நீராகவே திரும்பாது கடல் நீராகத் திரும்பி, மீண்டும் அக் கடலிற் சென்று அடங்குமாறு போல, திருவடியை மறவாத உபாயத்

தால் அக்கருவிகளை விட்டு மீண்டும் திருவடியை யடைந்து அதில் அடங்கும் என்று கூறி மீளாமையை வலியுறுத்தியவாறும்.

## ஒன்பதாஞ் சூத்திரம்

**ஊனக்கண் பாச முணராப் பதியை**
**ஞானக் கண்ணினிற் சிந்தைநாடி**
**யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்**
**தண்ணிழலாம்பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.**

(இ—ள்). ஊனக்கண்—பசுஞானத்தாலும், பாசம்—பாசஞானத்தாலும், உணரா—அறியப்படாத, பதியை—முதல்வனை, ஞானக் கண்ணினில் — அம்முதல்வனது ஞானக்கண்ணினாலே, சிந்தை—தன் அறிவினிடத்திலே, நாடி — ஆராய்ந்தறிக, (அப்பதி ஞானத்தைப் பெறுவதெப்படி யெனில்), பாசம் — நிலம் முதல் நாதம் ஈறுகிய பாசக் கூட்டமானது, உராத்துனை — நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய, தேர்த்தென —பேய்த்தேரின் இயல்புடையதென்று அறிந்து (அதாவது கானலானது நீர் போலத் தோன்றிப் பொய்யாய்க் கழிவதுபோல் கழிவதென்றறிந்து), ஒருவ — (அப்பாசக் கூட்டத்தினின்றும்) நீங்கவே, பதி — அப்பதி ஞானம், தண் நிழலாம் — (பிறவித்துயராகிய வெப்பத்துக்கு) குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும், அஞ்செழுத்தே— (அவ்வாறு விளங்கிய ஞானத்தால் முதல்வனைக் கண்ட காட்சி சலியாதிருத்தற் பொருட்டுப் பாசத்தினின்றும் நீங்கி முதல்வனை யடைதலை உணர்த்துவதாகிய) திருவஞ்செழுத்து, விதி—அவ்விதிப்படி (யறிந்து), எண்ணும்—கணிக்கப்படும் (அதாவது செபிக்கப்படும்) (எ—று.)

தம் முதல் குருவுமாய் உணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனை செய்துணருமாறு அறிவிக்கு முகத்தான், உயிரானது தான் ஐம்புல வேடரின் வளர்ந்தமையாலாகிய அசுத்தத்தினின்றும் நீங்கித் தன்னைப் பரிசுத்தப்படுத்துமாறு உணர்த்துதல் இச்சூத்திரத்தின் கருத்தாம்.

பாச ஞானமாவது பாசமாகிய கருவிகளால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம். பசு ஞானமாவது தற்போத முனைப்பால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம். பதி ஞானமாவது பதியின் அருளால் ஆன்மாவினிடத்து நிகழும் ஞானம்.

ஊனம்—குறை. ஊனக்கண்—குறையுணர்வு. நாடி—நாடுக. உரா—உலாவல் என்னும் பொருளைத்தரும் முதனிலைத் தொழிற் பெயர். துனை—வேகம். உராத்துனை—உலாவுதற்கண் வேக முடைமை. ஊரா என்பது உரா வெனக் குறுகியதாகக் கொண்டு உராத்துனைத்தேர் என்பதற்கு ஒருவராலும் ஊரப்படாத வேகத்தையுடையதேர் என்று பொருளுரைத்தலுமாம். தண்ணிழலாம் பதிஎன்பதில் பதி என்பது பதி ஞானத்தைக் குறிக்கும் ஆகு பெயர்.

### இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்.

1-வது—ஊனக்கண் பாச முணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி.

2-வது— உராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி.

3-வது—விதியெண்ணு மஞ்செழுத்தே.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

1-வது—உயிர் அரன் ஞானத்தினுலேயே அரனைக் காணும்.

2-வது—உயிர் பாசத்திலே பற்றற்ருல் அரன் வெளிப்படுவன்.

3-வது—பஞ்சாக்ஷர செபம்பண்ணினால் வாசனாமலம் போம்.

## இச்சூத்திரத்தின் வார்த்திகம்

1-வது ஈண்டு அம்முதலை ஞானக் கண்ணினாலே காண்க என்றது—அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

2-வது—இனி அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்து என்று காண உளதாய் நிற்பது ஞான சொரூபமென்று உணரற் பாற்று.

3-வது—இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க என்றது—இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை, வேம்புதின்ற புழுப்போல, நோக்கிற்றை நோக்கி நிற்குமாகலின் அது நீக்குதற்கு எனக்கொள்க.

இதின் உதாரண வெண்பா எட்டு.

---

### முதலதிகரணம்

ஊனக்கண் பாச முணராப்பதியை
ஞானக்கண்ணினிற் சிந்தை நாடி.

(இ-ள்.) பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறியப்படாத முதல்வனை அம்முதல்வனது ஞானக் கண்ணினாலே தன் அறிவினிடத்தே ஆராய்ந்தறிக. (எ-று)

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்— உயிர்பதி ஞானத்தாலேயே அரனைக் காணும்.

உ-வது—ஐயப்பாடு — முதல்வன் பசுஞானத்தாற் காணப்படுவனோ பதி ஞானத்தாற் காணப்படுவனோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—சுட்டியறியும், பசுத்துவம் உள்ளபோது செயற்கையால் ஏகதேசத்தின் விளங்கும் பசுஞானமானது, அப்பசுத்துவம் நீங்கியபோது சிவஞானத்தோடொப்ப எங்கும் வியாபகமாய் விளங்கும் என்பது சிவாகம நூற்றுணிபாகலின், அவ்வாறு சுட்டிறந்தறிவதாகிய பசுஞானத்தால் முதல்வன் காணப்படுவன் என்பது பெறப்படும். (இவ்வாறு கூறுவோர் சிவ சமவாத சைவர்)

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு-குருவருளாலே உணரப்படும் சிவஞானத்தாலே சிவனையறிந்தவர் அச்சிவனில் வியாப்பியமாய் நின்று (அதாவது அடங்கி நின்று) அவ்வாறு அறியும் பொருளாகிய தம்மையும் அறிவர். அவ்வாறு தலைவனை யறிந்தபின் அறியப்படுவதாகிய தம்மறிவு கொண்டு தலைவனை எங்ஙனம் அறிதல் கூடும்? ஆதலால் முதல்வன் பதிஞானம் ஒன்றினாலேயே காணப்படுவன் என்பது துணியப்படும்.

ரு-வது—இயைபு.

உதாரண வெண்பா.

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடியெனை யறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா
ரென்னா மெனவறிவா ரின்று.

(இ-ள்.) நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ—நான் யார், இடை பிங்கலை முதலிய நாடிகளோ, நரம்போ, சீ எனப்படும் புண்ணீரோ, கோழை யெனப்படுஞ் சிலேட்டுமமோ, தேடி எனையறியேன் (என்று) — என்னைத்தேடியும் அறிகின்றிலேன் என்று, தேர்ந்தவகை நாடி—இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சியறிவின்கண்ணே இதனைத் தெளிவிப்பதோர் அறிவு வேறு உண்டெனை ஆராய்ந்து நோக்கி,

அரன் தன்னாலே தன்னையும் கண்டு தமைக்காணார்— (அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய) முதல்வனது திருவடி ஞானத்தால் முதல்வனையும் உணர்ந்து (முதல்வனின் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும்பொருளாகிய) தம்மையும் உணர்தலைச் செய்யாதார், என் என அறிவார் இன்று — மற்றெவ்வியல்பினரென்று தம்மை அறியவல்லுநர் இம் முத்திக்காலத்து (எ-று).

நரம்பு என்றதில் நாடியும் அடங்குமாயினும் தலைமை பற்றி நாடியை வேறாகக் கூறினர்.

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ என்ற உபலக்கணத்தால் ஏனைத் தத்துவங்களினும், அவற்றின் காரியமாகிய புறக்கருவிகளினும் அவ்வாறு தெளிதல் கொள்ளப்படும்.

ஓகாரம் தெரிகிலே—தேடியென்னை யறியேன் (என்று) என்பதில், என்று என்பது சொல்லெச்சம் – வகையென்பது அறிவைக் குறிக்கும் ஆகுபெயர். ஞானத்திற்கும் அரனுக்கும் உள்ள ஒற்றுமையை நோக்கி அரனது ஞானத்தை அரன் என்று உபசரித்தார். தன்னை— தலைவனை. தமை—உயிரை. ஆம் அசை.

இவ்வெண்பாவினால் முதல்வன் அருளால் (அதாவது சிவஞானத்தால்) அம் முதல்வனையும் தன்னையும் அறியும் இயல்புடைய உயிர் தன்னறிவால் முதல்வனை யறிதல் கூடாது என்பது; விளக்கப்பட்டமை காண்க.

திருக்குறுந்தொகை

என்னை யேது மறிந்தில னெம்பிரான்
றன்னை நானுமுன் னேது மறிந்திலேன்
என்னைத் தன்னடி யானென் றறிதலுந்
தன்னை நானும் பிரானென் றறிந்தேனே.

**உதாரண வெண்பா.**

காட்டிய கண்ணே தனேக்காணு கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணு—காட்டிய
வுள்ளந் தனேக்காணு துள்ளத்தின் கண்ணுய
கள்வன்ரு னுள்ளத்திற் காண்.

(இ-ள்) காட்டிய கண்ணே—(உயிரால்) காட்டப்பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண்ணனது (அதாவது ஒரு விடயத்தை உயிர் காட்டக் காணும் கண்ணனது), தனேக்காணு—தன்னியல்பைக் காணுமாட்டாது, கண்ணுக்குக் காட்டு ஆய உள்ளத்தைக் கண்காணு—தனக்கு அவ்விடயத்தைக் காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அது காணமாட்டாது, (அதுபோல்), காட்டிய உள்ளம் தனேக்காணுது—(முதல்வனல் மறைந்து நின்று) உணர்த்தப்பட்டு ஒன்றைத் தேர்ந்துணர்கின்ற உயிர் அவ்வாறே தன்னியல்பையும் அறியமாட்டாது. (தன்னே உணர்த்தி நிற்கும் முதல்வனேயும் அறிய மாட்டாது.), உள்ளத்தின்கண் ஆய கள்வன்தான் — அத்தேர்ச்சியறிவின் கண்ணும் உடனுய் நிற்குங் கள்வன் அம் முதல்வன், (ஆதலால்), உள்ளத்தில்காண்—அவனே அவ்வறிவின் கண் வைத்து நாடித் தெளிவாயாக (எ-று).

இவ்வெண்பாவினுல், தன் எதிர்முகத்துள்ள ஒரு பொருளேக் கண்ட கண்ணே திரும்பிப் பார்க்குமிடத்து முதுகுப்புறத்துள்ள பொருளேயும் காணக்கூடும். அது போல நாடி முதலியவற்றைத் தேர்ந்து அறிந்த உயிரே தன்னேயும் தலேவனேயும் தெளிந்தறியக் கூடும் என்னும் சமவாத சைவரை மறுத்து, எதிர்முகமாகக் காணப்படும் பொருளும், முதுகுப்புறமாகக் காணப்படும் பொருளும் புறத்துள்ள சடப்பொருள்களாதலினுல் அவ்விரண்டையும் கண்காணும். அக்கண் தனக்குள்ளிருக்கும் ஒளியையும் உயிரையும் காண்மாட்டாது. அதுபோல் உயிரானது

தன்னையும் தலைவனையும் தானே அறியமாட்டாது. ஆனல் அது கண்போல் சடமாகாமல் அறிவுப் பொருளாயிருத்த லால் தலைவன் அருளால் தன்னையும் தலைவனையும் அறியும் என்று உணர்த்தியவாறும்.

கண்ணே என்பதில் ஏகாரம் அசைநிலை. காணு— காணது. இதில் துவ்வீறு விகாரத்தாற்றெருக்கது. இறைவன் தோன்ருது நிற்றல்பற்றிக் கள்வன் எனப் பட்டான். "என் உள்ளங்கவர் கள்வன்" என்றருளிச் செய்தனர் திருஞானசம்பந்தப் பெருமானும்.

இரண்டாம் அதிகரணம்.

உராத்துனேத் தேர்த்தெனப் பாசமோருவத்
தண்ணிழலாம் பதி.

(இ-ள்) நிலம் முதல் நாதம் ஈருகிய பாசக்கூட்ட மானது, நின்றுமிநிலலாது பரந்து திரிதலில் அதிவேக முடைய, பேய்த்தேரின் இயல்புடைய தென்றறிந்து, அதினின்றும் நீங்கவே, பதிஞானமானது பிறவித்துய ராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். (எ—று).

இதில்,

க-வது—தன்னுற் கூறப்படும் பொருள்—உயிர் பாசத் திலே பற்றற்ருல் அரன் வெளிப்படுவன்.

உ-வது—ஐயப்பாடு — பாசத்தை அசத்தென்று கண்டவிடத்து ஞானசொரூபம் தோன்றுமோ, தோன்ருதோ.

ங-வது — பிறர் கூறும்பக்கம்—அசத்தாகிய பிரபஞ் சத்தை அசத்தென்றறிந்து நீங்கியவிடத்து வெறும் பாழாகிய சூனியம் தோன்றுமேயன்றி ஞானசொரூபம் தோன்ருது. (இவ்வாறு கூறுவோர் மாயாவாதிகள்)

௪-வது — மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு— படிக சொரூபத்தைக் காட்டாது மறைத்துநின்ற வேற்று நிறங்களை இவை நிலையில்லாதனவாகிய வேற்று நிறங்களெனக் கண்டு நீக்கியவிடத்து, படிகத்தின் உண்மைச் சொரூபம் நிலைத்து விளங்கித் தோன்றும். அதுபோல் என்றும் நிலைத்திருப்பதாகிய ஞானத்தினுடைய சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையற்ற பிரபஞ்சத்தை நிலையற்றதென்று விவேகித்தறிந்தவிடத்து, சிவஞானத்தின் சொரூபமானது நிராலம்பமாய் விளங்கித் தோன்றும். ஆலம்பம்—ஆதாரம், நிராலம்பம்—ஆதாரமில்லாதது, பற்றுக்கோடில்லாதது; அதாவது மலரகிதமாயிருப்பது.

௫-வது—இயைபு,

**உதாரண வெண்பா**

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானாவறிவா யளவிறந்து தோன்றுமே
வானே முதல்களையின் வந்து.

(இ-ள்) நிர்க்குணன் ஆய்—அசுத்தப் பிரபஞ்சம்போல் முக்குண ரூபமாய் அளவிட்டறியப்படுவானும் அல்லனாய், நின்மலன் ஆய்—முக்குணங்களைக் கடந்த மிச்சிரப் பிரபஞ்சம் போல மலகன்ம காரியரூபமாய் அறியப்படுவானும் அல்லனாய், நித்தியானந்தன் ஆய் — மல கன்மங்களையுங் கடந்த சுத்தப்பிரபஞ்சம் போல அநித்தியானந்த ரூபனாயறியப்படுவானும் அல்லனாய், தற்பரம் ஆய்—இம் மூன்றனோடுங் கூடிப் பொது இயல்பு பற்றி அவ்வாறு உணரப்படும் உயிர்போல் அன்றி அதற்கு மேலாய், நின்ற தனி முதல்வன்—இவ்வாறு நிற்றலால் ஒன்றன் இயல்புபற்றி அறியப்படாத தனி முதலாகிய இறைவன், வான் முதல் களையின்—ஆகாயம் முதலிய அசத்தை அசத்து என்று கண்டு நீங்கியவிடத்து, அளவு இறந்து அற்புதம் போல்

வந்து—பயின்றறிந்துவரும் தனது சுட்டறிவின் அளவினைக் கடத்தலான் இன்னதென்று அறியவாராத சூனியப் பொருள் போலத் தோன்றி, ஆனா அறிவு ஆய்த் தோன்றானே — பின்னர்ச் சுட்டிறந்து அறியும் தன் அறிவின்கண் நீங்காது நிலைபெற்ற அறிவாய்ச் சோதிக்குட் சோதியாய் விளங்கித் தோன்றான்கொல்லோ (எ—று).

அசத்தெனப்பட்ட மூவகைப் பிரபஞ்சத்துள், அசுத்தப் பிரபஞ்சமெல்லாம் முக்குணமயமாதலால், சத்துவ குண விருத்தியாகிய பிரகாசரூபம் சாந்தரூபம் சுகரூபமாகத்தான், இராசத குண விருத்தியாகிய பிரவிருத்திரூபம் கோரரூபம் துக்கரூபமாகத்தான், தமோகுண விருத்தியாகிய நியமனரூபம் மூடரூபம் மோகரூபமாகத்தான் அளவிட்டறியப்படும். முதல்வன் இம் முக் குணங்களும் கடந்தவனாதலால் இவற்றுளொன்றாக அறியப்படான் என்பார் "நிற்குணனாய்" என்றார்.

மிச்சிரப் பிரபஞ்சம் முக்குணங்களைக் கடந்து நிர்க்குணமாய் உள்ளதொன்றாயினும் மலகன்மங்களோடு விரவி நிற்றலால் மல காரியமாகிய மோகம் முதலிய எழுவகை ரூபமாகத்தான், கன்ம காரியமாகிய சுகரூபம் துக்கரூபமாகத்தான் அளவிட்டறியப்படும். முதல்வன் மல கன்மங்களையுங் கடந்து நிற்றலான் அவற்றுள்ளும் ஓரியல்புபற்றி அறியப்படான் என்பார் "நின்மலனாய்" என்றார்.

சுத்தப் பிரபஞ்சம் மலகன்மங்களையுங்கடந்து நின்மலமாயுள்ளதொன்றாயினும் காரியப்பட்டு அநித்தமாம் இயல்புடைமையிற் சாதிசயானந்த ரூபமாய் அளவிட்டறியப்படும். முதல்வன் காரியப்பாட்டினது உபகாரத்தையுங் கடந்தவனாதலால் அவ்வாறும் அறியப்படான் என்பார் "நித்தியானந்தனாய்" என்றார்.

ஆன்மாவும் இம்மூவகைப் பிரபஞ்சத்துட்பட்டுச் சகுணனும் சமலனும் சாதிசயானந்தனும் பொது இயல்புபற்றி அறியப்படும். முதல்வன் அவ்வாறும் அறியப்படான் என்பார் "தற்பரமாய் நின்ற" என்றனர்.

அங்ஙனம் நின்றநிலை ஒன்றோடு உவமித்து அறியப் படாமை பற்றித் "தனிமுதல்வன்" என்றனர்.

இத் தன்மையனாகிய முதல்வன் நிலம் முதல் நாதம் ஈறாகிய பிரபஞ்சங்களை அசத்தென்று களைந்தவழிப் பயின் றறியாமையின் இன்னதென்றறிய வாராத சூனியம்போலச் சுட்டறிவின் அளவினைக் கடந்துதோன்றிப் பின்னர்ச் சுட்டிறந்தறியும் அறிவின்கண்ணே சோதிக்குட் சோதி யாய் வெளிப்பட்டுத்தானே விளங்கித் தோன்றுவன் என்பார் "வானே முதல் களையின் அற்புதம்போல் அள விறந்து ஆனா அறிவாய் வந்து தோன்றானோ" என்றார்.

ஈண்டுக்குணம் என்றது முக்குணங்களை — அவ்வா றன்றி நிர்க்குணன் என்பது ஒரு குணமும் இல்லான் என் றுரைப்பின் அது தன்வயத்தனாதல் முதலிய எண் குணங் களை இயல்பாக உடைய முதல்வனுக்கு ஏலாமையின், மாயாவாதி முதலியோர் கூற்றாய் முடியுமென்றொழிக— தற்பரம், தனக்குப்பரம்—தன் என்றது ஆன்மாவை— அற்புதம்,—சூனியம். ஆனா அறிவு, தன் அழிவினிடத்து நீங்காது நிலைபெறும் அறிவு.

சாதிசயம்—அதிசயத்தோடு கூடியது.

சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
யுணர்ந்தநீ சத்தல்லை யுண்மையைத் தைவம்
புணர்ந்ததனாற் பொய்விட்டுப் போம்.

இவ்வெண்பா, ஆகாச முதலிய அசத்தை அசத்து என்று கண்டு நீங்கியவிடத்து, அவ்வாறு தோன்றுவது

வேறொரு பொருள் என்று கொள்ளலாகாதோ, அது ஞான சொரூபமே எனில் அதற்குப் பிரமாணம் யாது என்னும் ஆசங்கையை நீக்கி அது ஞான சொரூபமே என்பதனை வலியுறுத்துகின்றது.

(இ-ள்.) சுட்டி உணர்வதனை—(ஏகதேச உணர்வால்) சுட்டி உணரப்படும் நிலம் முதல் சிவம் ஈருகிய பிரபஞ்சத்தை, சுட்டி அசத்து என்ன — (அசத்ததிகரணத்திற் கூறியவாறு) ஒவ்வொன்ருகச் சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டே சென்ற விடத்து, இனி உளது சத்தே சட்ட காண்— முடிவில் கோசரமாவது (வேறின்மையால் பாரிசேட அளவையால் அது) சத்தேயாம் என்று செம்மையே அறிவாயாக, (அப்படியாயின் அசத்தின் வேருய் முடிவில் கோசரமாவது சத்தேயாம் என்பது பொருந்தும். அச்சத்து முதல்வனன்று உயிரேயாம் என்ருல் வரும் குற்றமென்னை எனில்), சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லை—(இதுகாறும் அசத்தோடுகூடி நிலைபெறு மாறின்றி, ஒவ்வொன்ருகச்) சுட்டி அறிந்து வந்த நீ (என்றும் ஒரு தன்மைத்தாய் நிலை பெற்று நிகழும் அறிவாகிய) சத்தாவாயல்லை, (அசத்தை அசத்தென்று கண்டு நீங்கிய போது), உண்மையை — உளதாகிய சத்தினை, தைவம் (ஆய்) புணர்ந்ததனுல்— நீ அடிமையாகச் சென்று தலைப் பட்டதினுல், பொய் விட்டுப் போம் — (சுட்டியறிவ தாகிய ஏகதேச அறிவைச் செய்யும்) பொது வியல்பு நின்னை விட்டு நீங்கும். (ஆகலின் நீ அசத்து மல்லை) (எ—று).

ஆகலின் அசத்துமல்லை என்பது குறிப்பெச்சம். எனவே அசத்தைச் சத்துடனின்று நீக்குவதனுல் சத சத்தாவை என்பதாம். சட்ட—செம்மையாய். தைவம்— தேவனதுடைமை. வாதனையுமின்றிப் பற்றறக் கழிதலால் பொய்விடும் என்னது "பொய்விட்டுப் போம்" என்ருர்.

*கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா*
*யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த*
*வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி னொண்கருட*
*சானத்திற் றீர்விடம்போற் றான்.*

இவ்வெண்பா அசத்தை அசத்தென்று கண்டு நீங்கும் உபாயமும், நீங்கியபோது உண்மையை(அதாவது சத்தை) தைவம் (அதாவது உயிர்) புணரும்விதமும், புணர்ந்த காலையில் பொய் (அதாவது அசத்து) விட்டுப்போமாறும் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துகின்றது.

(இ-ள்) கண்டதை அன்று அன்று எனக்கண்டு அசத்து ஆய் விட்டு—சுட்டி உணரப்பட்ட பிரபஞ்சத்தை இது சத் தன்று, இது சத்தன்று என ஒவ்வொன்றாகச் சுட்டி அசத் தாகக் கண்டுவிட்டு நீங்கி, ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து- (அவ்வாறு அறிந்து நீங்கியதன்) அறிவின் கண்ணே (சுட்டுணர்விற்கு விடயமாகாத) முதல்வனை ஆராய்ந்து, உணர — (அச்சிவஞானத்தாலே ஆசாரியன் சிவோகம் எனத் தன்னுள்ளே பாவித்துச் ''சிவத்துவமசி'' என்றறி வுறுத்தும் சித்தாந்த மகாவாக்கியப் பொருளை நாடோறும் பயின்று ''சிவோகம்'' எனப் பாவிப்பானாயின், உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு—(அந்தப் பாவகத்தின் விளங்கும்) முதல்வனால் அநாதியே கூடிய பொதுவியல்பையும் அதற்கேதுவாகிய மலமாயா கன்மங் களையும், (உயிர்) தான் விட்டு நீங்கும். அப்படி விட்டு நீங்குமாறு (எதுபோலுமெனின்), ஒண் கருடசானத்தின் தீர் விடம் போல்—ஒள்ளிய கருடதியானத்தில் விளங்கும் கருடனால் அப் பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளு மாறு போலாம் (எ-று).

கருட பாவனையாவது — கருடன், ஆதி பௌதிக கருடன், ஆதி தைவிக கருடன், ஆத்தியான்மிக கருடன் என மூவகைப்படும். அவற்றுள் இவ்வுலகத்தில்

காணப்படும் கருடன் ஆதி பௌதிக் கருடனும், அதற்கு அதிதெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல வைத்துத் தியானம்செய்து கணிக்கப்படும் மந்திரம் ஆதி தைவிக கருடனும், அம் மந்திரத்தினிடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான் மிக கருடனுமாம், அவற்றுள் இங்கே கருடனென்றது கருடனுக் கதி தெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்திற் காணப்படும் மந்திர ரூபமாகிய ஆதி தைவிக கருடனை. அதனைப் பாவித்தலாவது நாள்தோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக அநந்நிய பாவனை செய்து தன் அறிவு அதன் வசமாம்படி உறைத்து நிற்றல். அங்ஙனம் நின்று அம் மந்திரக் கண்கொண்டு பார்ப்பவே அஃது அவ்விஷ வேகத்தை மாற்றுதல் அநுபவமாகலின், அப்பாவனை சிவோகம்பாவனைக்கு உபமானமாகக் கூறப்பட்டது.

புள்ளு விலங்கு மரம் முதலிய சராசரங்களுக்கெல்லாம் அதிதெய்வமும் மந்திரமும் உள்ளன என்றும், சார்ந்த பொருள் வண்ணமாகும் இயல்புடைய ஆன்மா அவற்றுள் எவ்வெம் மந்திரங்களைக் கணிப்பினும் அவ்வம்மந்திர சொரூபமாம் என்றும் சர்வஞானோத்தர முதலிய நூல்கள் விரித்துக் கூறுகின்றன.

## மூன்றும் அதிகரணம்.

## விதியெண்ணு மஞ்செழுத்தே.

(இ-ள்) திருவைந்தெழுத்து விதிப்படி யறிந்து கணிக்கப்படும் (எ-று).

இதில்,

க-வது – தன்னாற் கூறப்படும் பொருள் – ஞானம் பிரகாசித்த பின்னர் ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரித்தல் வேண்டும்.

உ-வது—ஐயப்பாடு—ஞானம் பிரகாசித்த பின்னும் செய்யவேண்டுவதுண்டோ, இல்லையோ.

ங-வது - பிறர் கூறும் பக்கம்—ஆன்மா தன்னை இந்திரியத்தின் வேறெனக் கண்டு பாசத்தினின்றும் நீங்கியபோது பிறவி வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் விளங்கித் தோன்றுவதாகிய ஞானசொரூபமே அரன் கழல் சேறலாகிய சிவானந்தபோகப் பயனைப் பயப்பிக்கும். ஆதலால் ஞானம் பிரகாசித்த பின்னர் செய்யக்கடவதாகிய சாதகம் இல்லை.

ச-வது-மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு, வேம்பினைத் தின்றுகொண்டிருந்த புழு அதைவிட்டுக் கரும்பினைத் தின்னத் தொடங்கிக் கரும்பின் சுவையறிந்த பின்னரும் முன்னிருந்த பழக்க வாதனையால் மீட்டும் அவ் வேம்பினை நோக்குதல் போல், ஆன்மா பாசத்தினின்றும் நீங்கி ஞானம் பிரகாசித்து ஞேயத்தைக் கண்டு எங்குந் தானாகிய நிட்டை கூடிய விடத்தும், தொன்றுதொட்டு வரும் ஏகதேசப் பழக்க விசேடத்தால் அதன் அறிவானது புறத்தே விடயத்திற் சென்று பற்றும். ஆதலால் தன் அறிவை அவ்வாறு செல்லாது மடக்கி, அகத்தே ஒரு குறியின் கண் நிறுத்தி நிட்டைகூடி நிற்கும் முறைமையை அஞ்செழுத்தோதும் முறைமையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க, அது சிவதரிசனத்தை விளக்கி, வாதனை வயத்தால் புறத்திற் சென்று பற்றும் ஏகதேச அறிவைப் பற்றறத் துடைத்துப் பூரணநிலையில் கொண்டுசெல்லும். ஆதலால் ஞானம் பிரகாசித்த பின்னரும் ~~விதிப்படி~~ திருவஞ்செழுத்தை விதிப்படியுச்சரித்தல் இன்றியமையாததாம்.

ரு-வது-இயைபு.

**உதாரண வெண்பா.**

*அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமை கண்டரனை*
*யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்*
*குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி*
*லண்டனாஞ் சேடனு மங்கு.*

இவ்வெண்பா ஸ்ரீபஞ்சாக்கர செபம் எங்ஙனம் வாசனையை நீக்கும் என்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துகின்றது.

(இ-ள்) உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு-ஆன்மா சிவனுக்கு அடிமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கும் முறைமையில் வைத்துக் கண்டு, இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து—தன் உடம்பினகத்தே இதயம், நாபி, புருவநடு என்னும் மூன்றினையும் முறையே ஓமத்தானம் பூசைத்தானம் தியானத்தானமாகக் கருதிக்கொண்டு, புறம்பே ஞானபூசைசெய்யும் முறைப்படி இதயகமலத்தில்சிவனை அவ்வஞ்செழுத்தால்அமைந்ததிருமேனியில் கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்னும் அட்டபுட்பங் கொண்டு அவ்வஞ்செழுத்தாற் பூசை செய்து, அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமஞ்செய்து-குண்டலத்தானமாகிய நாபியில் ஞானவனலை யெழுப்பி அதன்கண் அத் திருவைந்தெழுத்தானே விந்துத் தானத் தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனைநாடி இடைநாடி ஆகிய சுருக்குச் சுருவங்களால் ஓமஞ்செய்து, கோதண்டம் சானிக்கில்-விந்துத்தானமாகிய புருவநடுவில் சிகார யகார வகாரங்கள் முறையே தற்பதப்பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறைமையின் அவ்வஞ்செழுத்தால் சிவோகம் பாவனைசெய்யின், அங்கு ஆம் அண்டன் சேடன் ஆம் — அப்பொழுதே அங்ஙனம் விளங்கித் தோன்றும் முதல்வனுக்குச் (சேட சேடிய பாவத்தால் ஆகற்பாலதாகிய) அடிமையாம் (எ-று).

கோதண்டம்—கோதண்டத்தின்கண் - புருவநடுவில். அண்டன்—அண்டனுக்கு. சேடன்—அடிமை. சுருக்குச் சுருவங்கள் என்பன ஓமத்தில் நெய்யைச் சொரியும் துடுப்புகள்.

பஞ்சாக்கரமாவது தூல பஞ்சாக்கரம் சூக்கும பஞ்சாக்கரம் அதிசூக்கும பஞ்சாக்கரம் என மூவகைப்படும். நகரத்தை முதலாகவுடையது தூலபஞ்சாக்கரமும், சிகரத்தைமுதலாகவுடையது சூக்குமபஞ்சாக்கரமும், நகர மகரங்களிரண்டுமின்றி ஏனையமூன்றெழுத்தும் முன்னும் பின்னுமாய் மாறுதலால், ஐந்தெழுத்தாகிச் சிகரத்தை முதலாக உடையது அதிசூக்கும பஞ்சாக்கரமுமாம். அதிசூக்கும பஞ்சாக்கரம் காரண பஞ்சாக்கரமும் முத்தி பஞ்சாக்கரமுமாம். இதுவே இவ்விடத்திற் கூறியதுமாம்.

சாந்தோக்கிய உபநிடத்திலுள்ள தத்துவமசி மகாவாக்கியம் தற்பதம் துவம்பதம் அசிபதம் என மூன்று பதங்களை யுடையது. அவற்றுள் தற்பதம் இறைவனுடைய தடத்த நிலையாகிய பதித் தன்மையினையும், துவம்பதம் உயிரின் தடத்தநிலையாகிய பசுத்தன்மையினையும், அசிபதம் இவ்விரு பொருள்களின் சொரூப நிலையாகிய ஐக்கியத்தையும் உணர்த்தும். ஆதலால் முத்தி பஞ்சாக்கரம் சித்தாந்த மகாவாக்கியமாவதறிக.

மந்திரங்களை உச்சரித்தல் மானதம், மந்தம், உரையென மூவகைப்படும். மனத்தாற் பாவித்தல் மானதமும், சூக்கும வைகரி வாக்கால் தன் செவிக்குமட்டும் கேட்கும்படி உச்சரித்தல் மந்தமும், தூலவைகரி வாக்கால் தனக்கும் பிறர்க்கும் கேட்கும்படி உச்சரித்தல் உரையுமாம். வாக்கின் கலப்பின்றி தனித்து அறிவு ரூபமாய் நின்று பாவித்தலாகிய சுத்தமானதமே இவ்விடத்தில் வேண்டப்படலால் சூத்திரத்தில் உச்சரிக்க என்னாது ''எண்ணும்'' என்றனர்.

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையில் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றேன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாளு மோதஞ் செழுத்து.

இவ்வெண்பா, மேலே வெண்பாவிற் கூறியவாறு, அஞ்செழுத்தோதுமுறையால் ஒரு குறியின் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் கூடாதென்பதையும், அவ்வாறு கண்டவிடத்து முதல்வன் தன்னிடத்தில் விளங்கித் தோன்றுதலையும் தோன்றியவிடத்துத்தான் அம் முதல் வனுக்கு அடிமையாதலையும் உவமை வாயிலாக உணர்த்தி அதனை வலியுறுத்துகின்றது.

(இ—ள்) இராகுவை இந்துவில் பானுவில் கண் டாங்கு—(அந்தரத்தில் இயங்கிக்கொண்டிருக்கும் நவக் கிரகங்களுள் மற்ற ஏழு கிரகங்களைப் போல் காணப் படாத) இராகு கேதுக்களைக் கிரகண காலத்தில் சந்திர சூரியனிடத்திற்காணுமாறு போல், சிந்தையில் காணில்— (பதிபசுபாசம் என்னும் மூன்றுபொருள்களுள் யான் இதனை அறிந்தேன் இதனை அறிகிலேன் என்னும் உணர்விற்கு விடயமாகக் காணப்படும் பசுபாசம்என்னும் இரண்டினைப்போல் வேறு காணப்படாத பதியாகிய முதல்வனைத் தன்) இதயத்தின் கண்(அஞ்செழுத்தோது முறையால்) காணுமாயின், உந்தவே — (கோலை நட்டுக் கயிற்றைச் சுற்றிக்) கடையவே, காட்டாக்கின் சிவம் தோன்றி விறகினின்றும் தோன்றும் அக்கினிபோல் அம் முதல்வன் அங்கே தோன்றி, கண் ஆம் — அறிவுக்கறி வாய் விளங்கிநிற்பன், தான் கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம் — அப்பொழுது தானும் கனலைச் சேர்ந்த இரும்பு போலத் (தன் சுதந்திரத்தை விட்டு) அம்முதல்வ னுக்கு அடிமையாம், (ஆகலான்), அஞ்செழுத்து ஓது— அவ்வஞ்செழுத்தை விதிப்படி ஒருதலையாேனாதுக. (எ-று)

இராகுவைப்போல் கேதுவும் சாயாக்கிரக மாதலால் கேதுவை வேறு கூறவில்லை. கண் - அறிவு. காட்டாக் கினியின் என்பது காட்டாக்கின் என விகாரமாயிற்று. காட்டம்—விறகு; காட்ட அக்கினி – காட்டாக்கினி – இன் உவம உருபு.

மண்முத ளாளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்ரு ணேர்.

இவ்வெண்பா தத்துவம் முப்பத்தாறுக்கும் அப்பாற் பட்ட முதல்வனை இதயத்துட் கண்டு பூசித்தல் எவ்வாறு கூடும் என்னும் ஆசங்கையை நீக்கி அண்டத்தில் உள்ளன வெல்லாம் பிண்டத்திலும் சூக்குமமாய் அடங்கி யிருத்தலினாலும், அண்டவடிவாகிய முப்பத்தாறு தத்து வங்களும் இதயத்தில் கமலரூபமாய் விளங்குமர் தலாலும், முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்டு அங்ஙனம் வியாபகமாய் வயங்கும் முதல்வனை அவ்விதய கமலத்தின் மேலாகக் கண்டு பூசித்தல் அமையும் என்பதனைத் தெளி வித்தற் பொருட்டு. அவ்விதய கமலத்தின் இயல் புணர்த்தி அதனை வலியுறுத்துகின்றது.

(இ–ள்) நண்ணில்— (இதய கமலத்தின் இயல்பை) உற்றறியப் புகின், மண் முதல் நாளம் ஆம் — நிலம் முதலிய இருபத்துநான்கு தத்துவமும் (நாபியினின்றும் தோன்றும் எட்டு விரல் அளவினதாகிய) நாளவடிவாம், வித்தைமலர் ஆம்—வித்தியா தத்துவமேழும் சுத்த வித்தையுமாகிய எட்டும் எட்டிதழ் வடிவாம், எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூபம் ஆம்— அத் தத்துவங் களுக்கு மேலாகக் கருதப்பட்ட ஈசுரதத்துவமும் சதாசிவ தத்துவமும் அறுபத்துநான்கு கேசரவடிவாம், சத்தி கலை உருவாம் – சத்தி தத்துவம் அக்கேசரங்களுக் குள்ளாகிய

பொகுட்டு வடிவாம், நாதம் அதன் கண்ணும்— சிவதத்து வம் அப்பொகுட்டினுட் காணப்படும்ஐம்பத்தொரு பீசவடி வாம், ஆதலால், அதில் சிவன் தாள் நிலையாம்- அம்முப்பத் தாறு தத்துவமும் ஆசனமாகக்கொண்டு அவற்றின் மேல் நிற்கும் முதல்வன் திருவடிகள் அவ்விதய கமலத் தின் மேல் நிற்கும். நேர்—அதனை அறிந்து பஞ்சாக்கரத் தாற் பூசை செய்வாயாக. (எ-று)

இவ் வெண்பாவினுக்கு அவ்வவ் வாகமம் பற்றி வெவ்வேறு பொருளுரைப்பாரும் உளர்.

வித்தை—வித்தியா தத்துவம் எனப்படும் கலாதியும் சுத்த வித்தையும். கலை அறுபத்து நான்காகலால் அஃது அறுபத்து நான்காகிய கேசரங்களுக்குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகு பெயராயிற்று. ஈசா என்றது ஆகுபெய ராய் அவரால் அதிட்டிக்கப்படும். தத்துவத்தை உணர்த் தும். கலையுரு - கலைக்குள் உரு - கேசரங்களுக்கு நடுவாய் விளங்கும் பொகுட்டு. இதயகமலமானது நாளம் முதலாக மேல்நோக்கித்தோன்றும் உலகத்திற் காணப்படும் கமலம் போலன்றி, கண் முதலாகக் கீழ் நோக்கித் தோன்றும் திவ்விய கமலமாம்.

நாளம்—பூந்தண்டு. பொகுட்டு— தாமரைக் கொட்டை. கேசரம் – தாமரைப் பொகுட்டின் புறத்தே தொங்குவன.

பத்தாஞ் சூத்திரம்

**அவனே தானே யாகிய வந்நெறி**
**யேகனாகி யிறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.**

இதுமுதல் மூன்று சூத்திரங்களும் பயனியல் சூத்தி ரங்களாம். பாசவீடும் (அதாவது பாசத்தை விடுதலும்), சிவப்பேறும் (அதாவது சிவத்தைப் பெறுதலும்) என, இருவகைப்படும். இவ்விரண்டினுள் பாசவீடாகிய பயனைக் கூறுவது இச்சூத்திரம்

(இ-ள்) அவனே=(ஞானக்கண்ணுற் சிந்தை நாடப்பட்ட) அம்முதல்வன், தானேயாகிய அந்நெறி=(உயிராகிய) தானேயாய் நின்ற அப்பெத்த நிலைபோல், ஏகனாகி=(உயிர்) அவனோடு ஒற்றுமைப்பட்டு (அதாவது அவனேயாய் நின்று), இறைபணி நிற்க=அவ்விறைவன் பணியின் வழுவாது நிற்பின், மலமாயை தன்னொடு=ஆணவமலம் மாயாமலம் என்னும் இரண்டனோடு, வல்வினை=வலிய கன்ம மலமும், இன்றே=இல்லையாயொழியும் (எ-று)

முதல்வன் உயிர்தானேயாய் நிற்றலாவது முதல்வன் பொருட்டன்மையால் உயிரின் வேறேயாயினும், பெத்த நிலையில் வேறு காணப்படாது உயிர் யானே கண்டேன் என்னும்படி உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிற்றல்.

உயிர் ஏகனாகி நிற்றலாவது உயிர் தானென வேறு காணப்படாது அம் முதல்வனே யாம்படி ஒற்றுமைப்பட்டு நிற்றல்.

ஏகாரம் தேற்றம்.

ஏகனாகி ஒற்றுமைப் படுதலின் கண் பற்பல சமயவாதி களின் மதம் பற்றித் தோன்றும் ஆசங்கைகளை யெல்லாம் நீக்குதற் பொருட்டு "அவனே தானேயாகிய வந்நெறி" என உவமை யெடுத்துக் காட்டி ஓதினார்.

### இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்

1-வது அவனே தானேயாகிய வந்நெறி யேகனாகி.

2-வது இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

1-வது அரனுடன் ஒன்றாகி நில்.

2-வது உன் தொழிலெல்லாம் அரன் பணியென்று கொள்.

### இச்சூத்திரத்தின் வார்த்திகம்

1-வது ஈண்டு பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்தேகனுகி நிற்க என்றது, அவ்வாறு நிற்கவே யான் எனதென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையுமாகலான்.

2-வது இனி இறைபணி வழுவாது நிற்க என்றது, அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானுகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்.

### இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் ஆறு.

### முதலாம் அதிகரணம்

## அவனே தானேயாகிய வந்நெறி யேகனுகி

(இ-ள்) முதல்வன் (பொருட்டன்மையால் உயிரின் வேருயிருந்தும் பேத்தத்தில் வேறு காணப்படாது உயிரே தான் என்னும்படி) உயிரோடு ஒற்றுமைப்பட்டு நிற்பது போல், உயிர் தானெனை வேறு காணுமாறின்றி அரனேடு ஒற்றுமைப்பட்டு (நிற்றல்வேண்டும்) (எ-று).

இவ்விடத்து அவன் என்பது முதல்வனை; தான் என்பது உயிரை.

இதில்:

க-வது தன்னுற் கூறப்படும் பொருள், உயிர் அரனேடு ஒன்றுகி நிற்றல் வேண்டும்.

உ-வது ஐயப்பாடு, ஞானம் பிரகாசித்து விதிப்படி ஸ்ரீபஞ்சாக்கர சேபம் செய்த பின்னர் உயிர் முதல்வனுடன் ஏகனுய் நிற்றலும் வேண்டுமோ.

ரு-வது பிறர் கூறும் பக்கம், ஒன்பதாஞ் சூத்திரத்திற் கூறியவாறு பிரபஞ்சத்தை அசத்தென்று கண்டவிடத்துத் தோன்றும் ஞானக் கண்ணினுல் சிவதரிசனம் செய்த

பின்னர் வாதனு மலம் நீங்கி ஆன்ம சுத்தி யுண்டாதற்கு ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி உச்சரித்தல் மாத்திரமே யமையும். அதன் மேலும் ஏகனுகி நிற்றல்வேண்டாம்.

௪-வது மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு; ஏகனுகி அப்படி நின்ருலே யன்றி யானெனப்படும் ஞாதாவும், எனதெனப்படும் ஞானமும், அதற்கு விடயமாய் எனதெனப்படும் ஞேயமும் எனப் பகுத்துக் காணும் மயக்க வுணர்விற்கு ஏதுவாகிய மலவாசனை நீங்காது; அது நீங்கினுலன்றி முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தை அநுபவித்தல் கூடாது. ஆதலால், அம்மல வாசனை நீங்கிச் சிவானந்தத்தை அநுபவித்தற்கு முதல்வனேடு ஏகனுய் நிற்றல் வேண்டும்.

ஞாதா — காண்போன், ஞானம்—காட்சி, ஞேயம்— காட்சிப் பொருள்.

ரு-வது இயைபு.

உதாரணவெண்பா

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல்
தானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தாஞ மிறை.

(இ-ள்) நான் அவன் என்று எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல்=யானென்றும் அவனென்றும் பகுத்தறிந்து நிற்பார்க்கும் (யானே என நிற்பார்க்கு முனைத்துத் தோன்றுவது போல்) நாடுகின்ற ஆன்மபோதம் முனைத்துத் தோன்றும், (அதாவது முற்பட்டுத் தோன்றும்.) ஆதலினுல், தான் என ஒன்று இன்றியே தான் அது ஆய்=(அது தோன்றிய விடத்து) தானென ஒரு முதல் காணப்படு மாறின்றித் தான் அவ்வுயிரேயாய்க் காணப்பட்டும், நான் என ஒன்று இல் என்று=யான் என்று ஒரு முதல் காணப்படுமாறில்லை என்றறிந்து, தானே எனும் அவரை=தானே முழுவதுமெனக் காண்பவரை, இல் என்று=அவ்வாறே வேறு

**காணப்படுமாறில்லை யென்று, தன் அடிவைத்து=தனது திருவடி வியாபகத்துள் அடங்கி நிற்கச் செய்து, தான் ஆம் இறை=தானே முழுவதுமாய்க் காணப்பட்டும் நிற்பன் இறைவன்.** (எ-று.)

இதில் நான் என்பதும் அது என்பதும் உயிரை. அவன் என்பதும் தான் என்பதும் இறைவனை. அதுவாய் தானும் இறை எனக் கூட்டுக.

தூல வொளியாகிய கண்ணொளியும் சூக்கும வொளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை பிரித்தறியவாராமையிற் கண்ணொளியாய்க் காணுங்கால் காணுந் தன்மையே முனைத்துத் தோன்றும். ஆதலால் அப்படித் தோன்றும் போதும் விளக்கொளி யிருந்தும் இல்லையாகும். கண்ணொளியாய்க் காணாது விளக்கொளி யாய்க் காணுமிடத்து காணுந் தன்மை முனைத்துத் தோன்ருமல் காட்டுந் தன்மையே முனைத்துத் தோன்றும். ஆதலினால், அப்போது கண்ணொளி யிருந் தும் இல்லையாகும். கண்ணொளி விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப்புகினும் காணுந் தன்மையே முனைத்துத் தோன்றுதலினால் விளக்கொளி திரிவு புலனாகக் காட்சிப் படுவதல்லது தெளிவு புலனாக காட்சிப் பட்டு நிற்பதில்லை. அதுபோல, தூல அறிவாகிய உயிரும் சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் பிரித் தறிய வாராமையின், உயிராய்க் காணுங் காற் சிவமில்லை; சிவமாய்க் காணுங்கால் உயிரில்லை. இரண்டுமாய்க் காணப் புகினும் தற்போதம் முற்பட்டு நிற்றலின் அப்போதும் சிவம் ஐயக் காட்சிக்குப் புலனாய் நிற்ப தல்லது தெளிவு காட்சிக் குப் புலனாய் நிற்குமாறில்லை. ஆகலான் ''நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல் தானெனவொன் றின்றியே தானதுவாய்' என்ருர்.

யாதானு மொன்றைச் சார்ந்து அதன் வடிவாய் நிற்பதன்றித் தனித்து நில்லாத உயிரைத் தனித்து நிற்ப

தாகக் காண்டல் ஐயக் காட்சியாம். சிவம் உயிரோடு கூடிய விடத்தும் சிவமாய் விளங்குவதன்றி உயிராய் விளங்காமையால் அச்சிவமாக உயிரைக் காண்டல் தெளிவுக் காட்சியாம்.

இரண்டாம் அதிகரணம்

**இறைபணிநிற்க மலமாயை தன்னோடு வல்வினை யின்றே**

(இ-ள்) இறை பணியில் வழுவாது நிற்பின் ஆணவ மலம் மாயா மலம் என்னும் இரண்டனோடு வலிய கன்ம மலமும் இல்லையாய் ஒழியும் (எ-று)

இதில்,

1-வது தன்னுற் கூறப்படும் பொருள், மலவாசனை யறுதற்கு ஆன்மா ஏகனுய பின்னரும் இறைபணியில் வழுவாது நிற்றல்வேண்டும்.

2-வது ஐயப்பாடு, ஆன்மா இறைபணியில் நிற்பின் அதன் குணமாகிய அறி விச்சை செயல்கள் கெட்டொழியுமோ, கெடாது நிற்குமோ.

3-வது பிறர் கூறும் பக்கம்; இறைபணியில் நிற்பதனுல் ஆன்மாவின் குணமாகிய அறிவிச்சை செயல்கள் கெட்டொழியு மெனில், குண குணிகட்குத் தம்முள் வேற்றுமை யில்லாமையால், குணம் கெடவே குணியாகிய ஆன்மாவும் கெடும் எனப்பட்டு, முப்பொருளும் நித்தம் என்னும் சைவசித்தாந்தத்தோடு முரணும், கெடாதுநிற்கு மெனில் ஏகனுதல் கூடாது. அன்றியும், இறைபணியில் நிற்பதனுல் ஆன்மா முத்தியிலும் சுதந்திரம் இல்லாதவனுய் பரதந்திரன் எனப்பட்டு, முத்தியும் பந்தமாய் முடியும். ஆதலால் ஏகனுகி நிற்றலே யமையும். அதற்கு மேலும் இறைபணியில் நிற்கக் கடவதின்று.

4-வது மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு; விளக்கொளி யின்றிக் கண்ணொளிக்குக் காட்சியில்லை-ஆதலால்,

கண்ணானது தான் காண்பன வெல்லாம் விளக்கொளியின் செயலே யெனக் கண்டு, தானென வேறு முனைத்து நிற்ப தின்றி, அவ்விளக் கோளியில் அடங்கி நின்ருல், ஏனைய விடயமெதுவும் கண்ணுக்குத் தாக்குதலில்லை. அஃதே போல், ஆன்மாவானது தன்னுடைய இச்சா ஞானக் கிரியைகளியாவும் முதல்வனுடைய இச்சா ஞானக் கிரியைகளின்றித் தொழிற்படா வாதலால், தன்னிடத்து நிகழும் இச்சா ஞானக்கிரியைகளின் நிகழ்ச்சியாவும் முதல் வனது இச்சா ஞானக் கிரியைகளின் நிகழ்ச்சியே எனக் கண்டு அம் முதல்வன் வியாபகத்திற்குள்ளாக அடங்கி, அவன் அருள்வழி நிற்பின் பிரபஞ்சம் சிறிதும் தாக்கமாட் டாது. அது -தாக்கா தொழியவே அது காரணமாக மேலைக்கு வினையேறுதலில்லை. அப்படி அடங்கி அருள் வழி நில்லாத விடத்துப் பிரபஞ்சம் தாக்காமலிராது. அது தாக்குமாயின். அது காரணமாக வரும் விருப்பு வெறுப்பு ஏருமலிராது; விருப்பு வெறுப்பு ஏறுமாயின் அது பிறவிக்கு வித்தாய் மறுபடியும் பேத்த நிலையிற் செலுத்திவிடும். ஆதலால் அவ்வாறு நிகழாவண்ணம் மாயை கன்மங்களின் வாசனை யறுதற்கு இறைபணியில் வழுவாது நிற்றல் வேண்டும். அவ்வாறு நிற்றல் தன் இச்சையின்படி சிவானந்தத்தை யனுபவித்தற் கேதுவாய் இறைபணி யாமாகலின் அது பந்தத்தினுட் படுத்துமாறில்லை. அதனுல் ஆன்மா சுதந்திரனுவனேயன்றி பரதந்திரன் ஆகான்.

இங்கு இறைபணி யேன்றது இறைவனருள்வழி நிற்றலை வழுவாது நிற்றலென்றது சலியாது நிலைபெறுதலை.

5-வது இயைபு, **உதாரணவேண்பா**

**நாமல்ல விந்திரியம் நம்வழியி னல்லவழி**
**நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி**
**னெத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை**
**முற்செய்வினை யுந்தருவான் முன்.**

(இ-ள்) இந்திரியம் நாம் அல்ல = செவிவாய் முதலிய இந்திரியங்கள் முதல்வனது உடைமையாகிய மாயேயம் எனப்படுவனவன்றி ஆன்மாவாகிய யாம் எனப்படுவன வல்ல, நம் வழியின் அல்ல = அவை தொழிற் படுதலும் முதல்வன் வயத்தானன்றி நம் வயத்தானல்ல, வழி நாம் அல்ல = (அவ்விந்திரியங்கள் சத்தம் முதலியவைகளையும் வாக்கு முதலியவைகளையும் விடயித்தற்கு) வழியாகிய தநுகரண புவன போகங்களும் அம் மாயேயமாவனவன்றி யாமாவனவல்ல, நம் வழியின் அல்ல = அவை சேட்டித்தலும் முதல்வன் வயத்தானன்றி நம் வயத்தானல்ல, நாமும் அரனுடைமை = (அவற்றோடு இயைந்து நின்று வினைகளை யீட்டுதற்கும் நுகர்தற்கும் வினை முதலாகிய) யாமும் (ஞானச் செய்திகளை முதல்வன் விளக்கியபோது விளங்கியும் விளக்காத போது விளங்காதும் இவ்வாறு முதல்வனையின்றி அமையுமாறின்மையான்) அம்முதல்வனது உடைமையாவோம், (சுதந்திரராவோ மல்லோம்), ஆம் என்னில் = என்று இங்ஙனம் பசு பாசங்களின் இயல்புகளை உள்ளவாறு உணர்ந்து செய்வன வெல்லாம் அவனருள் வழிநின்று செய்யுஞ் செயலாமெனக் கண்டு கொண்டிருப்பாராயின், இறைபணியார்க்கு எத்தனுவின் நின்றும் வினை இல்லை = அவ்விறைபணியாகிய அடிமைத் திறமுடையார் எவ்வுடம்பினின்று எவ்வினைகளைச் செய்யினும் அவை அவர்க்குப் பந்தமாதலில்லை, முன் செய்வினையும் தருவான் முன் ஆம் = (அவ்வாகாமிய வினையை அவிநாபாவமாய் உடன்கொண்டு வருவதாகிய) பிராரத்த வினையும் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் (உடலூழாய்க்) கழியும். (அப்படிக் கழிவதன்றி ஏனையோர்க்குப் போல அவர்க்காதலில்லை.)

நம் வழியினல்ல என்பதனை வழி நாமல்ல என்பதனோடுங் கூட்டுக. ஆம் என்பதனைத் தருவான் முன் என்பதனோடு சேர்த்துப் பொருளுரைக்க. ஆம் என்பது சொல்லெச்சம். சஞ்சித வினை ஆசாரியன் தீக்கை செய்த மாத்திரையே எரிசேர்ந்த வித்துப் போலக் கெட்டொழிதலின் இங்கு, முற்செய்வினை யென்றது பிராரத்த வினையை யெனக் கொள்க.

இவ்வெண்பாவினுல் இறைபணியில் நிற்பார்க்குப் பிராரத்த வினை முதல்வன் சந்நிதியில் உடலூழாய் ஒழிவ தாகலின் மேலைக்கு வினையேறுவதில்லை யென்பது விளக்கப் பட்டவாறு காண்க.

உதாரணவெண்பா

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனுய்ச்—சார்ந்தடியார்
தாந்தானுய்ச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

(இ-ள்) சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனுதல்=தம்பால் அடைக்கலமெனச் சார்ந்தாரைக் காப்பது உத்தமர் கடமையாக லான், தான் சார்ந்தாரைக் காத்தும்=முதல்வன் தன்னைச் சார்ந்த வரையே பாதுகாப்போனுகியும், சலம் இலன் ஆய்= அது பற்றிக் கோட்டமுடைய னல்லனுய், சார்ந்து அடியார் தான் தானுய்ச் செய்து=தன்னைச் சார்ந்து தன் அடிப்பணியில் நிற்கவல்ல அடியார் தானேயாய் நிற்குமாறு நிறுவி, பிறர் தங்கள் வினை கொடுத்தல்=அவர்க்கு வரும் ஆகாமிய வினையைக் கெடுத்து, அதுசெய்யமாட்டாத பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை அவர்க்குக் கொடுப்பான். அப்படிக் கொடுத்தலினுல், ஆய்ந்து ஆர்முன் செய்வினையும் ஆங்கு=அவ்விரு திறத்தோர்க்கும் உணவாகி நுணுகி வந்து பொருந்தும் பிராரத்த வினையும் அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்க பயனுய் இருவேறு வகைப்படச் செய்வன் (எ-று).

சாராதாரை யொழித்துச் சார்ந்தவரையே காப்பது நடுவு நிலையாகிய தலைமைக் குணமாவதன்றி இழிகுண மன்றேன்பார் தலைவர் கடன் என்ருர், "தன்னை யடைந் தார் வினை தீர்ப்பதன்ருே தலையாயவர் தங்கடனுவதுதான்" "சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க்கலால் நலமிலன்" என்னும் தேவாரத்தானும் இதனை யறிக. உம்மை சிறப் பின் கண் வந்தது. சார்ந்த என்னும் பெயரேச்சம் சார்ந்து என ஈறு திரிந்தது; தான் - முதல்வன். ஆதல்- ஆதலால்

கொடுத்தல்-கொடுத்தலால். ஆய்ந்து-நுணுகி. ஆர்வினை-ஆரும்வினை-கூடுவதாய வினை, பிராரத்த வினை சூக்கும வினையாகலின் அது கூடும் முறைமை யறிதல் அரிதென் பார் "ஆய்ந்தார் முன் செய்வினையும்" என்றார்.

**இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபால்**
**முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை**
**மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே**
**யாயவத னாலுணரு மச்சு.**

(இ-ள்.) இங்குளி=பெருங்காயத்தின் வாசத்தை, வாங்கும்=பெறுகின்ற, கலம்போல=பாத்திரத்தைப் போல், (அதாவது தன் பால் வைத்து எடுக்கப்பட்டொழிந்த பெருங்காயத்தினின்றும் அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாத்திரத்தில் அவ்வாசம் மங்கிப் போய் மெலிதாய் கந்திக்குமாறு போல), ஞானி பால் முன் செய் வினை மாயை மூண்டிடினும்=(நான் அவனென் றெண்ணிச் சிவோகம் பாவனை செய்தறியும்) ஞானிக்கு (நாடும் உளம் உண்டாதற் கூடு மாகையால் அதுபற்றி) அவனிடத்துப் பிராரத்தவினையும், அதற்கிடனாகிய உடம்பு முதலிய மாயேயமும் வாசனை மாத்திரையாய் மெலிதாய் வந்து தாக்குமாயினும், பின் செய்வினை மாயையுடன் நில்லாது=அவ்வழி ஏறுவதாகிய ஆகாமிய வினை (மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுதலின்றித் தனக்குப் பற்றுக்கோடாகிய) மாயேயத்தினோடுங் கெட்டொழியும், அவன் தான் மெய்ப்பொருளே ஆய அதனால் மற்று அச்சு உணரும்,— அந்த ஞானி (பின்னர்ப் பகுத்துணர்வு மிறந்து ஏகனாகி இறை பணி நின்று) சத்தாயுள்ள சிவமேயாகிய வதனால் (ஒரோ வழி அவ்வாதனைப் பற்றிப் பிறழினும் பிறழ வொட்டாத) அவ்வச்சினையே (அதாவது அச்சாணி போன்ற அச் சிவத்தையே) உணர்ந்து நிற்பன். (ஆதலினால் ஒளி இருளைத் துரக்குமாறு போல அவ்வுணர்வு அவ்வாகாமியத்தைத் துரக்கும்) (எ-று).

இங்கு=பெருங்காயம், உளி ஐந்தாம் வேற்றுமை யுருபு. இங்குளி=பெருங்காயத்தின். வாசனை யென்பது வருவிக்கப் பட்டது.

சக்கரத்தைப் பிறழவொட்டாது நிலைத்திருக்கும்படி செய்யும் அச்சுப்போல் வினை வயத்தால் ஞானியைப் பிறழ வொட்டாது நிலைத்திருக்கச் செய்வது மெய்ப்பொருளாத லால் அம்மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ் செய்தார்.

**நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்**
**பண்ணமர மாச்செலுத்தும் பாகரினும்—எண்ணி**
**யரனடி யோர்பவ ரைம்புலனிற் சென்று**
**மவர்திற னீங்கா ரதற்கு.**

(இ-ள்) நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் = அனல் நடுவில் (இருந்தும்) வேவாத நல்ல தவத்தினையுடையார் போலவும் (அதாவது, அங்கித்தம்பன சித்தியை யுடையவர் அக்கினியின் நடுவில் இருப்பினும் தம் திரத்தின் நீங்காதவாறு போலவும்), பண் அமரமா செலுத்தும் பாகரினும் = பண்ணப்படும் கதிகள் பொருந்தக் குதிரையைச் செலுத்தும் பாகரைப் போலவும் (அதாவது, குதிரையை அதன் கதிகளுக் கிசைய வேகமாய்ச் செலுத்துதற் குரிய பாகு நூல் கற்று வல்லார் அக் குதிரையின் வேகத்துட் படினும் தம் திறத்தின் நீங்காதவாறு போலவும்), எண்ணி = (ஐம் புலன்கள் தமக்கு வியாப்பியமாய் அடங்கத் தாம் அவற்றை வியா பித்து மேற்பட்டு நிற்கும் முறையை) ஆராய்ந்து, அரன் அடி ஓர்பவர் = முதல்வன் திருவடியாகிய அச்சினை (இறைபணியி னின்று) உணரவல்லோர், ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறல் நீங்கார் = அவ்வைம் புலனிற் சென்றும் அதனுனே தம் திறல் நீங்குதல் இலர் (எ-று).

நள் அனல் என்பது நண்ணனல் என மருவியது. நீர் கீழ் என்பது கீழ் நீர் என மாறியது போல், அனல் நண் என்பது நண் அனல் என மாறியது. நள் - நடு. பண் - பண்ணப்படும் கதிகள். அதற்கு - அதனுல்.

**சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி**
**னித மித்தல் பாசத்திலின்றிக்—கதமிக்**
**கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி**
**னருகணையார் சத்தணைவா ராங்கு.**

அன்வயம் — சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளிற் காணின், பாசத்தில் இதமித்தலின்றிச் சத்தணைவார் கதமிக் கெரிகதிரின் முன் இருள்போல் ஆங்கு ஏலா அசத்தின் அருகணையார்.

(இ-ள்.) **சதசத்து ஆம் மெய்கண்டான் சத்து அருளின் காணின்**=சத்தோடு கூடிய விடத்துச் சத்தாயும் அசத்தோடு கூடிய விடத்து அசத்தாயும், இவ்வாறு சதசத்தாம் இயல்புடைய தன் உண்மை உணர்ந்தோன் சத்தாகிய முதல்வன் திருவருளினு லல்லது ஒன்றையுங் காணுனுயின் (அதாவது எதையும் அவ்வருள் வழி நின்று காண்பானுயின்), **பாசத்தில் இதமித்தல் இன்றி**= அவ்வழிப் பாசமாகிய அசத்தின் இதஞ் செய்தலின்மையால், **சத்து அணைவார்**=சத்தாகிய அம்முதல்வனைத் தலைப்படுவோர், **கதம் மிக்கு எரிகதிரின் முன் இருள்போல்**=சீற்றமிக்கு எரியா நின்ற ஒளியின் முன் இருள் போல, **ஆங்கு ஏலா அசத்தின் அருகணையார்**=அச்சத்தி னெதிர் தனது சத்தியை ஏற்க மாட்டாத அசத்தாகிய பாசத்தினிடம் எய்துவாரல்லர் (எ-று.)

மெய்கண்டான் காணின், சத்தணைவார் அணையார் என முடிதலால் ஒருமை பன்மை மயக்கமன்மை தெளிக. இதமித்தல் - இதஞ்செய்தல் - பற்றுச் செய்தல். இன்றி - இன்மையான். அருளின் - அருளினுல். எரிக்குக் கோபம் உண்டென்பது ஒப்புமை பற்றி. இதனைச் ''சினம் என்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி'' என்னுந் திருக்குறளாலும், எரி துள்ளினுலென வெகுண்டான்'' என்னும் பெரியபுராணத் தாலும் அறிக.

இவ்வைந்து வெண்பாவாலும் முறையே இறைபணியி னிற்பார்க்குப் பிராரத்தவினை முதல்வன் சந்நிதியில் உட லூழாய் ஒழிவதாகலின் மேலைக்கு வினையேறுமாறில்லை யென்றும், அது செய்வோர் செய்திப் பயன் விளையு மாற்றுற் பெறப்படும் என்றும், செய்வோர் செய்திப் பயனன்றியும் விளைவது வாதனை மாத்திரையே யாகலான் அதுபற்றி வரும் வினை ஞானத்தான் அழி வெய்தும்

என்றும், அந்த ஞானம் வாதனை பற்றிச் சலிக்குமாறில்லை என்றும் அது சலிக்காமைக் கேது இது என்றும் எடுத்துக் காட்டி, அஞ்ஞான கன்மம் பிரவேசியாமையை வலியுறுத்தியவாறு கண்க.

## பதினோராஞ் சூத்திரம்

***காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்***
***காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி***
***ன்யரா வன்பி னரன்கழல் செலுமே.***

இச் சூத்திரம் சிவப்பேருகிய பயனைக் கூறுகின்றது.

(இ-ள்.) **காணுங் கண்ணுக்கு**=காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு, (**காண** =உருவத்தைக் காணுமாறு), **காட்டி** =(பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதற்குக்) காட்டி—(**காணும்**) **உளம் போல்**=(தான் காண்கின்ற) ஆன்மாவைப் போல, (**காணும்**=அறிவிக்க அறிவதாகிய), **உள்ளத்தை**=அவ்வான்மாவுக்கு, **காண** = விடயத்தை யறியுமாறு, **காட்டி** =(முதல்வன் பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று அதனை) அறிவித்து, **காண்டலின்**=தான் அறிந்து வருதலால், (**அதனை** =அவ்வாறு அத்துவிதமாய் நின்று உதவி செய்துவரும் பெருங்கருணையை), **அயரா அன்பின்**=மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பினாலே, **அரன் கழல் செலுமே**= (ஆன்மா) அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும் (எ-று.)

இச்சூத்திரம் காணும் கண்ணுக்குக் (காணக் காட்டிக்) காணும் உளம்போல், காணும் உள்ளத்தைக் காணக் காட்டிக் காண்டலின், (அதனை) அயரா அன்பின் அரன் கழல் செலுமே, என விரித்துரை செய்யப்பட்டது.

வெகுண்டு வேர்த்தான் என்பது வேர்த்து வெகுண்டான் எனப்படுவது போல், காட்டிக் காண்டல் என்பது கண்டு காட்டல் எனப்பட்டது. அயராமைக்குச் செயப்படுபொருள் அதனை யென்றெடுத்துக்கொள்க. அயரா அன்பு-

அயராமையாகுகிய அன்பு. உள்ளத்திற்கு என்பது உள்ளத்தை யென நின்றது உருபு மயக்கம். அறிவிச்சை செயல்களுள் அறிவின் நிகழ்ச்சியாகிய அயராமையும், இச்சையின் நிகழ்ச்சியாகிய அன்பும், செயலின் நிகழ்ச்சி யாகிய அரன் கழல் செல்லுதலும் முறையே காரண காரியங்களாய் அரன் கழல் செல்லுதலாகிய அவ்வொரு பொருள்மேல் ஒருங்கு நிகழுமென்பார் "அயராவன்பின் அரன் கழல் செலுமே" என்றார். இதனால் அறிவு இச்சை செயல் ஆகிய இம் மூன்றும் முதல்வனையே விடயித்தல் அறிக.

## இச்சூத்திரத்தின் விரிவுரை

காணுங் கண்ணுக்குக் காணக் காட்டிக் காணும் உளம் போல் - ஆன்மாவின் துணையின்றி ஒன்றையும் காணமாட்டாத கண் ஓருருவத்தைக் காணுமிடத்து, ஆன்ம போதமானது கண்ணொளி வேறு தான் வேறு என வேறு காணப்படாது உடனாய்க் கலந்து நின்று, கண்ணுக்குக் காட்டிய உருவத்தைக் கண் கண்டது என்றும் கண்ணை அதிட்டித்து நின்ற ஆன்மா கண்டது என்றும் பிரித்து அறியப்படாதபடி இருவகைக் காட்சியும் ஒன்றையொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே நிகழும் முறைமை போல் காணும் உள்ளத்தைக் காணக் காட்டிக் காண்டலின் முதல்வன் துணையின்றி ஒன்றையும் அறியமாட்டாத ஆன்மா ஒரு விடயத்தை யறியுமிடத்து அம் முதல்வனது சிற் சத்தியானது ஆன்ம சிற்சத்தி வேறு தான்வேறு என்று வேறு காணப்படுமாறின்றி உடனாய்க் கலந்து நிற்க, முதல்வனும் ஆன்மாவில் அவ்வாறு விரவிநின்று அறிவித்த விடயத்தை ஆன்மா அறிந்ததென்றும் ஆன்மாவை அதிட்டித்து நின்ற தான் அறிந்தான் என்றும் பிரித்தறியப் படுமாறின்றி இருவகை யறிவும் ஒன்றனையொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயித்துச் செல்லு

மாறு செய்துவரும் இவ்வுபகாரம் பேத்தம் முத்தி இரண்டி னும் ஒரு பெற்றித்தாய உண்மையின், அதனை அயரா அன்பின் அரன் கழல் செலும் - ஏனையவற்றை யெல்லாம் கைவிட்டு முதல்வனிடத்து ஏகனுகிய அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானுய் நின்ற ஆன்மா, முதல்வன் அவ்வாறு அத்துவிதமாய் உடனின்று கருணையான் உபகரித்துவரும் உரிமையை நோக்குந்தோறும் நோக்குந் தோறும் அப்பொருளின்கட் செல்லும் இச்சை அடங்காது மீதூர்தலின் அவ்விச்சையே தானுக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கப் பெறும்.

இதனுல் அறிவிச்சை செயல்கள் மூன்றும் அம் முதல்வனை ஒருங்கே விடயித்து நிற்குமாறு விளக்கி அதீத நிலையின் இயல்பு கூறியவாறும்.

**இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்**

1-வது காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல் காண வுள்ளத்தைக் காட்டிக் காண்டல்.

2-வது அதனை அயராவன்பி னரன்கழல் செலுமே.

**இச்சூத்திரத்தின் சூர்ணிகை**

1-வது ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

2-வது அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவ னிடத்திலே ஐக்யமாய்ப் போவன்.

**இச்சூத்திரத்தின் வார்த்திகம்**

1-வது ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது, இவ்வான்மாக்கள் அவனை யின்றி யமைந்தோன்றையும் விடையியா வாகலான்.

2-வது இனிப் பத்தியினுன் மறவாதேத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது, அவன் அந்நிய

மின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

**இச்சூத்திரத்தின் உதாரண வெண்பா ஆறு.**

**முதலாம் அதிகரணம்.**

**காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போல்**
**காண வுள்ளத்தைக் காட்டிக் காண்டல்.**

(இ-ள்.) காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு உருவத்தைக் காணுமாறு அதனோடு ஒருங்கு கலந்து நின்று காட்டித் தான் காண்கின்ற ஆன்மாவைப் போல், அறிவிக்க அறிவதாகிய அவ்வான்மாவுக்கு விடயத்தை யறியுமாறு அதனோடு ஒருங்கு கலந்து நின்று அறிவித்துத் தான் அறிந்து வருதலால் (எ-று).

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்:—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அனுபவிப்பன்.

உ-வது—ஐயப்பாடு:— முதல்வனிடத்தில் காட்டும் உபகார மாத்திரமேயன்றி, காணும் உபகாரமும் உண்டோ, இல்லையோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்—கண் சடமாதலாலும், காணுதலாகிய பயன் ஆன்மாவுக்கே யாதலாலும், கண் காணும் போது ஆன்மாவும் உடனின்று காணும் என்பது பொருந்தும். ஆன்மா சடமல்லாமையாலும், அறிதலாகிய பயன் ஆன்மாவுக்கேயன்றி முதல்வனுக் கில்லாமையாலும் முதல்வனும் அவற்றின் விடயத்தை உடனின்று அறியும் என்பது பொருந்தாது. அன்றியும், ஆன்மாவானது பேத்தத்தில் உலகப் பொருள்களை அறியுமிடத்து முதல்வன் உடனின்று அறிவன் என்பது பொருந்துமேனினும், முத்தியில் ஆன்மாவுக்கு விடயமாவ தோன்

றில்லாமையால் அவ்விடத்தும் முதல்வன் உடனின்று அறிவன் என்பது பொருந்தாது.

அன்றியும், முதல்வன் காட்டுந் தொழில் மாத்திரம் உடையவனெனில் (5- சூத்திரத்தில்) ''காந்தங்கண்ட பசாசத்தவையே'' என்றபடி விகாரியாகான். உடனின்று காணுந் தொழிலும் உடையவனுயின் ஆன்மாக்கள் போல் பந்தமுற்று விகாரமெய்துவன்.

௬-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— விளக்கொளியானது கண்ணொளியோடு கலந்து உருவத்தினுங் கலந்தால் மட்டும் கண் உருவத்தைக் காணும். அவ்வாறு கலவாதபோது கண் உருவத்தைக் காண மாட்டாது. அதுபோல், முதல்வன் அறிவித்தால் அறியுந் தன்மையுடைய உயிர்களும் முதல்வனுடைய அறிவு உயிராகிய தம்மறிவோடு கலந்து பொருளினும் கலந்து நின்ருல் மட்டும், தம் அறிவு விளங்கிப் பொருளை யறியும். முதல்வனறிவு உயிரின் அறிவோடும் பொருளோடுங் கலவாத போது உயிர்கள் தனித்து ஒன்றை அறியமாட்டா. தனித்து நின்று ஒரு பொருளை அனுபவிக்கவும் மாட்டா. ஆதலால் அறிவு விளங்குதற் பொருட்டு மாத்திரமன்றி விடயத்திற் சென்று பற்றுதற்கும் முதல்வன் உடனிற்றல் பெறப்படும். படுதலும், முதல்வனும் விடயத்தை உணரும் என்பது துணியப்படும்.

பரமுத்தியில் ஆன்மா சிவானந்தத்தை அநுபவித்தலினுலும், அவ்வநுபவம் முதல்வனையின்றிக் கூடாமையாலும், முதல்வனும் அவ்வநுபூதியை அவ்வான்மாவினிடம் தங்கி நின்று உணர்வன். இக் கருத்தையே பற்றிச் சில ஆகமங்கள் முதல்வனும் தன் ஆனந்தத்தை யநுபவிப்பன் என்று கூறும். (இவ்விடத்தில் முதல்வன் அநுபவிப்பன் என்று ஆகமங்கள் கூறுவதின் கருத்து அறிவன் என்பதேயாம். அழுந்தியறிதலே அநுபவித்தல் என்னுஞ் சொல்

லுக்குப் பொருளாதலாலும், அழுந்தியறிதல் ஆன்மாவுக்கே யன்றி முதல்வனுக் கில்லாமையாலும், முதல்வன் ஆனந்த ரூபமே யாயிருத்தலினால் தானே தன்னைப் புதிதாக அனுபவித்தல் வேண்டாமையாலும், முதல்வன் செய்யுஞ் செயலெல்லாம் தன் பொருட்டன்றி ஆன்மாவின் பொருட்டே யாதலினாலும், ஆகமங்கள் முதல்வனும் தன் ஆனந்தத்தை அனுபவிப்பன் என்றதற்கு அறிவன் என்று பொருளுரைப்பதே பொருத்த முடைத்தாம்.)

உயிரும் முதல்வனும் உடனாய் நின்று விடயங்களை யறியினும் உயிர் தன்னாற் சாரப்பட்ட ஒவ்வொரு விடயத்தையே பற்றிப் பலவேறு வகைப்பட அறியும். முதல்வன் எல்லா உயிராலுஞ் சாரப்பட்ட எல்லா விடயங்களையும் ஒரு தன்மையாக அறிவன். ஆதலால் உயிர் போல முதல்வன் பந்த மடையான். ஆதலால் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்பது துணியப்படும்.

ரு-வது—இயைபு.

உதாரணவேண்பா

**ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ**
**தைந்தும்போ னின்றுணரு மாகலா—னைந்தினையு**
**மொன்றொன்றுப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு**
**மொன்றொன்றுப் பார்க்கு முணர்ந்து.**

இதின் அன்வயம்—உள்ளமே அவற்று ஐந்தும்போல் நின்று உணர்வது உணருமாகலான் ஐந்தையும் ஒக்க உணராது, ஐந்தினையும் ஒன்று ஒன்றுய்ப் பார்த்து உணர்வது. ஒன்று எவ்வுலகும் ஒன்று உணர்ந்து பார்க்கும்.

**(இ-ள்.) உள்ளமே அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆகலான்=ஆன்மாவானது சுவை யொளி யூறோசை நாற்றம் என்னும் ஐந்தினும் ஐம்பொறி போல் அதுவதுவாய்ச் செறிந்து நின்று உணர்தற் பாலதனை உணருந் தன்மைத்தாக**

லான், (அதாவது மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐந்து இந்திரியங்களும் தத்தம் விடயங்களை உணருமிடத்து அந்த அந்த இந்திரியம் அதனதன் விடயத்தை அதுவதுவாக நின்றுணர்ந்து பிரிதொரு விடயத்தை உணராதவாறு போல, ஆன்மாவானது இரதம் உருவம் பரிசம் சத்தம் கந்தம் என்னும் ஐந்து விடயங்களை உணருமிடத்து அந்த அந்த விடயமாய் நின்று உணரக்கூடிய ஒவ்வொரு விடயத்தையே உணருந் தன்மை யுடையது. ஆதலால்), ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்று ஒன்றுய்ப் பார்த்து உணர்வது=அவ்வைம்புலன்களையும் ஒருங்கே உணரமாட்டாது, அவ்வைந்தினையும் ஒவ்வொன்றுயறிந் தனுபவிப்பதாம். (அவ்வாறு அனுபவிப்பதனுல் சார்ந்ததன் வண்ணமாயிருக்கும் அவ்வான்மா பல தன்மைப்பட்டு விகாரமடையும்), ஒன்று எவ்வுலகும் ஒன்று உணர்ந்து பார்க்கும்=(அது போலச் சார்ந்ததன் வண்ணமாய்ப் பல திறப்படுதலன்றி) என்றும் ஒரு பெற்றித்தாயிலங்கும் பரம் பொருள் (எல்லா உயிர்களுடைய) எல்லா விடயங்களையும் (பொது வகையால்) ஒருங்கே யுணர்ந்து (அவ்வுயிர்களுடனின்று சிறப்பு வகையாலும்) அறியும். (ஆதலால் உடனின்றறிதலே பற்றி ஆன்மாப் போல் பரம்பொருள் விகாரமடைதலில்லை,) (எ-று)

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினு—னேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனே வுற்று.

(இ-ள்) ஒன்று இணையடிகள் ஏகமாய் நின்றே உணர=முதல்வன் திருவடிகளில் (நானென ஒன்றில்லை, எல்லாம் அம்முதல்வனே யென) ஏகமாகி நின்று கொண்டே (பிராரத்த வினைக்கீடாக வரும் விடயத்தை) உணர்வாராயின், தான் போகமாய் விளைந்த பொற்பினுன்=அது தான் அச்சீவன் முத்தர்க்கு (வினைப்பயனுதலின்றிச்) சிவபோகமாய் விளைகின்ற பொற்பினுலே, உள்குவார் உள்கிற்றை= அவ்வாறு உணர்வாரால் உணரப்படும் விடயத்தை, உள்ளத்தான் உற்றுக் காணுனே=அவ்வுணர்வினிடத்தாற் பொருந்தி அறிந்து தனக்காக்கிக் கொள்ளான் கொல்லோ, ஏகமாய் உள்ளத்தின் கண் ஆனுன்=(பெத்தம் முத்தி இரண்டினும்) அத்துவிதமாய் அவ்

**வறிவின் கண் நீங்காது உடனின்று உணர்த்தியும் உணர்ந்தும் வரும் அம்முதல்வன்** (எ-று.)

நின்றே என்பதில் உள்ள ஏகாரம் நில்லா துணர்தலைப் பிரித்தமையின் பிரிநிலைக்கண் வந்தது. இணையடிகள் - இணையடிகளின் கண். விளையும் போற்பினுன் என்பது தெளிவு பற்றி விளைந்த போற்பினுன் என இறந்த காலத் தாற் கூறப்பட்டது. விளைந்த போற்பினுன் என்றமையிற் போகம் சிவபோகமாதல் பெற்ரும். ஆனுமை - நீங்காமை. உள்ளத்தின் கண் ஆனுன் - உள்ளத்தின் கண் நீங்கா துறைபவன்.

இணையடிகளில் ஏகமாய் நின்று கண்டதோர் பொருளை அந்தக் கருத்தினுற் காண்பார்க்கு அது சிவ போகமாய் விளையுமென்பதை "பெற்ற சிற்றின்பமே பேரின்பமாம்" எனவும், "காணுங் கரணங்களெல்லாம் பேரின்பமெனப், பேணுமடியார்" எனவும் வருவனவற்ருலுணர்க.

இவ்வதிகரணத்தால் பேத்தம் முத்தி இரண்டினும் ஆன்மாவால் விடயிக்கப்படும் விடயங்களை முதல்வன் உடனின்று விடயிப்பன் என்பதும், பேத்தத்தில் முதல்வன் ஆன்மாவாய் நின்று விடயித்தலின் விடயங்கள் முதல்வனுக் கன்றி ஆன்மாவுக்காயின வென்பதும், முத்தியில் ஆன்மா முதல்வனய் நின்று விடயித்தலின் விடயங்கள் ஆன்மாவுக் கன்றி முதல்வனுக்காயின வென்பதும், உடல் பொருளாவி முழுவதும் முதல்வனுடைமை யெனக் கொண்டு முதல்வ னுக்கு அர்ப்பணஞ் செய்து பதார்த்தங்கள் பாராது பரமே பார்த்திருக்கும் சீவன் முத்தர்களால் விடயிக்கப்படுவன யாவும் அவர்களுக்குப் பேரின்பமாய் விளையுமென்பதும், அதனுல் எஞ்சி நின்ற பிராரத்தவினை அவர்களைத் தொடர்த லில்லை யென்பதும் பெற்ரும்.

### இரண்டாம் அதிகரணம்

## அதனை அயராவன்பி னரன்கழல் செலுமே

(இ-ள்) ஆன்மாவானது முதல்வன் அத்துவிதமாய் உடனின்று கருணை மேலீட்டினால் உபகரித்துவரும் உரிமையை நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அவன் கட் செல்லும் இச்சை அடங்காது மீதூர்தலின் அவ் விச்சையே தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கப் பெறும் (எ-று).

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும் பொருள்:— முதல்வன் செய்யும் உபகாரத்தை மறவாமல் அன்பு செய்தால் உயிர் அவன் சீபாதத்தை அடையும்.

உ-வது—ஐயப்பாடு:— உயிர் பத்தி செய்தலினாலேயே முதல்வன் சீபாதத்தை அணைதல் கூடுமோ?

ங-வது—பிறர் கூறும் பக்கம்:— ஒரு பொருளை யறிந்த மாத்திரத்திலேயே அதனிடத்தில் இச்சை நிகழக் கூடுமாயினும், இச்சையுண்டான மாத்திரத்திலேயே அப் பொருளை யடைதல் கூடும் என்பது உலகத்திலில்லை. ஆதலால், ஆன்மா பத்தி மாத்திரையால் முதல்வன் சீபாதத்தை யணைவது கூடாது. பத்தியாவது சீவன் முத்திநிலைக்குச் செய்யப்படும் ஒரு சாதனமேயாம்.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— முதல்வன் உலகத்தார் போலன்றி பெத்தம் முத்தி இரண்டினும் அத்துவிதமாய் உடனின்றுகொண்டு, யார் யார் யாது செய்கின்றாரென்று அறிந்து அவரவர்க்கு அவ்வச் செய்திக் குத் தக்க பயனை அவ்வப் பொழுதே விளைவிப்பவனாகலான், உயிரானது பத்தியினால் மறவாதேத்த அவனது சீபாதத்தை யணைவது திண்ணம். அன்பு பத்தி என்பன

வற்றிற்கு இச்சை மீதூர்தல் என்பது பொருள். பரமுத்தி நிலைக்கண் இச்சை நிகழாதபோது சிவபோகம் அநுபவ மாதலில்லை யாகையால் அவ்விடத்தும் இச்சைமீதூர்தல் உண்டென்ப தறிக. மறவாதேத்துதலென்பது அயரா தருள்வழி நிற்றலை.

டு-வது—இயைபு:—

உதாரணவெண்பா

**அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்**
**கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்—அருட்கண்ணாற்**
**பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோல்**
**நேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.**

(இ-ள்) அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே - (படல விசேடத்தால் ஒளி மழுங்கிய கண்ணிடத்தும், அது நீங்கி ஒளி விளங்கிய கண்ணிடத்தும்வேற்றுமை யின்றி) ஆதித்தன் சமமாய் நின்றாலும், அவ்வாதித்தன் ஒளி மழுங்கிக் காட்சியில்லாத கண்ணுக்கு மாலையிருளே யாய்த் தோன்றுவன். (ஒளி விளங்கிய கண்ணுக்குத் தோன்றுமாறுபோல விளங்கித் தோன்றான்). அதுபோல், ஈசன் பாசத்தார்க்கு இருட் கண்ணே - முதல்வன் (பெத்த ரிடத்தும் முத்தரிடத்தும் அத்துவிதமாய் ஒப்ப நின்றாலும்) பாசத்தானாகிய ஏகதேச அறிவுடைய பேத்தர்க்குப் பாச ஞானமேயாய்த் தோன்றுவன், அருட் கண்ணால் நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் பாசத்தை நீக்கும் - (அப்பாசப் பிணிப்புக்கு ஏதுவாகிய அபக்குவம் நீங்கித் தனது) திருவருட் பார்வையாற் பத்தி செய்து தன்னை அறிதற்குரிய பக்குவமுடையராயினார்க்குப் பாசத்தானாகிய அவ்வேக தேச அறிவை மாற்றிப் பூரண அறிவு விரியச்செய்து அவ ரெதிரே விளங்கித் தோன்றுவன், (எதுபோலு மெனின்), பகல் அலர்த்தும் தாமரைபோல் - தனது கிரணம் தீண்டிப் பக்குவ மெய்திய தாமரை மலருக்கு முன்னுள்ளதாகிய

கூம்புதலை மாற்றித் தன்போல் ஆயிரமிதழும் அலரச் செய்யும் ஆயிரங்கதிர்ப்பரிதி போலும் (எ-று).

அல்லும், காணுரும், பாசமும், பகலும் ஆகு பெயர். தோற்றுவன் என்பது சொல்லெச்சம்.

இதனுல் முதல்வன் பெத்தம் முத்தி இரண்டினும் திரிபின்றி ஒரு பெற்றித்தாகிய அத்துவிதமாய் நின்று உபகரிப்பானுயின் பெத்தநிலையினும் அம் முதல்வன் புலப் படல் வேண்டாமோ என்னும் ஆசங்கையை அகற்றியவா ருயிற்று.

**உதாரணவெண்பா**

**மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்**
**மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்**
**வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்**
**சலிப்பில் விகாரியலன் ருன்.**

(இ-ள்) **மன்னும் இருளை** = கண்ணின்கண் நிலை பெற்றுள்ள தாகிய இருளை, **மதி துரந்தவாறு** = பூருவபக்கத்துச் சந்திரன் உடனுய் நின்று முறை முறையான் உந்தித் தள்ளிய வாறு போல, **அன்பின் மன்னும் அரனே** = ஆன்மாவைத் தனது திருவடியினிடத் துச் சேர்த்துக் கொள்வதன்கண் உள்ளதாகிய இச்சை மிகுதியான் அவ்வான்மாவின்கண் அனுதி முதல் அத்துவிதமாய் நிலைபெறும் முதல்வன்ருனே, **மலம் துரந்து** = அவ்வான்மாவின்கண் நிலைபெற்ற ஆணவமலத்தைச் சோபான முறையில் உந்தித் தள்ளி, **காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம் செய்வான் செய்தல் சலிப்பு இல்** = காந்தக்கல் இரும்பைத் தன்னிடத்தே ஈர்த்துக் கொண்டு தன் வசமாய்ப் பற்றச் செய்தல் போலத் தனது திருவடியின்கண் சேர்த்துத் தன் வசமாய்ப் பற்றிக்கொண்டு நிற்கும்படி பண்ணுதல் அவனுக்கு ஒருபோதும் சலித் தொழிதலில்லை, **விகாரி அலன் தான்** = (அவ்வாறு சலியாது செய்யுமாயினும் அதனுல்) விகாரியா வானல்லன் [எல்லாத் தொழிலும் தனது சந்நிதியின்கண் சத்தி சங்கற்பமாத்திரையாய்ப் பரமின்றி, அதாவது, இலேசாக விளை யாட்டைப் போலச் செய்யும்] அம்முதல்வன் (எ-று).

ஏகாரம் மலத்தைத் துரத்துதற்குக் காரணம் அவ்வன் பெனப் படும் இச்சை யன்றிப் பிறிதில்லை யென்பதுணர்த்தி நிற்றலில் பிரிநிலை, வசஞ் செய்வான் செய்தல் - வசஞ் செய்தல்போல் செய்தல். வசமாதல் - பற்றி விடாமை. செய்வானது சலிப்பின்மை செய்கை மேலேற்றப்பட்டது.

இதனுல் முத்தி நிலையில் ஆன்மாவினது அன்பு நிகழு மாறும் அது முதல்வன் அன்பையின்றி அமையாமையும் விளக்கியவாருயிற்று.

உதாரணவெண்பா

நசித்தொன்றி னுள்ள நசித்தலா லொன்ரு
நசித்திலதே லொன்ருவதில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்ரு மீசன் கழல்.

[இ-ள்] நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்ரு= [மேலை வெண்பாக்க ளிரண்டினுங் கூறியவாறே, பூரண அறிவு விளங்கி ஆன்மா முதல்வன் வசமாய் ஒன்றுபட்டுக் கூடுங்கால் பண்டை ஏகதேச வறிவு கெட்டுக் கூடுமோ, கெடாது கூடுமோ என்பார்க்கு] கெட்டுக் கூடுமெனின் குணங்கெடவே குணியாகிய ஆன்மாவும் கெடுதலால் கூடமாட்டாது, நசித்திலதேல் ஒன்ருவ தில்லை=கெடாது கூடுமெனின் ஏகதேச அறிவு கெடாதபோது வியாபகப் பொருள் விளங்குதலின்மையால் கூடுமாறில்லை=[மற் றெங்ஙனம் கூடுமாறெனின்], மலம் நசித்து உளம் அப்பு அணைந்த உப்பின் அணைந்து சேடமாம்=ஏகதேச அறிவைச் செய்யும் ஆண வம் கன்மம் மாயை என்னும் மலங்கள் மாத்திரமே கெட்டொழிய, ஆன்மா தண்ணீரைச் சேர்ந்த உப்புப் போல் முதல்வன் திருவடி யைத் தலைப்பட்டுச் சேடமாம், ஈசன் கழல் கப்பு இன்ரும்=முதல் வன் திருவடி அவ்வான்மாவை விட்டுக் கவர்த்தலின்றி இயைந்து நிற்குமாகலான் [எ-று]

ஒன்ருது என்பதில் துவ்விகுதி விகாரத்தாற் ருெக்கு ஒன்ரு என நின்றது. மலம் நசித்து அணைந்து - மலம்

நசிக்க அதனால் அணைந்து. தன்னிடத்துள்ள கடின குணம் நீங்கி அப்பினைச் சேர்ந்தொன்றாகிய உப்பு ஆன்மா மலம் நசித்து முதல்வனைச் சேர்ந்து ஒன்றுபடுதல் மாத்திரைக்கு உவமையாயிற்று. ஒரு பொருள் தன் பொருட்டன்றி மற்றோர் பொருளின் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்தரமின்றி நிற்குமாயின் அவ்வாறு நிற்கும் பொருள் அம் மற்றோர் பொருளுக்குச் சேடமாம். இவ்விடத்தில், அவனருளாலல்லது ஒன்றையுஞ் செய்யானாய்த் தன்னை விட்டுக் கவர்தலின்றி இயைந்து நிற்கும் ஈசன் கழலையே அறிந்து இச்சித்து அநுபவித்தலாகிய முதல்வனது வழிபாட்டின் பொருட்டு உரிமையெய்திய ஆன்மா முதல்வனுக்குச் சேடமாயினவா றுணர்க. ஏனைய பசு பாசங்களும் முதல்வனுக்குச் சேடமேயாமாயினும் அவை பொது இயல்பு பற்றிய சேடமாவதல்லது சிறப்பியல்பு பற்றிய சேடம் ஆகாமையின், இதனை வேறெடுத்தோதினர்.

இதனால் முத்திநிலையில் ஆன்மாவினது கிரியை நிகழுமாறும், அது முதல்வனது கிரியையை இன்றி அமையாமையும் கூறப்பட்டன.

### உதாரணவெண்பா

**பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்**
**தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்**
**மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு**
**மலத்திரித்துச் செல்லும் வரத்து.**

(இ-ள்.) பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு=சூரியன் முன்பு முகிற்படலத்துண் மறைந்து (ஒளி விளங்காமலிருந்து), ஒடுங்கி=(அம்முகிற்படலம் சிறிது நீங்கிய விடத்துத் தனது) ஒளி சுருக்கமாய்ச் சிறிதே விளங்கி, போய் அகல எங்கும் தன்வாளே ஆம் தன்மை போல்=அம்முகிற்படலத்தை வாயு துரப்ப அதனால் அது சத்தி மடங்கி விட்டு நீங்கியபோது அவ்வொளி தானே

எங்கணும் விரிவாய் விளங்கு முறைமை போல, உள்ளம் முன் மலத்தின் மறைந்து=ஆன்மாவும் முன்பு மலத்தில் மறைப்புண்டு (அறிவு சிறிதும் விளங்கப் பெருமற் கேவலப்பட்டு), மற்று (ஒடுங்கி) உலகை உண்ணும்=(இறைவன் கூட்டியருளிய கருவிகளைக் கொண்டு) தன்னறிவு ஏகதேசமாய்ச் சிறிதே விளங்கிப் பிரபஞ்ச விடயத்தை அறிந்து அதில் அழுந்தும், மலத்து இரித்து (எங்குமாய்) வாள் வரத்துச் செல்லும்=பின்பு முதல்வன் திருவருள் அம்மலசத்தியைக் கெடுத்தடக்கிய வழி அவ்வறிவே பூரணமாய் விளங்கிக் கப்பின்றி அம்முதல்வன் திருவடியைத் தலைப்பட்டு அந்த நேயத்தில் அழுந்தும் (எ-று.)

ஒடுங்கி எனவும் எங்குமாம் எனவும் உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டி யுரை செய்யப்பட்டது. இது விளங்குதல் மாத்திரைக்கு ஏகதேச வுவமை என்பார் உலகை யுண்ணும், வரத்துச் செல்லும் என வேற்றுமையும் உடன் கூறினர். ஏகாரம் தேற்றம். முன்வாள் என்றதில் வாள் பிரகாசத்தையுடைய அறிவைக் குறித்தலால் ஆகுபெயர். இரித்து என்பது செயவெனெச்சத்திரிபு. மலத்து இரித்து - மலத்தை இரிக்க. வரத்துச் செல்லும் - விளங்கிச் செல்லும். மலம் நசித்தலாவது தனது மறைத்தற்சத்தி மடங்கிக் கீழ்ப்படுதல் மாத்திரையேயாம். இதனை இதற் கோதிய உவமையாலறிக.

இதனுல் நித்தமாகிய மலத்திற்கு நாசமுண்டாகுமாறும், அது நசித்தவழி அறிவு பூரணமாய் விளங்கி வியாபகத்தை யடையுமாறும் உவமைமேல் வைத்து விளக்கப்பட்டமை காண்க.

## பன்னிரண்டாஞ் சூத்திரம்

***செம்மலர் நோன்ருள் சேர லொட்டா***
***வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ***
***மாலற நேய மலிந்தவர் வேடமு***
***மாலயந் தானு மரனெனத் தொழுமே.***

(இ-ள்) செம்மலர் நோன்றாள்=(அயரா வன்பின் அரன் கழலடைந்த சீவன் முத்தன்) செங்கமல மலர் போல் விரிந்து விளங்கிய முதல்வனது சீபாதத்தை, சேரல் ஒட்டா=அணைதற்கு உடம்படாது அயர்த்தலைச் செய்விக்கும், அம்மலம் கழீஇ=அவ்வியல்பினை யுடைய மும்மல வழுக்கை ஞான நீராற் கழுவி, அன்பரொடு மரீஇ=(தன்னைப் போல அயராவன்பின் அரன்கழலடைந்த) மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி, மால் அற நேயம் மலிந்தவர் வேடமும்=(அவ்வாறு கழுவப்பட்டு) மலமயக்கு நீங்க (அன்பரொடு கூடி) அன்பு மிக்குடைய அவரது திருவேடத்தையும், ஆலயம் தானும்=சிவாலயத்தையும், அரன் எனத் தொழுமே=முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வான் (எ-று).

நோன்றாள் - அடியார்களைத் தாங்குந் திருவடி. நோன்றல் - பொறுத்தல்.

இதனால் சீவன் முத்தற்கு ஒரு சமயத்தில் அறிவிச்சை செயல்கள் புறத்துச் செல்லுமாயின், மலத்தை நீக்குதலிலேயே அறிவும், அன்பரோடு மருவுவதிலேயே இச்சையும், திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனன வழிபடுதலிலேயே செயலும் நிகழும் என்பதை யுணர்த்தி, அவ்வாறு உணர்த்து முறைமையில் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாமல் அதீதமாய் அயரா அன்பினால் அணைந்து வழிபட நின்ற முதல்வனை வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டும்படி அன்பர் வேடத்திலும் ஆலயத்திலும் தெரியக்கண்டு வழிபடும் முறைமை உணர்த்தியவாறும்.

**இச்சூத்திரத்தின் அதிகரணங்கள்**

1-வது செம்மலர் நோன்றாள் சேரலொட்டா அம்மலங் கழீஇ.

2-வது அன்பரொடு மரீஇ.

3-வது மாலற நேயமலிந்தவர் வேடமு மாலயந் தானும் அரனெனத் தொழுமே.

### இச்சூத்திரத்தின் சூர்ணிகை

1. மும்மலங்களையுங் களைக.
2. சிவஞானிகளுடனே கூடுக.
3. சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனெனவே தேறி வழிபடுக.
4. வழிபடாமை ஒழிக.

### இச்சூத்திரத்தின் வார்த்திகம்

1. ஈண்டு ஆணவம் மாயை காமிய மென்னும் மலங்களைக் களைக என்றது, அவை தாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்து மாகலான்.

2. இனிச் சிவபத்தர்களோடிணங்குக என்றது - அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவ ராகலான்.

3. இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழி படுக என்றது - அவன் மற்றிவ் விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாத விடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

4. இனி இவ்விடங்களின் வழிபடுக என்றது - நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.

### இச்சூத்திரத்தின் உதாரண வெண்பாக்கள் எட்டு.

### முதலாம் அதிகரணம்

## செம்மலர் நோன்றாள் சேரலோட்டா அம்மலங் கழீஇ

(இ-ள்.) செங்கமல மலர்போல் விரிந்து விளங்கிய முதல்வனது சீபாதத்தை அணைதற்கு உடம்படாது அயர்த்தலைச் செய்விக்கும் அவ்வியல்பினையுடைய மும்மல வழுக்கை ஞான நீராற் கழுவி (எ-று.)

இதில்,

க-வது—தன்னாற் கூறப்படும்பொருள்:—சீவன் முத்தர் மும்மலங்களைக் களைதல் வேண்டும்.

உ-வது—ஐயப்பாடு:— சீவன் முத்தரான பிறகு மலங்களைக் களைதலும் வேண்டுமோ?

ந-வது—பிறர் கூறும் பக்கம்:— ஏகனாகி இறைபணி நின்று உண்மை ஞானத்தை யடைந்தார்க்கு மலமாயை தன்னோடு வலிய கன்ம மலமும் இல்லாதொழிதலினால், அம்மலங்களால் மறுபடியும் செய்யக்கடவ தொன்றில்லை. ஆதலால் சீவன் முத்தர் மும்மலங்களைக் களைய வேண்டுவதில்லை.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— ஏகனாகி இறைபணி நின்று உண்மை ஞானத்தை யடைந்தார்க்கு எல்லா மலங்களும் கழிந்தொழியினும், உடம்புள்ளளவும் பிராரத்த வினையொன்று மாத்திரம் அவர் உடம்பை யோட்டி நிற்கும். அவ்வினை, பெருங்காயம் வைத்திருந்த பாண்டத்தில் பெருங்காயம் இல்லாத பொழுதும் அதன் வாசனை தங்கியிருந்தும் அப்பாண்டத்தைத் தாக்குதல் போல், ஒவ்வொரு சமயத்தில் முற்பழக்க விசேடத்தால் வந்து தாக்கும். அப்படித் தாக்குங்கால், செய்கையின் வழியாகவே அப்பிராரத்த வினையின் அனுபவமும் நிகழுமாதலினாலும், அச் செய்கையும் விருப்பு வெறுப்புக்களின் வழியாக நிகழுமாதலாலும், விருப்பு வெறுப்புக்கள் உண்டாகவே பரமே பார்த்திருந்த சீவன் முத்தர்க்கு நிலம் முதல் மாயா தத்துவ மீறாகிய ஏகதேசப் பொருள் காட்சிப்படும். அவை காட்சிப்படவே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீத உணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாம். இவ்வாறு விருப்பு வெறுப்புக்களைச் செய்யும் கன்ம மலமும், பிரபஞ்சப் பொருளைத் தோற்றுவிக்கும் மாயாமலமும், விபரீத உணர்வு மேம்படச் செய்யும் ஆணவமலமும் ஆகிய

மூன்றும் பிராரத்த வினை காரணமாக நிட்டையினின்றும் நீங்கிய சமயம் பார்த்து வந்து கூடும். ஆதலால் சீவன் முத்தர்களும் மும்மலங்களைக் களைதல்வேண்டும்.

ங-வது—இயைபு,

**உதாரணவெண்பா**

**புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமும்**
**மண்முதல் மாயைகாண் மாயையுங்—கண்ணிய**
**வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்றும்**
**மெய்ஞ்ஞானிக் காகா விடு.**

(இ-ள்) புண்ணிய பாவம் பொருந்தும் **இக்கான்மியமும்**= புண்ணிய பாவங்களைப் பயக்கும் விருப்பு வெறுப்புக்களாய்ப் பொருந்துகின்ற இக்கன்ம மலமும், **மண்முதல் மாயைகாண் (இம்) மாயையும்**= மண்முதல் மாயாதத்துவ மீருய்க் காணப்படுகின்ற இம்மாயா மலமும், **கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இவ்வாணவமும்**=சுட்டியறிவதாகிய விபரீத உணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும், **இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு**=என்னும் மும்மலங்களும் மெய்ஞ்ஞானியாகிய உனக்கு ஆகா. ஆதலால் இவற்றை விடுத்தொழிக (எ-று).

முன்னர்க் கன்மமலமும், கன்மமலங் காரணமாக மாயாமலமும், மாயாமலங் காரணமாக ஆணவ மலமும் வந்து கூடும் என்பதை யறிவித்தற் பொருட்டு இச் செய்யுளில் முதலில் கன்மமலத்தையும், இரண்டாவது மாயாமலத்தையும், மூன்ருவது ஆணவமலத்தையும் கூறிஞர்.

## இரண்டாம் அதிகரணம்

## அன்பரோடு மரீஇ

(இ-ள்) தன்னைப்போல் அயரா வன்பின் அரன் கழலடைந்த மெய்ஞ்ஞானிகளோடு கலந்து கூடி (எ-று).

இதில்,

க-வது—தன்னுற் கூறப்படும் பொருள்:— சீவன் முத்தர்கள் சிவஞானிகளோடு கூடி வாழ்தல் வேண்டும்.

உ-வது—ஐயப்பாடு:— சீவன் முத்தர்கள் சிவஞானிக ளல்லாதாரோடு இணங்கலாமோ இணங்கலாகாதோ.

௩-வது—பிறர் கூறும் பக்கம்:— இவர் உறவினர் இவர் பகையினர் என்பதின்றி எல்லா வுயிரையும் ஒக்க பார்க்கும் சிவஞானிகளுக்குச் சில ரிடத்தில் விருப்பும் சில ரிடத்தில் வெறுப்புஞ் செய்து கொண்டு பகுத்து நிற்றல் தகுதியன்று. ஆதலால் அவர்கள் சிவஞானிகளோடு மாத்திரமன்றி அல்லாதாரோடும் ஒப்பக்கூடி வாழலாம். அல்லது சிவபத்தியில்லாதாரோடு இணங்காதிருத்தலே. போதுமானது. சிவபக்தர்களோடு இணங்கியிருத்தல் அனுவசியமாம்.

௪-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— சிவஞானிகள் எல்லா உயிரையும் ஒக்கப் பார்த்தலாவது அவைபடும் துன்பங்கண்ட விடத்து வேற்றுமை பாராட்டாது அதற்கு இரங்கல் மாத்திரமே யன்றி எல்லா ரோடும் இணங்கி வாழ்தலன்று வீட்டுணர்வை நிலைபெறச் செய்யும் சிவபக்தர்களோடிணங்கினலன்றி, தொன்று தொட்டுப் பயின்றுவந்த மற்றையோர் இணக்கம் நீங்காது. ஆதலால் சீவன் முத்தர்களுக்கும் சிவஞானிகளின் இணக்கம் இன்றியமையாததாம்.

௫-வது—இயைபு.

உதாரணவேண்பா

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

(இ-ள்.) தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இலார் தம்திறத்துச் சேர்வை அற=(மும்மலங்களும் நீங்கி, முதல் வன் அத்துவிதமாய் நின்று காட்டியும் கண்டும் உபகரித்துவரும் பெருங் கருணையை மறவாது கடைப்பிடிக்கும் மெய்த்தவராயினர்)

அதனை மறக்குமாறு செய்து (ஞானக் கண்ணை இழப்பித்துத் தீ நெறிக்கட் கொண்டு சென்று) மலங்களாகுய பிறவிக் குழியில் வீழ்த்துத் துயருறுத்தும் அன்பிலார் கூற்றிலே தொன்று தொட்டுப் பயின்று வந்த சேர்ச்சி அறும்படி, பத்தர் இனத்துப் பித்து ஆய்ப்பான் உணர்விஞல் உணரும் மெய்த்தவரை =(அம்மறவியை மாற்றி ஞானக்கண் விளக்கிப் பிறவிக் குழியினின்றும் எடுத்து நன்னெறிக்கட் செலுத்தி வாழ்விக்கும்] சிவபக்தர் கூற்றிலே பேரன்புடையராய்[அவ்வன்பு சார்பாக விளங்குவதாகிய]சிவஞானக் கண்ணுல் அந்நிலே கடைப்பிடித்து உணரப்பெற்ற மெய்த்தவரை, வினை மேவா =[எல்லா அநர்த்தங்கட்கும் மூலமாய் வரும்]பிராரத்த வினைகள் வாதியா (எ-று).

மலம் என்பது மலங்களிஞலாய பிறவிக் குழியை யுணர்த்தும் ஆகு பெயர். சிறப்பு இலார் - அன்பில்லார், எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அது சிறப்பு எனப்பட்டது. சேர்வை - சேர்ச்சி. பித்து என்பது பேரன்பை. இதனைக் கண்ணப்பர் செய்கையாலறிக. ஏனைத் தவங்களெல்லாம் மெய்யாதலின்றி மல நடையாய்ப் போதலிஞல் பரனுணர்விஞலுணருந் தவமொன்றே மெய்த் தவம் எனப்பட்டது. வினையால் பகா அஃறிணைப் பெயர். சிவபத்தரிடத்து அன்பு செய்து அவரது மனம் வாக்குக் காயங்களின் வழிநிற்பார்க்கு உலகிய லுணர்வு மாறிச் சிவாநுபூதி யுணர்வே மேம்பட்டு நிகழும். அதஞல் உடம்பு உள்ளளவும் நிற்பனவாகிய பிராரத்த வினைகள் அவர்க்கு அநுபவமாகாமையால் அவரை வாதிக்கமாட்டா. அவை வாதியா தொழியவே சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை பற்றறக் கழியும் என்பார் "அறப்பித்து பத்தரினத்தாய்ப் பரனுணர்விஞலுணரு மெய்த்தவரை மேவாவினை" என்ருர். எனவே வீட்டுணர்வை நிலைபெறச் செய்யும் சிவபக்தர்களோ டிணங்கிஞலன்றித் தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சிறப்பிலாரிணக்கம் அருதாகலான் அவ்

விணக்கம் சீவன் முத்தர்க்கு இன்றியமையாத தென்பது வலியுறுத்தியவாறுயிற்று.

### மூன்றும் அதிகரணம்

**மாலற நேய மலிந்தவர் வேடமும்**
**ஆலயந் தானு மரனெனத் தொழுமே.**

(இ-ள்) சீவன் முத்தன் தனது மலமயக்கம் நீங்க முதல்வனிடத்தில் அன்பு மீதூரப்பெற்ற சிவஞானிகளின் திருவேடத்தையும் சிவாலயத்தையும் முதல்வன் எனவே கண்டு வழிபட்டு வாழ்வான் (எ-று.)

இதில்,

க-வது—தன்ஞற் கூறப்படும் பொருள்:—சீவன்முத்தர் சிவஞானிகளின் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே தேறி வழிபடுவர்.

உ-வது—ஐயப்பாடு:— சீவன் முத்தர்க்கும் திருவேட வழிபாடும் சிவாலய வழிபாடும் வேண்டுமோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்:— சீவன் முத்தர்க்கு யாவும் சிவமாகத் தோன்றுதலால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வேறு பிரித்து வழிபடவேண்டுவதின்று.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— முதல்வன் எங்கணும் வியாபகமாய் நிற்பினும், இவ்விரண் டிடத்து மாத்திரமே தயிரில் நெய்போல் விளங்கித் தோன்றி ஏனைய விடயங்களில் பாலில் நெய்போல் வெளிப்படாது நிற்றலாலும், காமக் கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீக ரித்து இன்பஞ் செய்யுமாறு போல, பத்தரது திருவேடமும் ஆலயமும் மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரத் தாலேயே வசீகரித்து இன்பஞ் செய்தலாலும் சீவன்முத்தர் இவ்விரண்டையும் சிவனெனவே கண்டு வழிபடுவர்.

ஞ-வது—இயைபு,

உதாரண வெண்பா

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பால் நிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றும் பதி.

(இ-ள்) பதி=வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொருள், தன் உணர வேண்டி=உலகத்தார் தன்னை யறியும்படி கருணை செய்து, தனது உருவைத் தான் கொடுத்து=தனது வேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய தனது வடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்து (அவர்களிடமாக நின்று அங்கங்கே அறிவு விளக்குதலாலும்), தன் உணர=அவர் தம்மைச் சோகம் பாவனையால் உணரச் செய்தலாலும், தன்னுள் இருத்தலால்=அவரை ஒரு குறியின் கண் நிறுத்தித் தனது வியாபகத்திற்குள்ளாக இருத்துதலாலும், தன் உணரும் நேசத்தர் தம் பால் ததி நெய்போல் நிகழும்=(குறியிறந்து நின்று) தன்னை உள்ளவாறுணரும் அன்பாளராகிய அவரிடத்தில் தயிரிலுள்ள நெய்போல் விளங்கித் தோன்றும், பாசத்தார்க்கு இன்று ஆம்=பாசக்கட்டு உடையார்க்கு (இவ்வியல் பில்லாமையால்) அவரிடத்தில் விளங்கித் தோன்றாது பாலில் உள்ள நெய்போல் விளங்காது நிற்கும் (எ-று).

தன் உருவைக் கொடுத்து, தன்னுணரச் செய்து, தன்னுளிருத்தலால் ததி நெய்போல் நிகழும் எனக் கூட்டி முடிக்க. இன்று - விளங்காது. தன் உணர - தன்னை உணரச் செய்து. இதில் செய்து என்பது சொல்லெச்சம். இருத்தலால் - இருத்துதலால்.

உதாரண வெண்பா

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானுன் றனதுவாய்ந் தோன்றுனே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

இவ்வெண்பா, முற்கூறிய இயல்புகளையுடைய சங்கம வேடத்தினிடத்து இறைவன் எக்காலத்தும் பிரகாசமாய் நிற்றலால் சீவன் முத்தர்கள் அவ்வேடத்தை வழிபடுக வென்றது பொருந்துமாயினும், மந்திர சாந்நித்திய முண்டானபோது இறைவன் விளங்கியும் அது இல்லாத போது விளங்காமலும் இருக்கும் சிவலிங்கமாதி மூர்த்திகளை யுடைய சிவாலயங்களையும் சீவன் முத்தர்கள் வழிபடல் வேண்டுமென்பது எங்ஙனம் பொருந்தும் என்னும் ஆசங் கையை நீக்குவதாகும்.

(இ-ள்.) காட்டத்தில் அங்கி வேறு உண்டல் போல்=விறகில் உள்ள தீயானது கடைந்தபோது வேருய் விளங்கும். (கடையாத போது விளங்குவதன்று.) அதுபோல், கண்ட உருத்தான் அது ஆய் அன்று ஆனன்=(உயிர்களுக்குப் புத்திமுத்தி யளித்தற் பொருட்டுக்) காணப்பட்ட தாவரத்தின் அருவுருவின்கண் கலப்பி னல் அதுவே தானய், அது வன்றி வேறு பொருளுமாம் இயல் புடைய முதல்வன், (காணர்க்கு) கண்டது ஒரு மந்திரத்தால் நின்று அங்கு உளதாம்=(அதுவே தானய்க் காணமாட்டாதார்க் குத் தம்மால்) அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்தியம் (இல்லாத போது அங்கே விளங்காது நின்று) உள்ளபோது விளங்கித் தோன்றும் பொருளாம், அதுதான் ஆய்க்காணுந்தவர்க்கு அதுதான் ஆய்த்தோன்றுனே=(அவ்வாறன்றி) அதுவே தானய்க் காணப் பெறும் உண்மைத் தவம் உடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றமாட்டானே (எ-று).

காணர்க்கு என்பது சொல்லெச்சம். உண்டல் விளங்கித் தோன்றல்.

## நான்காவது ஒழிபு அதிகரணம்.

### வழிபடாமை யோழிக—இது சூர்ணிகை

(இ-ள்) சீவன் முத்தர்கள் சிவஞானிகளின் திரு வேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே வழிபடும் வழிபாட்டைக் கைவிடா திருக்கக்கடவர்.

இவ்வதிகரணம் முன் மூன்று அதிகரணங்களினுல் உண்டான ஆசங்கையை நீக்குதற்கு அவற்றின் சேடமா யெழுந்ததனுல் ஒழிபதிகரணம் என்னப் பெற்றது.

இதில்,

க-வது—தன்னுற் கூறப்படும் பொருள்:— சீவன் முத்தர்கள் முன் மூன்று அதிகரணங்களிற் கூறிய மலங் களைக் களைதல், சிவஞானிகளோடு கூடிவாழ்தல், சிவஞானிகளின் திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவ னெனவே வழிபடுதல என்னும் இவற்றை எக்காலத்தும் கைவிடாதிருத்தல் வேண்டும்.

உ-வது—ஐயப்பாடு:— இம்மூன்றினையும் சீவன் முத்தர்கள் அநுட்டிக்கவேண்டிய விதிகளாக வைத்துக் கூறுதல் பொருந்துமோ பொருந்தாதோ.

ங-வது—பிறர் கூறும் பக்கம்:— இம் மூன்றும் சீவன் முத்தரிடத்தில் இயல்பாகவே அமைந்து கிடத்தலால், முன் மூன்று அதிகரணங்களிற் கூறியனவே சாலும். அவற்றை மீண்டும் அவர்கள் கைக்கோள்ளவேண்டிய விதியாக வைத்துக் கூறுதல் பயனுடைத்தன்று.

ச-வது—மறுத்துரைக்குஞ் சித்தாந்தத் துணிபு:— (உடம்போடு கூடி நின்று, உடம்பு வேறு தான் வேறு என்று பிரிக்க வாராதபடி உடம்பே தானுய் நின்ற உயிர், தத்துவ சோதனையின்கண் அவ்வுடம்பாகாது அதின் வேறுமாயினுற் போல) உயிர்க்குயிராகிய முதல்வன் சித்து சடம் என்னும் இருவகைப் பொருள்களினும் இரண்டறக் கலந்து அவையே தானுயும், அவற்றின் வேறுமாயும் நிற்பன். ஆதலால், முதல்வன் அவையே தானுய் நிற்றலைக் காணும் காட்சியினுல் அவனிடத்திற் செய்ய நேரிடும் வழிபாடு, அவன் அவற்றிற்கு வேருய் நிற்றலைக் காணுங் காட்சியினுல் நேர்படமாட்டாது. ஆதலால் முதல்வன்

அவைகளுக்கு வேருய் நிற்றலைக் காணுங் காட்சியின் கண்ணும் சீவன் முத்தர்கள் மலங்களைக் களைதலும், சிவஞானிகளோடு கூடிவாழ்தலும், சிவஞானிகளின் திரு வேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே வழிபடுதலு மாகிய இவற்றைக் கைவிடாது கடைப்பிடித்தல் வேண்டு மென மீண்டும் வற்புறுத்தி விதித்தல் பொருத்தமுடைத்தே.

ஞ-வது—இயைபு.

உதாரண வெண்பா

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் ருெழு.

(இ-ள்.) கண்டார்க்கு=(முதல்வன் சடம் சித்து என்னும் இருவகைப் பொருள்களிடத்தும் நிற்கும் நிலைமை) அறியப் பெற் ருேர்க்கு, அது இது என்றது அல்லான்=(கண்ணும் சூரியனும் கலந்து நிற்பினும் கண்வேறு சூரியன் வேறு காணப்படுமாறு போல) அதுவும் இதுவும் எனப் பிரித்து ஓதப்படும் பேதநிலைமை யுடைய வனு மல்லனுய், அது (என்றது அல்லான்)=(உடலும் உயிரும் பிரிக்கமுடியாதவாறு போல) எல்லாம் முதல்வனே என்று சொல்லப் படும் அபேத நிலைமை யுடையவனு மல்லனுய், அது இது என்றதை யும் அல்லான்=(குணமும் குணியும் ஒருவாறு பேதமும் ஒருவாறு அபேதமு மாதல் போல்) முதல்வனுகிய இப்பொருள் என்று பிரிக்க முடியாமை பற்றிக் கூறப்படும் பேதாபேத நிலைமை யுடையவனு மல்லனுய், பொது வதனில் அத்துவிதம் ஆதல், அகண்டமும் தைவமே=(உயிரின் அறிவும் கண்ணொளியும் கலப்பால் அபேத மாயும், பொருளின் தன்மையால் பேதமாயும், உடனுகைச் செல்லுந் தன்மையால் பேதாபேதமாயும் நிற்குமாறு போல) பேதம் அபேதம் பேதாபேதம் ஆகிய மூன்றுக்கும் பொதுவாய் அம் மூன்றுமாகிய அத்துவித நிலைமையுடையானுய் நிற்பன். ஆதலால், எல்லாப் பொருளும் அவன் வடிவமேயாம், (ஆயினும்) அத்துவிதி அன்பின்

**தொழு =(அப்பொருள்கள் எல்லாவற்றுள்ளும்) கண்டமாத்திரத்தே அன்பு உண்டாகும் இடம் எதுவோ அவ்விடத்தில் அத்துவித சித்தாந்தத்தைப் பெற்றுடைய நீ முதல்வனை வழிபடுவாயாக (எ-று).**

இதனால் பசுவின் உடல் முழுதும் வியாபித்திருப்பினும் காணப்படாத பால், கன்றை நினைத்தமாத்திரத்தில் மடியின்கண்ணே விம்மி யொழுகுமாறு போல், எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் அன்பர் பொருட்டுத் திருக்கோயிலினுள்ளிருக்கும் திருமேனியினிடமாக வெளிப்பட்டருளுவன் என்பதை யுணர்த்தி, எங்குமா யெல்லாமாயிருக்கு மிறைவனை எந்த விடத்திலும் வழிபடலாமெனவிதித்தல் பொருந்தாதோ என்னும் ஆசங்கையை அகற்றியவாரும். (அதாவது சிவாலயத்திற் செய்யும் வழிபாடே அனுபவமான அத்துவித ஞானத்தை நிலைக்கச் செய்யும் என்பதை யுணர்த்தியவாரும்.)

முதலடியில் உள்ள அது இது என்பது அதுவும் இதுவும் என்னும் பொருளைத் தருதலால் உம்மைத் தொகை. இரண்டாமடியிலுள்ள அது இது என்பது அதுவாகிய இது என்னும் பொருளைத் தருதலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

அல்லான் என்னும் குறிப்பு வினைமுற்று. அல்லானாய் என்னும் பொருளைத் தரும் குறிப்பு வினை யெச்சமாய் நின்று அத்துவிதமாதல் என்பதைக் கொண்டு முடிந்தது.

என்றதையும் அல்லான் - என்றதுவும் அல்லனாய். பொதுவதனில் - பொதுவினில். ஆதல் - ஆதலால். தைவம் - தேவனதுடைமை. அன்பிற்றொழு - அன்பு விளையும் இடத்தில் தொழு.

உதாரண வெண்பா

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றெழு.

(இ-ள்) வினையால் அசத்து விளைதலான் = பிராரத்தவினை வாசனையால் பிரபஞ்சத் தோற்றம் மேம்படலால், வினை தீரினன்றி ஞானம் விளையா = பிராரத்த வினை வாசனை யொழிந்தாலன்றி (மெய்யுணர்வின் பயனாகிய) சிவத்தோற்றம் மேம்படுதல் உண்டா காது, (ஆதலால்) வினைதீர = அப்பிராரத்தவினை பற்றறக் கழியும் பொருட்டு, ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும் = அம்மெய் யுணர் வுடையாரை நாடி வழிபடவே (அப்பிராரத்த வினை நீங்கி) மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும், ஆனத்தால் = ஆனதனால், அன்பின் தொழு = (அவரை) அன்பினால் வழிபடுவாயாக (எ-று).

உதாரண வெண்பா

தன்னை யறிவித்துத் தான்றானச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னாச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

(இ-ள்) தன்னையறிவித்து = (தன் உண்மை யறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பல வழியாலும்) அதனை அறிவித்து, தான் = (மிகவும் எளிய) அவ்வுயிரை, தான் ஆச் செய்தானை = (மிகவும் அரிய பொருளாகிய) தானாகும் வண்ணம் செய்தளித்த குருமூர்த்தியின் பேருதவியை, பின்னர் மறத்தல் = அதன்பின் மறத்தல், பிழையலது = (இதற்குமுன் அறியாமையால் மறந்த குற்றம்போல்) ஒழியக் கூடிய குற்றமன்று, (ஆதலாலும்), முன்னவன் தானே தானச் செய்தும் = முதல்வன் அவ்வாறு உயிராகிய தன்னைப் பதியாகிய தானேயாகச் செய்தாலும், தைவம் என்றும் தைவமே = (இதுகாறும் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனது உபகாரத்தை அவாவி அடிமையாயிருந்த) உயிர் எக்காலத்தும் (அதாவது சீவத் தன்மை நீங்கிச் சிவத்தன்மை யடைந்தவிடத்தும்

அவ்வாறு அடிமையேயாம், [ஆதலாலும்], மானே=(ஞானசிரிய ஞகிய) அப் பெரியோனை, தொழுகை வலி=வழி படுதலே அவ் வுயிர்க்கு வலியாவது (எ-று).

ஆன்மா முத்தியிலும் சிவத்தின் அடிமை யென்பதை "மீளா வடிமை யுமக்கே யாளாய்" என்னும் சுந்தரமூர்த்தி நாயஞர் தேவாரத்தாலும், "சங்கவெண் குழையோர் காதிற் கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கோய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகிஞேமே" என்னும் திருத்தாண்டகத்தாலும் அறிக.

முன்னவனே என்பதில் ஏகாரம் அசை நிலை. மற்ற ஏகாரங்கள் தேற்றம்.

தைவம் - தேவனதுடைமை.
மான் - மஹான் - பெரியோன்.
மானே தொழுகை - அப்பெரியோனை வழிபடுதலே.
தாஞச் செய்தும் - தாஞகச் செய்தாலும்.
வலிதருவதனை வலியென்றுபசரித்தார்.

இவ்வெண்பாவினுல் சீவன் முத்தர்க்கும் சிவதேசிகன் வழிபாடு அவசியமென்ப துணர்த்தியவாரும்.

உதாரண வெண்பா

**சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்**
**பவமின்ருங் கண்வா சகத்திற்—சிவமுண்டா**
**மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா**
**லின்றிந்நூன் மும்மை மலர்க்கு.**

**(இ-ள்) சிவம் என்னும் அந்தர்=(சீவன் என்னும் தன்மையி னின்றும் நீங்கிச்) சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை யுடைய மாணவகனே, ஒன்றும் இரண்டும் மலத் தார்க்கு=ஒன்றும் இரண்டும் ஆய மலங்களை யுடையவர்க்கு (அதாவது ஆணவ மலம் ஒன்றே யுடைய விஞ்ஞான கலருக்கும் ஆணவமும் கன்மமும் ஆகிய இருமலமுடைய பிரளயாகலருக்**

(கும்)=சிந்தை நேர் நோக்க கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம்=(முதல்வன்) முறையே அறிவின் கண் நின்று அருட்பார்வையில் நோக்குதலாலும், தேவகுருவாய் முன் நின்று செய்யும் திருநோக்கம் (பரிசம்) வாக்கு எனப்படும் தீக்கையாலும் பிறவிக்கு ஏதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கும், [ஆதலால்], மும்மை மலர்க்கு இங்கு ஒண்குருவால் இன்று இந்நூல்=மும்மலமுடைய சகலர்க்கே உரித்து இவ்வுலகத்து அனுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச் சிவஞான போத நூல் (எ-று).

அந்தம் - வேதாந்தம். அந்ததரம் - சித்தாந்தம். சித்தாந்தத்தைப் பெற்ற பெரியோர் பெருமை கூறுவார் "**சிவமென்னும்** அந்ததர" என்றார். சிவம் என்னும் - சிவம் எனப்படும்.

சிந்தை - அறிவின் கண். நேர் நோக்குதலாவது முன்னிருந்த மருட்பார்வையைப் போக்கி அருட்பார்வை யால் நோக்குதல். நோக்க - நோக்குதலால். இந்நூல் அநுபவமுடைய தேசிகனுலன்றி விளங்கா தென்பார் ஒண் குருவால் என்றார்.

இன்று இந்நூல் - "இக் காலத்து உரைக்கப்பட்ட நூல்" எனினும் அமையும்.

மும்மை - மூன்று. மும்மை மலத்தார் சகலர்.

**சிவஞானபோதம் உரை முற்றிற்று.**

---

